

# தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள்

செ. இராசு

தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

# தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள்

## INSCRIPTIONS OF THE MARATHAS OF THANJAVUR


பதிப்பாசிரியர்

புலவர் செ. இராசு, எம். ஏ.
இணைப்பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்





தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| | பதிப்புப் பற்றிய குறிப்பு | VI |
| | ஒலிபெயர்ப்புப் பற்றிய குறிப்பு | VII |
| | நன்றியுரை | VIII |
| | பதிப்பாசிரியர் உரை | IX |
| | ஆங்கிலச் சுருக்கம் (ENGLISH SUMMARY) | XXXVI |
| | **கல்வெட்டுக்கள்** | |
| 1 | தஞ்சாவூர் விட்டோபா கோயில் கல்வெட்டு | 1 |
| 2 | தஞ்சாவூர் கீழ நரசிங்கப்பெருமாள் கோயில் கல்வெட்டு | 3 |
| 3 | தஞ்சாவூர் கோதண்டராமர் கோயில் கல்வெட்டு | 5 |
| 4 | தஞ்சாவூர் தண்ணீர்த் தொட்டிக் கல்வெட்டு | 10 |
| 5-7 | தஞ்சாவூர் மணிகர்ணிகேசுவரர் கோயில் கல்வெட்டுக்கள் | 12 |
| 8 | தஞ்சாவூர் அரண்மனைக் கல்வெட்டு | 16 |
| 9-10 | தஞ்சாவூர் வரதராசப்பெருமாள் கோயில் கல்வெட்டுக்கள் | 17 |
| 11 | தஞ்சாவூர் அண்ணா சத்திரக் கல்வெட்டு | 20 |
| 12 | தஞ்சாவூர் பசார் இராமசாமி கோயில் கல்வெட்டு | 22 |
| 13 | தஞ்சாவூர் இராசகோபாலசுவாமி கோயில் கல்வெட்டு | 23 |
| 14 | தஞ்சாவூர் எல்லையம்மன் கோயில் கல்வெட்டு | 25 |
| 15 | தஞ்சாவூர் விசுவநாதர் கோயில் கல்வெட்டு | 28 |
| 16 | தஞ்சாவூர் காளிதேவிகோயில் கல்வெட்டு | 31 |
| 17-18 | தஞ்சாவூர் சங்கரநாராயணர் கோயில் கல்வெட்டுக்கள் | 35 |
| 19 | தஞ்சாவூர் துவாதசிக் கட்டளைச் சத்திரக் கல்வெட்டு | 39 |
| 20 | தஞ்சாவூர் அரசினர் இராசா மிராசுதார் மருத்துவமனைக் கல்வெட்டு | 41 |
| 21 | தஞ்சாவூர் லோகநாதேசுவரர் மடப்பள்ளிக் கல்வெட்டு | 43 |
| 22-34 | தஞ்சாவூர் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் | 45 |
| 35 | தஞ்சாவூர் சுப்பிரமணியர் கோயில் கல்வெட்டு | 55 |
| 36 | தஞ்சாவூர் காசிவிசுவநாதர் கோயில் கல்வெட்டு | 56 |
| 37 | தஞ்சாவூர் விசயராமர் கோயில் கல்வெட்டு | 58 |
| 38-39 | தஞ்சாவூர் பங்காரு காமாட்சியம்மன் கோயில் கல்வெட்டுக்கள் | 60 |
| 40 | தஞ்சாவூர் கிருட்டிணன் கோயில் கல்வெட்டு | 63 |
| 41-48 | தஞ்சாவூர் கைலாச மகால் கல்வெட்டுக்கள் | 65 |
| 49-52 | தஞ்சாவூர் வடவாற்றங்கரைக் கல்வெட்டுக்கள் | 73 |
| 53 | மோர்கர் பாவா பள்ளிப்படைக் கல்வெட்டு | 77 |
| 54 | சிதானந்தீசுவரர் கோயில் கல்வெட்டு | 79 |
| 55-57 | சுவார்ட்சு பாதிரியார் கல்வெட்டுக்கள் | 81 |
| 58 | பாக்கியநாத பிள்ளை கல்லறைக் கல்வெட்டு | 88 |
| 59 | கோலாஃப் ஐயர் கல்லறைக் கல்வெட்டு | 91 |

| | | |
|---|---|---|
| 60 | ஜே. எஃப். கீர்ன்சு கல்லறைக் கல்வெட்டு | 93 |
| 61-62 | தாவீது மரபினர் கல்லறைக் கல்வெட்டுக்கள் | 95 |
| 63 | மகர்நோன்புச்சாவடிக் குளக் கல்வெட்டு | 97 |
| 64-67 | வெண்ணாற்றங்கரைக் கல்வெட்டுக்கள் | 99 |
| 68-69 | பாலங்களில் உள்ள கல்வெட்டுக்கள் | 106 |
| 70-74 | திருவையாறு கல்வெட்டுக்கள் | 110 |
| 75 | திருப்பூந்துருத்திக் கல்வெட்டு | 115 |
| 76 | செந்தலைக் கல்வெட்டு | 118 |
| 77 | பூதலூர்க் கல்வெட்டு | 120 |
| 78-79 | சூரக்கோட்டைக் கல்வெட்டுக்கள் | 122 |
| 80-81 | மாரியம்மன் கோயில் கல்வெட்டுக்கள் | 125 |
| 82-88 | ஒரத்தநாடு முத்தம்மாள்புரம் சத்திரக் கல்வெட்டுக்கள் | 131 |
| 89 | பட்டுக்கோட்டைக் கல்வெட்டு | 144 |
| 90 | சாளுவநாயக்கன்பட்டினம் மனோராக் கல்வெட்டு | 146 |
| 91 | கீழ்க்கோயில்பட்டு பூலோகநாதர் கோயில் கல்வெட்டு | 150 |
| 92-93 | பட்டிக்குடிக் கல்வெட்டுக்கள் | 153 |
| 94-95 | நீடாமங்கலம் சத்திரக் கல்வெட்டுக்கள் | 156 |
| 96 | கும்பகோணம் சங்கரமடத்துக் கல்வெட்டு | 158 |
| 97 | திருவாரூர்த் தியாகராசர் கோயில் கல்வெட்டு | 160 |
| 98-99 | கோட்டூர்க் கல்வெட்டுக்கள் | 162 |
| 100 | மகாதேவப்பட்டணக் கல்வெட்டு | 165 |
| 101 | செம்பனார் கோயில் கல்வெட்டு | 167 |
| 102 | எழுமகளூர்க் கல்வெட்டு | 169 |
| 103 | திருப்பாம்புரம் கல்வெட்டு | 171 |
| 104-109 | வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டுக்கள் | 173 |
| 110 | ஆச்சாள்புரம் சிவலோகத் தியாக ஈசுவரர் கோயில் கல்வெட்டு | 178 |
| 111 | தி நவெண்காடு சுவேதாரண்ய ஈசுவரர் கோயில் கல்வெட்டு | 181 |
| 112 | கீழ்வேளூர்க் கல்வெட்டு | 183 |
| 113 | நாகூர்த் தர்காக் கல்வெட்டு | 184 |
| 114-116 | வேதாரணியம் கல்வெட்டுக்கள் | 186 |
| 117 | மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயி நாகாபரணப் பொறிப்பு | 189 |
| 118 | திருவரங்கம் அரங்கநாதர் கோயில் பதக்கப் பொறிப்பு | 190 |
| 119 | மம்மங்கலம் கல்வெட்டு | 191 |
| 120 | சிதம்பரம் கல்வெட்டு | 193 |
| 121 | சினந்தல் கல்வெட்டு | 194 |
| 122 | பெருமாபாளையம் கல்வெட்டு | 196 |

| | | |
|---|---|---|
| 123 | சிறுவலூர்க் கல்வெட்டு | 198 |
| 124 | வில்லியனூர் திருக்காமீசுவரர் கோயில் கல்வெட்டு | 200 |

## செப்பேடுகள்

| | | |
|---|---|---|
| I-VI | திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடுகள் | 202 |
| VII | தீபாம்பாள்புரம் வன்மீகநாதர் கோயில் செப்பேடு | 222 |
| VIII | கும்பகோணம் நாகேசுவரசுவாமி கோயில் செப்பேடு | 225 |
| IX | தஞ்சாவூர் மேலவாயில் சுப்பிரமணியர் கோயில் செப்பேடு | 229 |
| X | திருமக்கோட்டைச் செப்பேடு | 233 |
| | அருஞ்சொல் விளக்கம் | 237 |
| | கருவிநூற் பட்டியல் | 248 |
| | சொல்லடைவு | 252 |

### பதிப்புரிமை பற்றிய குறிப்பு :

இப்பதிப்பில் 76, 89, 92, 93, 98, 99, 102, 110, 113, 118 - 123 எண்ணுள்ள கல்வெட்டுக்கள் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை, முதன்மைக் கல்வெட்டாய்வாய்ளர் அலுவலகத்தில் (Office of the Chief Epigraphist, Archaeological Survey of India, Mysore) பெற்ற ஒளிப்படங்கள், கல்வெட்டுப்படிகள் ஆகியவைகளைக் கொண்டே பதிப்பிக்கப்பெற்றுள்ளன. இவற்றின் பதிப்புரிமை அத்துறையையே சேரும்.

### செப்பேடுகள் :

தங்களிடமுள்ள செப்பேடுகளைப் படி எடுத்துக்கொள்ள அன்புடன் உதவியோர் :

திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் தவத்திரு சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள்.

ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை.

துணை ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, தஞ்சை.

நிருவாக அலுவலர், நாகேசுரன் கோயில், கும்பகோணம்.

நிருவாக அலுவலர், வன்மீகநாதர் கோயில், தீபாம்பாள்புரம்.

நிருவாக அலுவலர், ஞானபுரீசுவரர் கோயில், திருமக்கோட்டை.

அர்ச்சகர், சுப்பிரமணியர் கோயில், மேற்கு அலங்கம், தஞ்சை.

### கல்வெட்டுக்கள் :

தஞ்சாவூர் அரண்மனை தேவஸ்தான ஆட்சிக்குட்பட்ட அனைத்துக் கோயில்களிலும் கல்வெட்டுக்களைப் படி எடுக்க அனுமதியளித்த பரம்பரை அறங்காவலர் அமரர் சத்திரபதி ராஜாராம் ராஜே சாகேப் அவர்களுக்கும், அவர்தம் குடும்பத்தினருக்கும் கல்வெட்டியல் துறையின் நன்றி உரித்தாகுக.

# ஒலி பெயர்ப்புப் பற்றிய குறிப்பு

தமிழ்க் கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் பயின்றுவரும் சில சமஸ்கிருதச் சொற்களிலும், தொடர்களிலும் வந்துள்ள வல்லின வர்க்க எழுத்துக்களும், வேறு சில் எழுத்துக்களும் அச்சக வசதிக்காகக் கீழ்க்கண்டவாறு எண் குறியீடுகள் கொண்ட தமிழ் எழுத்துக்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| 𑌗 | (ga) | — $க_3$ |
| 𑌘 | (gha) | — $க_4$ |
| 𑌠 | (tha) | — $ட_2$ |
| 𑌦 | (da) | — $த_3$ |
| 𑌧 | (dha) | — $த_4$ |
| 𑌫 | (pha) | — $ப_2$ |
| 𑌬 | (ba) | — $ப_3$ |
| 𑌭 | (bha) | — $ப_4$ |
| 𑌸 | (sa) | — $ச_0$ |

கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் எகர ஏகாரங்கள் குறில் நெடில் வேறுபாடு இன்றி ஒரே எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. இப்பதிப்பில் நெடில் தேவைப்படும் இடங்களில் நெடில் எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. ஒகர ஓகாரங்களுக்கும் இதேமுறை பின்பற்றப்பட்டுள்ளது.

# நன்றியுரை

இந்நூலைத் தொகுத்துப் பதிப்பிக்கும் பணிக்குப் பல்வேறு பெருமக்கள் அருந்துணை நல்கியுள்ளனர்.

இவ்வாய்வுப் பணியை மேற்கொள்ள அனுமதியளித்து வசதிகள் செய்தளித்த தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம், பதிவாளர் பேராசிரியர் இர. ஆலாலசுந்தரம்,

பணி முன்னேற்றம் அடைய அவ்வப்போது ஊக்கமூட்டிய சுவடிப்புலத் தலைவர் பேராசிரியர் கே. எம். வேங்கடராமையா,

விளக்கவுரைகளில் தேவையான திருத்தங்கள் செய்து, பதிப்பைச் செம்மைப் படுத்தத் தக்க அறிவுரைகள் வழங்கி, ஆங்கிலச் சுருக்கமும் தயாரித்தளித்த கல்வெட்டியல் துறைத் தலைவர் முனைவர் எ. சுப்பராயலு,

ஒளிப்படங்கள், வரைபடம் ஆகியன தயாரிக்கத் துணை புரிந்த கல்வெட்டியல் துறை ஆய்வாளர் கா. ராஜன், மராத்திக் கல்வெட்டுக்களைத் தமிழ்ப்படுத்திய பண்டிதர் கணபதிராவ், பண்டிதர் டி. ஆர். பீமராவ்,

கல்வெட்டுப்படிகள், ஒளிப்படங்கள் கொடுத்து உதவிய இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை கல்வெட்டுப் பிரிவு இயக்குநர் முனைவர் கே. வி. ரமேஷ், முதன்மைக் கல்வெட்டாய்வாளர் முனைவர் மாதவகட்டி,

தஞ்சை மராட்டிய அரசகுடும்பத்தைச் சேர்ந்த சத்திரபதி ராஜாராம் ராஜா சாகேப், சத்திரபதி துளசேந்திர ராஜா, கிருஷ்ணசாமி மாடிக்,

சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. ஏ. பஞ்சநதம், பிற அலுவலர்களான எம். சீராளன், புலவர். வி. சொக்கலிங்கம், நா. விசுவநாதம், என். சீனிவாசன், பி. பெருமாள், எம். பாலசுப்பிரமணியம், கா. பத்மநாபன், என். சுப்பிரமணி, அரிய கையெழுத்துச் சுவடித்துறை ஆய்வாளர்கள் முனைவர் ம. சா. அறிவுடை நம்பி, முனைவர் ம. இராசேந்திரன், இராக. விவேகானந்த கோபால்,

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை பதிவு அலுவலர் ஸ்ரீதரன், கல்வெட்டாய்வாளர் அ. இராசேந்திரன், ஓலைச்சுவடித்துறை புலவர் ப. வெ. நாகராசன், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகக் காப்பாட்சியர், கல்வெட்டுக்களைப் படி எடுத்துதவிய வல்லம் க. கருப்புசாமி, வேண்டிய திருத்தங்கள் செய்துதவிய பதிப்புத் துறையினர்,

அச்சுப் படிவங்களை அழகிய முறையில் அச்சிட்டுதவிய தொன் போஸ்கோ அச்சகத்தினர், புகைப்படக் கலைஞர் தஞ்சை செயபாலன்

ஆகிய அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

செ. இராசு

# பதிப்பாசிரியர் உரை

## தஞ்சை மராட்டியர்

பீசப்பூர் சுல்தானின் ஆதரவுடன் பெங்களூர், ஆரணி, செஞ்சி ஆகிய இடங்களில் சாகீர்களைப் பெற்று அனுபவித்த வீரமிக்க மராட்டியப் படைத்தலைவர்கள் தஞ்சை, மதுரை நாயக்கர்களின் இடையே ஏற்பட்ட பூசலில் தலையிட்டுச் சந்தர்ப்ப வசத்தால் தஞ்சைப் பகுதிக்கு அரசராக அமர்ந்தனர்.

1676 ஆம் ஆண்டு சாசி போன்சலேயின் இரண்டாம் மகனும், மாவீரர் மராட்டிய சிவாசியின் பெரியம்மா மகனுமான முதலாம் ஏகோசி[1] தஞ்சையில் மராட்டியர் ஆட்சியை நிறுவினார். 1855 வரை 180 ஆண்டுகள் பதின்மூன்று மராட்டிய அரசர்கள் தஞ்சையில் ஆட்சி புரிந்தனர்.[2]

1855 வரை ஆட்சிபுரிந்த தஞ்சை மராட்டிய மன்னர்கள் தொடர்புடைய கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், 1855க்குப் பின்னர் தஞ்சை மராட்டிய மன்னர் குடும்பத்தினர் தொடர்புடைய கல்வெட்டுக்களும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

---

1. ஏகோசி, மாவீரர் சிவாசியின் சிற்றன்னை மகன் என்ற கருத்தும் உண்டு. ஆனால் தஞ்சை ஆவணங்கள் ஏகோசியையே மூத்த மனைவியின் மகன் என்று கூறும்.
2. தஞ்சை மராட்டியர் வமிசாவளி :



## மராட்டியர் ஆவணங்கள்-கல்வெட்டுக்களும் செப்பேடுகளும்

124 கல்வெட்டுக்களும், 10 செப்பேடுகளும்[3] இத்தொகுப்பில் இடம் பெறுகின்றன. மொத்தம் 134 ஆவணங்களில் பெரும்பாலன தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவை (125). வட ஆர்க்காடு மாவட்டத்தில் மூன்றும், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் இரண்டும், மதுரை, திருச்சி, பாண்டிச்சேரி, சென்னை ஆகிய இடங்களில் தலா ஒவ்வொன்றும் கிடைத்துள்ளன.

## கிடைத்த இடங்கள்

இந்த ஆவணங்கள் கிடைத்த இடங்களாவன : கோயில்கள் 87, சமாதிகள் 11, சத்திரங்கள் 10, கிறித்தவத் தேவாலயம், கல்லறைகள் 9, எல்லைக் கற்கள் 2, பாலங்கள் 2, படித் துறைகள் 2, மண்டபங்கள் 2, ஆபரணங்கள் 2, யாகசாலைகள் 2, அரண்மனை 1, கோட்டை 1, மருத்துவமனை 1, தண்ணீர்த் தொட்டி 1, இசுலாமியர் தர்கா 1.

இவைகளில் தமிழ் ஆவணங்கள் 75 ; மராத்தி ஆவணங்கள் 36 ; ஆங்கில ஆவணங்கள் 10 ; வடமொழியில் அமைந்தது 1.

இவைதவிர இருமொழிக் கல்வெட்டுக்கள் 8 ; மும்மொழிக் கல்வெட்டுக்கள் 2; நான்கு மொழிக் கல்வெட்டு 1 ; ஐந்து மொழிக் கல்வெட்டு 1 கிடைத்துள்ளன.[4]

இத்தொகுப்பில் பலமொழிக் கல்வெட்டுக்கள் வேறு வேறு மொழிகளில் எழுதியிருந்தாலும் செய்தி அடிப்படையில் அவை ஒரே கல்வெட்டாகக் கொள்ளப் பெற்றுள்ளன. அவ்வகையில் மொத்தம் அவை 144 கல்வெட்டுக்களாக வெட்டப் பெற்றிருப்பினும் 124 வரிசை எண்களே அளிக்கப்பெற்றுள்ளன.

13 அரசர்களில் இரண்டாம் ஏகோசி, காட்டுராசா, சையாசி, சுசான்பாய் ஆகியோருக்குரிய கல்வெட்டுக்கள், செப்பேடுகள் எதுவும் கிடைக்கவில்லை. கிடைத்துள்ள ஆவணங்களை அளித்தோர் வாரியாகக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

| | |
|---|---|
| இரண்டாம் சரபோசி | 35 |
| சரபோசி I | 13 |

---

3. 1983ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் வெளியீடாகத் *தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் 50'* என்னும் நூல் வெளிவந்தது. அவ் வெளியீட்டுக்குப் பின்னர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் கல்வெட்டியல் துறை தொகுத்த 10 செப்பேடுகள் கல்வெட்டுக்களின் இறுதியில் இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளன.

4. இருமொழிக் கல்வெட்டுக்கள் : தமிழ் - மராத்தி 6; தமிழ் - ஆங்கிலம் 1 ; மராத்தி - பாரசீகம் 1.
மும்மொழிக் கல்வெட்டுக்கள் : தமிழ் - மராத்தி - தெலுங்கு 1 ; தமிழ் - மராத்தி - ஆங்கிலம் 1.
நான்கு மொழிக் கல்வெட்டு : தமிழ் - மராத்தி - தெலுங்கு - வடமொழி.
ஐந்து மொழிக் கல்வெட்டு : தமிழ் - மராத்தி - தெலுங்கு - ஆங்கிலம் - உருது.

| | |
|---|---|
| துளசா | 10 |
| துக்கோசி | 8 |
| சிவாசி | 8 |
| பிரதாபசிங் | 6 |
| சகசி | 3 |
| ஏகோசி I | 2 |
| அமர்சிங் | 1 |
| அரசியர், மராட்டியப் பெண்கள் | 32 |
| அமைச்சர், அலுவலர் | 8 |
| மராட்டியப் பொதுமக்கள் | 5 |
| மாவட்ட ஆட்சித்தலைவர் | 2 |
| கிழக்கிந்தியக் கம்பெனி | 1 |

134 ஆவணங்களில் மைய அரசின் கல்வெட்டுத் துறையினர் 44 கல்வெட்டுக்களைப் படி எடுத்துள்ளனர். ஆனால் அவற்றில் நான்கு கல்வெட்டுக்களுக்கு மட்டுமே அவர்கள் வழியாக மூலபாடம் வெளிவந்துள்ளன.[5]

மெக்கன்சியில் ஆவணத் தொகுதில் உள்ள இரண்டு கல்வெட்டுக்களின் மூல பாடம் முன்னரே வெளியிடப்பட்டுள்ளன.[6]

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை நான்கு கல்வெட்டுக்களை வெளியிட்டுள்ளது.[7] சென்னை மாநில நினைவுச் சின்னக் கல்வெட்டுத் தொகுதியில் நான்கு கிறித்தவக் கல்லறைக் கல்வெட்டுக்கள் வெளிவந்துள்ளன.[8] தனியார் சிலர் சில கல்வெட்டுக்களைப் பதிப்பித்துள்ளனர்.[9]

இவ்வகையில் மொத்தம் 22 ஆவணங்கள் பல்வேறிடங்களில் பதிப்பிக்கப் பட்டுள்ளன. மீதி 112 ஆவணங்களின் மூலபாடம் இத்தொகுதியில்தான் முதல் முறையாக வெளியிடப்பட்டுள்ளன.

பிறர் வெளியிட்ட 22 ஆவணங்களின் சரியான திருந்திய மூலபாடமும், சில வற்றிற்குத் தமிழ் மொழி பெயர்ப்பும் இந்நூலில் தரப்பட்டுள்ளன.

---

5. திருவாரூர், கீவளூர், வேதாரணியம், திருவரங்கம் கல்வெட்டுக்கள்.
6. *S.I.T.I.* II 630 ; D 2734 பூதலூர்க் கல்வெட்டு ;
   *S.I.T.I.* II 1071 ; D 2744 திருப்பூந்துருத்திக் கல்வெட்டு.
7. மனோரா, இராசாகோரி, திருப்பாம்புரம் கல்வெட்டுக்கள்.
8. *List of Inscriptions on Tombs or monuments in Madras*
9. பேராசிரியர் கே. எம். வேங்கடராமையா, புலவர் வி. சொக்கலிங்கம், கரந்தை சி. கோவிந்த ராசனார், பேராசிரியர் இராமசேசன், வில்லியனூர் வெங்கடேசன், பேராசிரியை சீதா ஆகியோர் சில கல்வெட்டுக்களைப் பதிப்பித்துள்ளனர்.

கிடைத்த தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்களில் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் தெற்குச் சுவரில் வெட்டப்பட்டுள்ள போன்சலே வமிச வரலாற்றுக் கல் வெட்டு மட்டும் இந்நூலில் சேர்க்கப்பெறவில்லை. அக்கல்வெட்டு தனி நூலாகும் அளவுக்கு மிகப் பெரிதாக இருப்பதாலும், மராத்தி, தமிழ், ஆங்கிலத்தில் ஏற்கனவே பலர் வெளியிட்டிருப்பதாலும்,[10] மெக்கன்சி தொகுப்பில் கிடைத்த அதன் தமிழ் மூலச் சுவடியைச் சுவடிப்புலத் தலைவரும், அரிய கையெழுத்துச் சுவடித்துறைத் தலைவரு மாகிய என் ஆசிரியப் பெருந்தகையார் பேராசிரியர் கே. எம். வேங்கடராமையா அவர்கள் தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலிருந்து பெற்று *தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு* என்ற பெயரில் தக்க விளக்கங்களுடனும் விரிவான வரலாற்றுக் குறிப்புக்களுடனும் அரிய திறனாய்வுப் பதிப்பாகத் தமிழ்ப் பல்கலைக் கழக வாயிலாகப் பதிப்பித்திருப்பதாலும் அக்கல்வெட்டு இந்நூலில் இடம்பெறவில்லை.

## மராட்டியர் காலக் கல்வெட்டுக்கள்

இப்பதிப்பில் தஞ்சை மராட்டிய அரசர், அரசியர், அலுவலர், பிற மராட்டிய மக்கள் தொடர்புடைய அவர்களின் பெயர்கள் சுட்டிக் கூறப்பெறும் கல்வெட்டுக்கள் மட்டுமே தொகுக்கப்பட்டுள்ளன. மராட்டிய மன்னர்களின் ஆட்சி தஞ்சையில் நடை பெற்ற காலத்தில் (1676-1855) மராட்டியர் ஆட்சிபற்றிய குறிப்புக்கள் எதுவுமின்றிப் பல கல்வெட்டுக்கள் தஞ்சை நகரிலும், தஞ்சை மாவட்டத்தின் பிற பகுதிகளிலும் கிடைக்கின்றன. அக்கல்வெட்டுக்கள் இப்பதிப்பில் சேர்க்கப் பெறவில்லை. அவை களைத் தஞ்சை மராட்டியர் காலக் கல்வெட்டுக்கள் என அழைக்கலாம்.

எடுத்துக் காட்டாக இரண்டு கல்வெட்டுக்கள் இங்கே காட்டப்படுகின்றன.

**தஞ்சை நகரம் நாலுகால் மண்டபம் வெங்கடேசப் பெருமாள் கோயிலில் உள்ள இரண்டாம் சரபோசி மன்னர் காலத்துக் (1820) கல்வெட்டு :**

1 *ஸ்ரீ பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோ*
2 *வில் கெருட கம்ப மண்டபம் திருவடி கோவி*
3 *லும் செங்கல்ப்பட்டியிலிருக்கும் முத்து செட்டி*
4 *யாற் குமாறர் கும்பினி சுபேதாற் பெருமாள்*
5 *னாயக்கற் தருமம் சதா சேவை சாலியவாகனம் 1742*

**கரந்தை சமணக் கோயிலில் உள்ள சிவாசி (1849) காலத்துக் கல்வெட்டு :**

1 *உ*
2 *கலி 4950 சவுமிய ஸ்ரீ அர்ப்பசி மீ மந்தாரடி ஸ்ரீ ஆ*

---

10 விசுவநாத் காசிநாத் ராஜ்வாடே (1906); டி. சாம்பமூர்த்தி ராவ் (1907); தஞ்சை சரசுவதி மகால் (1951; 1981).

3 தீஸ்சுர சுவாமி சன்னதியில் மகாமண்டபம் அனந்த
4 னாத சுவாமி கலச ஸ்தாபன செம்பு 108 குடம் 5 குத்து
5 விளக்கு 5 தட்டு 11 அபிஷேகம் பண்ணுகிற சிம்மா
6 சனக்கல்லு பெலிபீடம் உள்பட தஞ்சநகரம் அனந்த விஜய
7 முதலியார் புத்திரன் அப்பு முதலியார் குமாரன் நாகப்
8 ப முதலி உபையம்

## இவ்வாவணங்களால் அறியப்பெறும் வரலாற்றுச் செய்திகளுட் சில

### ஏகோசி (1676-1684)

ஆட்சிப் பகுதி பல நிருவாகப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. ஆங்காங்குத் தேவையான இடங்களில் பாளையக்காரர்கள் நியமிக்கப்பட்டனர். மராட்டியர் ஆளுகைப் பகுதியின் தென்புறம் கள்ளர் பாளையக்காரர்களும், வடபுறம் வன்னியப் பாளையக்காரர்களும் காவல், இறை வசூல் பொறுப்பேற்றிருந்தனர். சிற்றூர்களில் காவல்காரர் முதல் சுபேதார் வரை அரசியல் அலுவலர் பலர் நியமிக்கப்பட்டனர்.

ஏகோசியின் இறுதிக் காலத்திலேயே அவர் தம்பி சகசி ஆட்சிப் பொறுப் பேற்றுக் கொண்டார். ஆரணி சாகீர் தஞ்சை மராட்டியருக்கு உட்பட்டிருந்தது. செஞ்சியில் ஆட்சிபுரிந்த மாவீரர் சிவாசியின் மகனான சாம்பாசியோடு நல்ல உறவு இருந்தது.

### சகசி (1684-1711)

இராமநாதபுரம் சேதுபதியுடன் சேர்ந்துகொண்டு இவர் மதுரை நாயக்கருடன் போரிட்டார். அதனால் அறந்தாங்கி, பட்டுக்கோட்டைப் பகுதியில் சில பகுதிகளை இனாமாகப் பெற்றார். இவர் காலத்தில் பட்டுக்கோட்டையில் பெரிய கற்கோட்டை கட்டப்பட்டது. பல இடங்களில் ஊர்கள் ஏற்படுத்திப் புதிதாக மக்கள் குடியேற்றப் பட்டனர்.

### சரபோசி I (1711-1729)

வணிகர்களுக்கு வணிக இடங்கள் ஒதுக்கப்பட்டன. உயர் அலுவலர்கள் நாடு முழுவதும் சுற்றி வந்தனர். கோயிலுக்குக் கொடுக்கவேண்டிய வரிகள் நிர் ணயம் செய்யப்பெற்றன. தோப்புக்கள் பல இடங்களில் ஏற்படுத்தப்பட்டன. சிதைந்து அழிந்துபோன திருவாரூர்க் கோயில் புதுப்பிக்கப்பட்டது. பல கோயில் கட்கு அரசரே நேரில் சென்று கொடைகள் கொடுத்தார். தஞ்சைப் பெரிய கோயில் குடமுழுக்கு விழா இவர் காலத்தில் நடைபெற்றது.

## துக்கோசி (1729-1735)

மகாதேவப்பட்டணத்தில் பெரிய கோட்டை கட்டி வாழ்ந்து வந்தார். மிகப் பெரிய பக்தராகவும், இசை மேதையாகவும், மருத்துவ நிபுணராகவும் திகழ்ந்தார். கவிஞராகவும் விளங்கினார். இவர் காலத்தில் பல கோயில்கள் திருப்பணி செய்யப் பட்டன. இவர் முதலாம் துளசா என்றும் அழைக்கப் பெறுவார்.

## பிரதாபசிங் (1739-1763)

வலங்கை-இடங்கைச் சாதித் தகராறுகள் இவர் காலத்தில் சுமுகமாகத் தீர்த்து வைக்கப்பட்டுள்ளன. இவரால் நாகூர் தர்காவின் 11 நிலைக் கோபுரம் கட்டப் பெற்றது. கோயில் கொடை நிலங்கள் உள்ள இடங்களுக்குச் சென்று அரசு அலு வலர்களும் பொது மக்களும் சேர்ந்து அளந்து சரி பார்த்தனர். பல கோயில்கட்குக் கொடைகள் அளிக்கப்பட்டன.

## துளசா (1763-1787)

திருப்பூந்துருத்திப் பகுதியில் குடமுருட்டியாறு சரியாகப் பாசனத்திற்குப் பயன் படாததால் புது ஆறு வெட்டப்பட்டது. உறவினர்கள் பலர் உயர் அலுவலர்களாக நியமிக்கப்பட்டனர். பல கோயில்கள் திருப்பணி செய்யப்பட்டன. தருமபுரம் ஆதீ னத்துடன் இவர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். இவர்களின் குலகுரு வாகிய சேதுபாவா சுவாமிகள்மீதும், அவர் குடும்பத்தின்மீதும் அளவற்ற பக்தி கொண்டிருந்தார். இவர் காலத்தில்தான் இடிந்த பிற கோயில்களின் கற்களைக் கொண்டுவந்து தஞ்சை நகரம் மேலவீதி பங்காரு காமாட்சியம்மன் கோயில் புதிய தாகக் கட்டப்பட்டது. வழிபாடு நின்றிருந்த சில கோயில்கட்கு இவருடைய உயர் அலுவலர்கள் சென்று வழிபாடு தொடர்ந்து நடைபெற ஏற்பாடுகள் செய்தனர்.

## அமர்சிங் (1787-1798)

அமரசிங் அல்லது அமரசிம்மன் என்றும் அழைக்கப்பட்ட இவர் இராமசாமி என்றும் குறிக்கப் பெறுகின்றார். பிரதாபசிங் கத்தி கட்டி மணம் செய்துகொண்ட மனைவியின்பால் பிறந்தவர். பட்டத்து இராணியின் புதல்வர் அல்லர். துளசா வின் வளர்ப்பு மகனான இரண்டாம் சரபோசிக்குப் பாதுகாவலராக நியமிக்கப்பட்ட இவர் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார் என்பர்.

சுதந்திரத் தன்னாட்சி வேட்கை கொண்ட இவர் ஆங்கிலேயர்களைத் தஞ்சைப் பகுதியிலிருந்து விரட்ட விரும்பினார். அதனால் இவர் காலத்தில் வெள்ளையர் இவருக்குக் கொடுத்த தொல்லைகள் பல. அப்பொழுதிருந்த வட இந்திய அரசர் சிலருக்கு இவர் வரைந்த கடிதங்கள் பல மோடி ஆவணங்களிடையே உள்ளன.

அதனால் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியார் இவர்மீது பல குற்றம் சாட்டிப் பதவி நீக்கம் செய்து தஞ்சை அரசில் இரண்டாம் சரபோசியை அமர்த்தினர்.

ஒய்வூதியம் பெற்று ஐந்தாண்டுகள் திருவிடைமருதூரில் தங்கி 1802இல் அமரசிங் காலமானார். இவருக்குப் பிரதாபசிம்மன் என்ற மகன் ஒருவர் இருந்தார்.

இவர் காலத்தில் தஞ்சை, திருவிடைமருதூரில் வாழ்ந்த பஞ்சகம்மாளர் அனை வரும் கூடி திருவிடைமருதூர்க் கோயிலுக்கு அளித்த கொடையை ஒரு செப்பேடு விளக்குகிறது. அமரசிங் வரலாறு விரிவாக ஆராயப்படவில்லை.[11]

## சரபோசி II (1798-1832)

தஞ்சை அரண்மனையில் புதிய பகுதிகள் சில கட்டப்பட்டன. பழைய பகுதி கள் பழுது பார்க்கப்பட்டன. இவர் காலத்தில் தஞ்சை நகரின் பெரும்பாலான கோயில்களில் திருப்பணிகள் நடைபெற்றன. விட்டோபா கோயில் புதியதாகக் கட்டப்பட்டுப் பாண்டுரங்கர் வழிபாடும், மராட்டிய மரபுப் பக்தி நெறியும் பெருகுமாறு செய்தார். காசி யாத்திரை மேற்கொண்டு வந்த பின்னர் தஞ்சையில் காசி விசுவ நாதர் கோயில், மணிகர்ணிகேசுவரர் கோயில், ஐந்து மாடிக் கட்டிடம் போன்றவை களைக் கட்டினார். சைவ-வைணவ வேறுபாடு இன்றி ஆலயத் திருப்பணிகள் பல செய்தார்.

நர்த்தன மண்டபம் கோயில்களில் அமைப்பது இவருக்கு மிக விருப்பமான செயல். இவர் மட்டுமில்லாமல் இவருடைய சகோதரியும், பெண் மக்களும் பல கோயில்களைப் புதியதாகக் கட்டிச் சத்திரங்களையும், அக்கிரகாரங்களையும் உண்டாக்கினர்.

ஒரத்தநாட்டில் கலைநலம் செறிந்த முத்தாம்பாள் சத்திரத்தையும், சாளுவ நாயக்கன் பட்டினத்தில் அழகிய பெரிய கற்கோட்டையையும், நடுவே உயர்ந்த உப் பரிகைக் கோபுரத்தையும் கட்டினார். திருவையாற்றில் காவிரி வடகரையில் கல்யாண மகால் எனும் பெயரில் மிகப்பெரிய மாளிகையை உருவாக்கினார்.

தஞ்சைப் பெரிய கோயிலில் தளவரிசை அமைத்து, சுற்று மண்டபங்களைப் பழுது பார்த்து, விநாயகர் கோயில் கட்டி, தூர்ந்து போயிருந்த மண்டூகத் தீர்த் தத்தை அழகிய கிணறாகக் கட்டிக் கோயிலின் பல பகுதிகளில் மிகப்பெரிய திருப் பணிகளைச் செய்தார். எண்ணற்ற அணிகலன்களையும், பாத்திரங்களையும், வாகனங்களையும் பெருவுடையார்க்கு அளித்தார்.

தஞ்சை மராட்டிய மரபின் பழைய வரலாற்றையும், 1803ஆம் ஆண்டுவரை தஞ்சையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளையும் ஆண்டு, தேதி வாரியாகச் சான்றுகளுடன்

---

11. அமரசிங்கின் ஆவணங்கள் சிலவற்றைக் கல்வெட்டியல் துறை தொகுத்துள்ளது.

எழுதி, அதைத் தஞ்சைப் பெரிய கோயில் தெற்குச் சுவர் முழுவதுமாக வெட்டச் செய்தார். மிகப்பெரிய அக்கல்வெட்டு இன்று மராட்டியர் வரலாற்றைத் தொகுப்பதற்கும், விரிவாக ஆய்வதற்கும் நிலைக்களனாக உள்ளது. சரபோசியின் புகழ் பாடும் அக்கம்பீரக் கற்காவியம் வியக்கத்தக்க மாபெரும் பணியாகும். இதற்காக வரலாற்றாய்வாளர் சரபோசிக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவர்.

தஞ்சையில் நெடுநாட்களாக இருந்த வெட்டியார் வழக்கைத் தீர்த்து வைத்தார்.

சுவார்ட்சு பாதிரியாரால் வளர்க்கப்பட்டு ஆங்கிலத்தை நன்கு கற்ற சரபோசி சுவார்ட்சு இறந்தபோது அவரைப் பற்றி எழுதிய ஆங்கிலக் கவிதை மகர்நோன்புச் சாவடி தூய பேதுரு தேவாலயத்தில் வெட்டப்பட்டுள்ளது.

உலகின் தலைசிறந்த சிற்பி ஃபிளாக்சுமேனைக் கொண்டு தன் உருவச் சிலையையும், சுவார்ட்சு பாதிரியாருக்கு நினைவுச் சின்னத்தையும் வெண்பளிங்குக் கற்களில் வடிக்குமாறு செய்தார். சிற்ப உலகில் சிறந்து விளங்கும் அச்சிற்பங்கள் தஞ்சையில் இன்றும் நின்று நிலவிக் காண்போர் கருத்துக்கும் கண்களுக்கும் விருந்தாக அமைந்துள்ளன.

காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். அவர்களின் வழிபடு கடவுளாகிய சந்திர மௌலீசுவரர் கோயிலைக் கும்பகோணம் சங்கர மடத்தில் கட்டினார். நாட்டின் பல்வேறு பகுதிகளில் கற்றறிந்த அந்தணர்களைக் கொண்டு யாகங்கள் பல செய்தார்.

தமிழ் நாட்டுக் கோயில்கள் பலவற்றிற்கும் தலயாத்திரை மேற்கொண்ட சரபோசி, மதுரை, திருவரங்கம் கோயில்கட்குப் பல அணிகலன்கள் அளித்துள்ளார். 1798இல் நாடு முழுவதையும் ஆங்கிலேயர்கட்கு அளித்துவிட்டுத் தஞ்சைக் கோட்டையை மட்டும் நிர்வகித்துக்கொண்டு கலை அரசராகச் சரபோசி திகழ்ந்தார்.

## சிவாசி (1832-1855)

தந்தையின் தூண்டுதலால் நன்கு கல்வியறிவு பெற்றிருந்த சிவாசி தஞ்சையில் இருந்த ஆங்கிலப் பாதிரிமார்களோடு நெருங்கிய நட்புக் கொண்டிருந்தார். தமிழறிஞர் ஜி. யு. போப் தஞ்சையில் எட்டாண்டுகள் இருந்தபோது அவருக்குப் பல உதவிகளைச் செய்தார். மகர்நோன்புச் சாவடியில் போப் வேண்டுகோளின்படி தூய பேதுரு தேவாலயத்திற்கு மிகப்பெரிய குளம் ஒன்றை வெட்டிக்கொடுத்தார். தம் நண்பர் கோலாஃப் பாதிரியாருக்குத் தம் செலவில் அழகிய கல்லறை கட்டிக் கொடுத்தார். தம் பெண் மக்களுக்கு ஆங்கில அறிவை ஊட்டினார். ரூபாய் 71000 செலவில் வெண்ணாற்றங்கரை, வெட்டாறு, குடமுருட்டி, திருவையாறு ஆகிய இடங்களில் நான்கு பாலங்களைக் கட்டினார். இவர் காலத்தில் தஞ்சைப் பெரிய கோயில் குடமுழுக்கு விழா நடைபெற்றது.

## அரசிகள்

மராட்டிய அரசிகளும் எண்ணற்ற கோயில் திருப்பணி செய்து, புதிய கோயில்களைக் கட்டி வரலாற்றில் நின்று நிலவுகின்றனர்.

முதலாம் ஏகோசியின் மனைவி தீபாம்பாள் தன் பெயரால் அமைக்கப்பட்ட தீபாம்பாள்புரம் வன்மீகநாதர் கோயிலுக்குக் கோயில்வெண்ணியில் நிலம் கொடையாக அளிக்கச்செய்து செப்பேடும் வெட்டித் தந்துள்ளார்.

அரசியர் பலர் சத்திரங்கள் கட்டி, அருகில் கோயில்களையும், அக்கிரகாரங்களையும் ஏற்படுத்தி அங்குப் பல அறச்செயல்கள் நடைபெறுமாறு செய்துள்ளனர்.

நற்பணிகள் புரிந்த தஞ்சை மராட்டிய அரசியருள் தலைசிறந்து நிற்பவர் கடைசி அரசர் சிவாசியின் மனைவியார் காமாட்சியம்பா பாயி ஆவார். மாரியம்மன் கோயில், தஞ்சபுரீசுவரர் கோயில், பங்காரு காமாட்சியம்மன் கோயில், மேலவீதி காசி விசுவநாதர் கோயில் ஆகிய சைவக் கோயில்களிலும், வரதராசப் பெருமாள் கோயில், மணிகுன்றப் பெருமாள் கோயில், கலியாண வெங்கடேசர் கோயில், இராசகோபால சுவாமி கோயில், புன்னைநல்லூர் கோதண்டராமர் கோயில் ஆகிய வைணவக் கோயில்களிலும் பல்வேறு திருப்பணிகள் செய்து, அறக்கொடைகள் பலவற்றை அளித்துள்ளார்.

1876இல் தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் என்றி சல்லிவன் தாமசு வேண்டுகோளுக்கிணங்க நகரின் மையமான பகுதியில் தனக்குச் சொந்தமாக இருந்த 40 ஏக்கர் நிலத்தை நன்கொடையாக அளித்துத் தஞ்சை வரலாற்றில் நீங்கா இடம் பெற்ற புகழுக்குரியவர்.

சிவாசியின் பிற மனைவியர்களும் பல கொடைகளை அளித்துள்ளனர். குறிப்பாக இராமகுமராம்பா பாயி சாகேப், தீபாம்பா பாயி சாகேப் ஆகிய இருவரும் (இருவரும் சகோதரிகள்) தமிழ்ப் பல்கலைக் கழகம் அமைந்துள்ள அரண்மனை வளாகம் வாயில் எதிரே தண்ணீர்த் தொட்டி கட்டி வைத்துத் தம் கணவர் சிவாசியின் பெயரையும் பொறித்து அந்தக் கல்வெட்டைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் சிவலிங்க வடிவில் பொறித்துள்ளனர். இன்றும் அந்தத் தண்ணீர்த் தொட்டி அழியாமல் கல்வெட்டுடன் உள்ளது.

ஓய்வூதியம் பெற்றுவந்த சிவாசி மன்னரின் அந்தப்புர மகளிராகிய மங்கள விலாச மகளிர் பலரும் பல கோயில்கட்குக் கொடைகள் அளித்துள்ளனர்.

## அரசர் அரசியர் பட்டப்பெயர்கள்

கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தினர் பெயர்கள் பல்வேறு சிறப்பு அடைமொழிகளுடன் குறிக்கப்படுகின்றன.

' அளகாபுரியாகிய தஞ்ச நகராதிபதி ஏகோசி மகராசா சாயிபு' [12]

' ராயஸ்ரீ சாசி மகாராசர் சாயபு' [13]

' மகாமண்டலேசுவரன் ராசமானிய ராசஸ்ரீ ஏகோசி மகராசா சாயபு' [14]

' துக்கோசி மகாராசா சாயபு' [15]

' ராசமானிய ராசஸ்ரீ ராய மகீந்திர பூப்பாலகன் பிறத்தாப்பசிங்க மகாறாச சாயிப்பு' [16]

'போசல வம்சம் கவுசிககோத்திரம் ராசஸ்ரீ பிரதாப சிம்ம மகாராசா சாயப்பு[17]

'போசல குலமணி சறபேந்திர மகாராசா சாயேப்' [18]

'வீரசிம்ம வரத்தினால் சோழதேசத்தின் சிம்மாசனத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக் கிற க்ஷத்திரிய பூபாலராகிய இஸ் அயினெஸ் ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ சீவாஜி மகா இராஜாச் சத்ரபதி சாய்பு' [19]

மராட்டியர் கல்வெட்டுக்களில் வடசொற்கள் பல பயின்று வந்தாலும் அரசர் பெயர்களைக் கல்வெட்டில் குறிக்கும்போது ஏகோஜி, சகஜி, துக்கோஜி, துளஜா, சரபோஜி, சிவாஜி என்று குறிக்காமல் ஏகோசி, சாசி, துக்கோசி, துளசா, சரபோசி, சிவாசி என எழுதப்பெற்றுள்ளன. இது அக்காலப்பேச்சுத் தமிழின் நிலையை நமக்கு நன்கு உணர்த்துகிறது.

எல்லோருடைய பெயரிலும் சாயபு என்ற மரியாதைச் சொல் பின்னொட்டாக வருவது கவனிக்கத்தக்கது. கடைசி இரு அரசர்களுக்குச் 'சத்திரபதி' என்ற பட்டமும் வழங்கப்பெறுகிறது.

மராட்டிய இராணிகளின் பெயர்கள் கல்வெட்டுக்களில் 'மாதோஸ்ரீ இராம குமராம்பா பாயி சாஹேப், [20] மாதுஸ்ரீ கௌறம்பா பாயி சாயேப்'[21] என்று குறிக் கப்பட்டுள்ளன. பெயருக்கு முன் 'மாதுஸ்ரீ' என்றும், பெயருக்குப் பின் 'பாயி சாகேப்' என்றும் குறிக்கப்பட்டது. பொதுவாக இராணிகளை 'பாயி சாகேப்' என்றும், அரசர்களின் தாயாரை 'ஆவு சாகேப்' என்றும் அழைத்து வந்தனர்.

---

12. ப. 179
13. ப. 154
14. ப. 161
15. ப. 182
16. ப. 33
17. ப. 116
18 ப 2
19. ப. 107
20. ப. 71
21. ப. 70

1855ஆம் ஆண்டு வாரிசு இல்லாத கடைசி அரசர் சிவாசிக்குப் பின் நாடு முழுவதையும் ஆங்கிலேயர் எடுத்துக்கொண்டனர். ஆங்கில வழக்கறிஞர் ஜான் புரூஸ் நார்ட்டன் பெருமகனாரால் அரண்மனை, ஆபரணங்கள், நிலம், சரசுவதி மகால் நூலகம், கோயில்கள் இவைகளைப் பெற்ற அரசி காமாட்சியம்பா பாயி அவர்களின் பெயர் கல்வெட்டுக்களில் 'தஞ்சாவூர் அரண்மனை ஹிஸ் லேட் ஹைனஸ் ஸ்ரீ சிவாஜி மகாறாஜா சாயபவர்களின் ஜேஷ்ட பத்நியும் டி இலாகா தேவஸ்தானங்களின் ஆதீனஸ்தரும் விசாரணை கற்த்தர் அவர்கள்'[22] என்று குறிக்கப்பட்டுள்ளது. மூத்த மனைவியர் 'சீனியர் றாணி'[23] என்றும் அழைக்கப்பட்டனர். கிழக்கிந்தியக் கம்பெனிச் செல்வாக்கினால் அரசர்கட்கு His Highness என்றும், இராணிகட்கு Her Highness என்றும் அடைமொழி தரப்பட்டது.[24] இச்சொல் தமிழிலும் ஹிஸ் ஹைனஸ், ஹர் ஹைனஸ் என்று ஒலிபெயர்த்தும் எழுதப்பட்டது.

## அன்பு மகளிர்

சிவாசி (1832-1855) மன்னர்க்கு 20 இராணிகளும், சுமார் 24 அந்தப்புர வைப்பு மகளிரும் இருந்தனர். அந்தப்புர மகளிர் 'தஞ்சை அரண்மனை மங்கள விலாசம்' 'மங்களவிலாச சத்மம்' என்ற அடைமொழியுடன் 'கோவிந்தா பாயி அம்மாள்'[25] 'அகிலாண்ட பாயி அம்மாள்',[26] 'தர்ம்மு பாயி அம்மாள்'[27] என அழைக்கப்பட்டனர். இவர்கட்குச் சாகேப் அடைமொழி தரும் வழக்கம் இல்லை. அனைவரும் 'அம்மாள்' என்ற ஈற்றுச் சொல்லுடன் குறிக்கப்பெறுகின்றனர். இரண்டாம் சரபோசியின் அன்பு மகளிர் 'கல்யாண மகால் மகளிர்' எனப்பட்டனர்.

## நாட்டுப் பிரிவுகள்

மராட்டியர் ஆட்சிப் பகுதிகள் சுபா, சீமை, சீர்மை, வட்டம், மாகாணம், ஊர் என்று பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன.[28] சில பகுதிகளில் சோழர், விசய நகரம், நாயக்கர் காலத்தில் வழங்கப்பெற்ற வளநாடு, நாடு, கூற்றம், சாவடி போன்ற பிரிவுகள் அப்படியே வழங்கப்பெற்றன.[29] பெரிய வட்டப்பகுதிகள் வடக்கு வட்டம். தெற்கு வட்டம் எனப் பிரிக்கப்பட்டன.[30] சில பெரிய ஊர்கள் தனி நிர்

22. ப. 19
23. ப. 15
24. ப. 70, 71
25. ப. 6
26. ப. 13
27. ப. 14
28. ப. 80, 145, 174, 201, 203, 207, 209, 210, 234
29. ப. 215, 179
30. ப. 207

நிலம் — னிலம் 117
நீலமேகன் — னீலமேகன் 224
தினம் — திநம் 2

ரகரம் றகரமாக மொழிமுதல், இடை, இறுதியில் எழுதப்பெற்றுள்ளது.

ராஜேந்திரம் — றாஜேந்திரம் 80
ராத்திரி — றாத்திரி 68
ராமசுவாமி — றாமசுவாமி 140
ராணி — றாணி 15
ராஜா — றாஜா 19
பேரால் — பேறால் 80
அரண்மனை — அறண்மனை 14
பெரிய — பெறிய 14
விபரம் — விபறம் 14
வரிசை — வறிசை 19
மகாராயர் — மகாறாயர் 33
நகரம் — நகறம் 113
அர்த்தசாமம் — அறுத்தசாமம் 223
அவர்கள் — அவற்கள் 13
தர்மம் — தற்மம் 168
பண்ணினார் — பண்ணினாற் 4
செய்தார் — செய்தாற் 55

றகரம் ரகரமாகவும் எழுதப்பட்டுள்ளது.

ஆறு — ஆரு 116

மொழிமுதல் இகர, ஈகார, எகரம்-யிகரம், யீகாரம், யெகரமாக எழுதப்பெற்றுள்ளது.

இதின்மேல் — யிதின்மேல் 203
இதுக்கு — யிதுக்கு 231
இந்த — யிந்த 2, 13
இவர்கள் — யிவர்கள் 203
இலாகா — யிலாகா 140
இறை — யிறை 168
ஈசன் — யீசன் 162
ஈசுரர் — யீசுரர் 235
ஈழம் — யீழம் 203

எங்களூர் — யெங்களூர் 236
எதிரிட்டார் — யெதிரிட்டார் 214
எல்லை — யெல்லை 117
எழுதி — யெழுதி 116

அகரம் எகரமாக மாற்றம் பெற்றுள்ளது.

யஸ்வத்தம்பா — யெஸ்வத்தம்பா 69
யமுனாம்பாபாயி — யெமுனாம்பாபாயி 72

யாகார உயிர்மெய் ஆகார உயிராக மாற்றம் பெற்றுள்ளது.

யாராகிலும் — ஆராகிலும் 164
யானை — ஆனை 215

றகரம் ககரமாகவும், றகரம் னகரம் அல்லது ணகரமாகவும் மாற்றம் பெற்றுள்ளது. றகரம் சகரமாகவும் மாறியுள்ளது.

தெற்கு — தெக்கு 232
நாற்சாரி — நாச்சாரி 175
மணிகுன்றம் — மணிகுன்னம் 104
கொன்ற — கொண்ண 236

த்த - ச்ச ஆக மாற்றம் பெற்றுள்ளது.

அவித்த — அவிச்ச 221
கட்டிவைத்து — கட்டிவச்சு 34
நடப்பித்த — நடப்பிச்ச 168
பிறப்பித்தோம் — பிறப்பிச்சோம் 155
பண்ணிவைத்து — பண்ணிவச்சு 33
வைத்தது — வச்சது 182

ற்ற - த்த ஆக மாற்றம் பெற்றுள்ளது ; தகரம் றகரமாகவும் மாற்றம் பெற்றுள்ளது.

ஆற்றில் — ஆத்தில் 117
சிற்றம்பலம் — சித்தம்பலம் 212
நூற்றுக்கலம் — நூத்திக்கலம் 235
கூற்றம் — கூத்தம் 215
வெற்றி — வெத்தி 219
சூரியமூர்த்தி — சூரியமூற்றி 212
திருமாளிகைப்பத்தி — திருமாளிகைப்பற்றி 174

ஐகாரம் அய் என எழுதப்பெற்ற சில மாற்றங்களும் நிகழ்ந்துள்ளன.

வைத்தியநாதன் — வயித்தியநாதன் 174, 210, 235
கை எழுத்து — கயி எழுத்து, கய் எழுத்து
கய்யி எழுத்து 224, 212, 221
ஐநெஸ் — அயிநெஸ் 107
ஐவேஜி — அயிவேஜி 6

சகரம் தகரமாக மாற்றம் பெற்றுள்ளது.

சண்டேசுவரர் — தண்டேசுவரர் 180
சாசனம் — சாதனம் 236

பகரம் வகரமாக மாற்றம் பெற்றுள்ளது ; வகரம் பகரமாகவும் மாறியுள்ளது.

பாவாசி — வாவாசி 145, 235
அசுவமேதம் — அசுபமேதம் 235
ரேவதி — ரேபதி 172

குறில் இணைகளும், குறில் நெடில் இணைகளும் ஒரே எழுத்தாக மாற்றம் பெற்றுள்ளன.

இரண்டு — ரெண்டு 174
மகால் — மால் 140
இரவுக்காலம் — ராக்காலம் 231
பெயர்த்து — பேத்து 116
பெயர் — பேர் 80

சிறப்பு ழகரம் ளகரமாக எழுதப்பெற்றுள்ளது.

கீழத்தெரு — கீளத்தெரு 117
சோழ — சோள 47
பழைய — பளைய 117

அன், அர் போன்ற ஈறுகள் ஆள் என மாற்றம் பெற்றுள்ளன.

சூரியன் — சூரியாள் 220
பவுத்திரன் — பவுத்திராள் 220
புத்திரன் — புத்திராள் 220
அவர் — அவாள் 140
இவர் — இவாள் 215, 140
காரியஸ்தர் — காரீயஸ்தாள் 220
சந்திராதித்தர் — சந்திராதித்தாள் 119

சூரிய சந்திரர் — சூரிய சந்திராள் 34
பாண்டவர் — பாண்டவாள் 33

இன்னும் வுச்சிக்காலம், வுத்சவம், செல்லாநிண்ட, நடத்தறத்துக்கு, நஞ்சை, புஞ்சை, இருக்குர, நாலு, ஆச்சுது, புதுசாயி, தையி, றாத்திரி, பண்ணுரபேர், நெயி, திருப்பணியாயி போன்ற பல சொற்கள் பேச்சுத் தமிழின் நிலையை நமக்கு நன்கு காட்டுகின்றன.

## ஷ—ழ மாற்றம்

தஞ்சை மாவட்டத்தில் பேச்சு வழக்கில் ழ—ஷ ஆக மாறுவது வழக்கம். 'திரு விழா' என்ற சொல் 'திருவிஷா' எனச் சில பகுதிகளில் ஒலிக்கப்படுகிறது.

ஆனால் மராட்டியர் செப்பேடுகள் சிலவற்றில் இதற்கு நேர்மாறாக ஷ என்ற எழுத்து ழ என்று மாற்றம் பெறுவதைக் காணுகின்றோம். இம்மாற்றம் செப்பேடு களில் அதிகமாகவும், கல்வெட்டுக்களில் மிகக் குறைவாகவும் நிகழ்ந்துள்ளது.

பாஷை என்பது பாழை என்றும் 203
அசேஷ என்பது அசேழ என்றும் 223
தோஷம் என்பது தோழம் என்றும் 168, 207, 220
வங்கிஷம் என்பது வங்கிழம் என்றும் 219
வருஷம் என்பது வருழம் என்றும் 235
கிஷ்டணராயர் என்பது கிழ்டணராயர் என்றும் 209
ரிஷப என்பது ரிழப என்றும் 206

எழுதப்பட்டுள்ளன.

மொழி இறுதியிலும் இடையிலும் இம்மாற்றம் நிகழ்ந்துள்ளது. ஓரிரு இடங் களில் 'தவிர்த்தான்' என்ற சொல்லும் 'தவிழ்த்தான்' என்று எழுதப்பட்டுள்ளது. (203, 219)

## வடமொழி நிலை

ஏராளமான வடசொற்களும், வடமொழித் தொடர்களும் இடையிடையே கலந்து இவ்வாவணங்கள் எழுதப்பட்டுள்ளன. தற்பவச் சொற்கள் பல கிரந்த எழுத் துக்கள் பெற்று வந்துள்ளன.

வங்சம், உத்ஸவம், யதாஸ்து, சீஷன், ஜீர்ணம், சௌக்கியார்த்தம், ஜீர்ணோத்தாரம், போஜனம், அஸ்வினி, பௌஷே, பால்குண, பத்னி, பார்யை, பௌத்ரன், ஆக்ஞை போன்று பற்பல வட சொற்கள் பயின்று வருகின்றன.

சில கல்வெட்டுக்களின்மூலம் கிரந்த எழுத்துக்களை நீக்கி வடசொற்களைத் தமிழ் வரிவடிவில் எழுதும் முயற்சியும் நடைபெற்றுள்ளது என்பதை அறிகின்றோம்.

| | | |
|---|---|---|
| சகாப்தம் | — | சகாத்தம் 175 |
| சாஸ்திரி | — | சாத்திரி 30 |
| பஜனை | — | பசனை 2 |
| பக்ஷம் | — | பட்சம் 2 |
| பாஷை | — | பாசை 32 |
| பிரமஹத்தி | — | பிறமத்தி 204 |
| ரக்ஷித்தாப்போல | — | ரெச்சித்தாப்பலை 33 |
| ரிஷபம் | — | இடபம் 37 |
| லக்ஷ்மி | — | லெட்சுமி 4 |
| ஜீரணோத்தாரம் | — | சீரணோர்த்தாரம் 4 |
| ஸ்வரூபம் | — | சுரூபம் 84 |
| ஸ்வஸ்தி | — | சுவத்தி 174 |

## தெலுங்கின் நிலை :

மராட்டியர் ஆட்சி அமைவதற்கு முன்பு 1530 முதல் 1674 வரை தஞ்சையில் நாயக்கர் ஆட்சி நடைபெற்றது. விசயநகரப் பிரதிநிதிகளாகிய நாயக்கர் காலத்தில் தமிழும் தெலுங்கும் அரசவை மொழிகளாகத் திகழ்ந்தன. பின்னர் 1676 முதல் 1855 வரை நடைபெற்ற மராட்டியர் ஆட்சியின் போதும் தெலுங்கு மொழி பழக்கத்தில் இருந்துள்ளது.

மராட்டிய அரசர்கள் பலரும் தெலுங்கு மொழி கற்றிருந்ததுடன் சிலர் தெலுங்கில் புலமை மிக்கவர்களாகவும் திகழ்ந்தனர். தெலுங்குப் புலவர்கள் பலரை ஆதரித்தனர். தெலுங்கில் இலக்கியங்களும், உரைநூல்களும், நாடகங்களும், கீர்த்தனைகளும் தோன்றின. உயர் பதவிகள் பலவற்றை நாயக்கர் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் வகித்தனர்.

இத்துடன் தெலுங்கு நாயக்கர் குடும்பத்துப் பெண்களைத் தஞ்சை மராட்டிய அரசர்கள் சிலர் திருமணமும் செய்து கொண்டனர் என்பது குறப்பிடத்தக்க செய்தியாகும். எனவே தெலுங்கு ஆவணங்களும் ஓலைச்சுவடிகளும் தஞ்சையில் மிகுதியாகக் கிடைப்பதுடன் மராட்டியர்காலக் கல்வெட்டுக்களிலும் தெலுங்கு இடம் பெற்றுள்ளது.

தஞ்சை விட்டோபா கோயிலிலும் (1819), பட்டுக்கோட்டை வட்டம் மனோராவிலும் (1814) மராட்டிக் கல்வெட்டுக்களின் அருகே தெலுங்கு மொழியிலும் அதே கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளதைக் காணுகின்றோம்.[36]

---

36. ப. 1, 148

தென் ஆர்க்காடு மாவட்டம் சிதம்பரம் கல்வெட்டில் வடமொழிச்சுலோகம் தெலுங்கு எழுத்தில் எழுதப்பட்டுள்ளது (1686). கும்பகோணம் செப்பேட்டில் (1735) 'வடுக மேளம்' வாசிப்போர் குறிக்கப்பெறுகின்றனர். அமர்சிங்கின் திருவிடைமருதூர்ச் செப்பேட்டில் 'வடுகத்தட்டார்' குறிக்கப்படுகின்றனர். அவர்கள் பிரதிநிதி 'நாரையன்' தெலுங்கில் கையொப்பமிட்டுள்ளார். [37]

தஞ்சை நகரில் மராட்டியர் காலத்திலிருந்த 18 வணிகப்பட்டடைகளில் 'தெலுங்கப் பட்டடை' என்பதும் ஒன்று.

மராட்டியர் காலத் தமிழ் இலக்கியங்களான சரபேந்திர பூபாலக் குறவஞ்சி, திருவிடைமருதூர் நொண்டி நாடகம் போன்றனவற்றில் தெலுங்கு மக்கள் அலுவலர்களாக இருந்தமையும் தெலுங்கு மொழி பயின்றமையும் குறிப்பிடப் பெறுகின்றன.[38]

## உருது வழக்கு

தஞ்சையில் நாயக்கர் காலத்திலிருந்தே இசுலாமியர் பலர் குடியேறினர். தஞ்சை நாயக்க மன்னர் செவ்வப்ப நாயக்கர் (1532-1560) 12-12-1550 அன்று தஞ்சை சமுசுப்ரு பள்ளி வாசலுக்கு ஏழு வேலி நிலம் கொடையாக அளித்துள்ளார். முதலாம் ஏகோசி (1676) தஞ்சைக்குப் படையுடன் வந்தபோது பீசப்பூர் சுல்தானின் தளபதிகள் காதர் யெகலாஸ்கான், அப்துல் அலீம் ஆகியோரும், பல இசுலாமியப் படை வீரர்களும் வந்தனர். பல முறை ஆர்க்காட்டு நவாபின் முற்றுகைக்குத் தஞ்சை உள்ளாகியது. சில ஆண்டுகள் ஆர்க்காட்டு நவாபின் ஆட்சியும் இங்கே நடைபெற்றது.

---

37. ப. 148, 193, 220, 221, 228

38. " கைக்கார ராமவடுகர் - வெகுதள
கர்த்தர்க ளாகிய சுத்தவீரர்
சொக்கலிங்க நாயக்கனும் - பங்காரு
சுப்பா நாயக்கன் அப்பு நாயக்கன்

அப்புநா யக்கனுடனே - அழகிரி
அய்யிலு நாயக்கன் மெய்யாலு
குப்பா நாயக்கனும் - கண்ணப்பன்
குஞ்சா நாயக்கன் சஞ்சீவி

வீரா நாயக்கனும் - இப்படி
வெகுவெகு பேர்களும் மகிமையதாய்
நேராக வந்தேனே - சிப்பாயி
நெடுவல் ஒருவன்கண்டான் வடுகன் என்னை

என்னையே அடுக்காச்சான் நீ யேவூரு
எக்கட நுஞ்சி வஸ்தாவு எக்கட போத்தாவு
பின்னும் நூ எவுர்மனுஷி - என்றுமவன்
பேசினான் கூட நானும் பேசினேன் "

திருவிடைமருதூர் நொண்டி நாடகம் பக் 40 - 42

மராட்டிய அரசர்களால் காவலுக்கும், வணிகத்துக்கும், யூனானி மருத்துவத்துக்கும் பல இசுலாமியர் தஞ்சாவூருக்குச் குடியேறினர். இசுலாமியர் பலர் உயர் அலுவலர்களாகவும் தஞ்சையில் இருந்துள்ளனர். அரண்மனை ஆவணங்கள் பலவற்றில் இசுலாமிய ஆண்டுமுறை பின்பற்றப்பட்டுள்ளது. இரண்டு கல்வெட்டுக்களிலும், பல செப்பேடுகளிலும் ஹிஜ்ரி ஆண்டுமுறை பயின்று வந்துள்ளது. பல மருத்துவ இலக்கியங்களிலும், திருவிடை மருதூர் நொண்டி நாடகம், சரபேந்திர பூபாலக் குறவஞ்சி போன்ற சிற்றிலக்கியங்களிலும் இசுலாமியர் பேசிய உருதுமொழி பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

தமிழ்க்கல்வெட்டுக்கள் பலவற்றில் உருதுச் சொற்கள் பயின்று வந்துள்ளன. அமீனா, அவுல்தார், ஐவேஜ், கவில், கஜம், கஜானா, கார்பார், சிரேஸ்ததார், தாசீல், பர்க்கானா, மகால், மிராசு, யதாஸ்து, ரஸ்தா, ஹுசூர் என்பன அவை.[39]

## ஆங்கில வழக்கு

ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் அலுவலர்களும், கிறித்தவ மதத் தலைவர்களும், இராணுவ அலுவலர்களும் தஞ்சையில் நிலையாகத் தங்கிய காரணத்தால் பல கல்வெட்டுக்களில் ஆங்கில மொழிச் சொற்கள் பயின்று வந்துள்ளன. தமிழ் நாட்டிலேயே முறையான ஆங்கிலப் பள்ளி தஞ்சையில்தான் முதலாவதாக ஏற்படுத்தப்பட்டது.

மராத்தி, தமிழ் ஆகியவற்றுடன் ஆங்கிலமும் பழக்கத்தில் இருந்தது. 10 ஆங்கில மொழிக் கல்வெட்டுக்கள் இருப்பதுடன் தமிழ்க் கல்வெட்டுக்களில் பின்வரும் ஆங்கிலச் சொற்கள் தமிழ் எழுத்துக்களில் பயின்று வந்துள்ளன. இன்று போலவே பேச்சு வழக்கிலும் நிருவாகத் தொடர்பிலும் ஆங்கிலம் ஓரளவு தாராளமாகவே பயின்று வந்துள்ளமை தெரிகிறது.

அக்கவுண்டாண்டு, இங்கிலீசு, இரெசிடென்ற், இஸ் அயினெஸ், ஏஜண்டு, ஏஜண்டாபீசு, கம்மிட்டி, கர்னல், கலேக்ட்டர், சற்வே, சீனியர், சூப்பிறண்டாண்டு, செண்டு, டிரஸ்டி, டெபுடி, நெம்பர், பங்களா, பண்டு, மானேஜர், றீபோற், லெப்டினான்று, லேட், ஹர் ஹைநீஸ், ஹிஸ் ஹைநீஸ்[40].

கம்மிட்டியார், டிரஸ்டிகள் எனத் தமிழ்ச் சொற்கள் போலவே விகுதி சேர்த்து ஆங்கிலச் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன.

---

39. ப. 6, 7, 14, 15, 108, 140, 182, 185, 199, 203
40. ப. 14, 15, 19, 21, 36, 80, 100, 104, 107, 140, 148

Accountant, English, Resident, His Highness. Agent, Agent Office, Committee, Colonel, Collector, Survey, Senior, Superintendent, Cent, Trustee, Deputy, Number, Bangalow, Fund, Manager, Repair, Lieutenant, Late, Her Highness.

'சாலிவாகன சகத்துக்கு நேரான இங்கிலீஸ்' என்று கூறிக் கிறித்தவ ஆண்டு கூறப்படுவதுடன் ஆங்கில மாதங்களும் புழக்கத்திற்கு வந்துவிட்டமையைக் காணுகின்றோம்.[41] ஏபிரல், சூலை, பீப்பரவரி, அகுட்டோபர் என எழுதப்பட்டுள்ளன.[42]

## மராத்திக் கல்வெட்டுக்களில் தமிழ்ச் சொற்கள்

மராத்திமொழிக் கல்வெட்டுக்கள் அனைத்தும் நாகரி எழுத்துக்களில் வெட்டப் பட்டுள்ளன. மோடி எழுத்துக்களில் கல்வெட்டுக்கள் வெட்டும் வழக்கம் இல்லை. அரசு நடைமுறை ஆவணங்களும், கடிதப் போக்குவரத்துக்களும், அரண்மனைக் குறிப்புக்களுமே மோடி எழுத்துக்களில் எழுதப் பெற்றுள்ளன.

மராத்திக் கல்வெட்டுக்களில் தமிழ்ச் சொற்கள் சில பயின்று வந்துள்ளன. அவை :

அங்கணம், எல்லை, குட்டை, குழி, கோபுரம், திங்கள், திருப்பணி, தேர் முட்டி, நஞ்சை, படித்துறை, பாத்திரம், புஞ்சை, மடப்பள்ளி ஆகிய சொற்களாகும்.

## அளவை முறைகள்

நிலங்களை அளக்கக் 'கோல்கள்' பயன்பட்டன. மராட்டியர் ஆட்சிக்காலத்தில் அவை ஒரே சீராக இல்லாமல் காலந்தோறும் இடந்தோறும் வேறுபட்டே வழங்கி வந்துள்ளன.

ஆச்சாள்புரத்தில் (1682) 21 அடிக்கோலும், பட்டிக்குடியில் (1704) 12 அடிக்கோலும், பூதலூரில் (1715) 10 அடிக்கோலும், தீபாம்பாள் புரத்தில் (1713) 14 அடிக்கோலும், திருமக்கோட்டையில் (சரபோசி I காலம்) 24 அடிக்கோலும், எழுமகளூரிலும் (1746) திருப்பூந்துருத்தியிலும் (1785) 18 அடிக்கோலும் இருந்ததாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.[44]

தஞ்சைப் பகுதியில் தொன்றுதொட்டு இருந்து வந்த நீட்டலளவைமுறை 'கருநாடக அடி' என்றும்.[45] கிழக்கிந்தியக் கம்பெனியின் நிருவாகம் வந்தபின் புழக்கத்தில் வந்த நீட்டலளவைமுறை 'கம்பெனி அடி' என்றும்[46] கூறப்பட்டன.

---

41. ப. 11, 14, 15, 19, 20, 29, 36, 40, 42, 44, 55, 67, 69, 70, 71, 72, 76, 80, 82, 84, 86, 87, 90, 92, 94, 98, 102, 104, 109, 127, 140, 148, 157,
42. ப. 15, 80, 127, 140
43. ப. 17, 18, 26, 27, 38, 59, 64, 124
44. ப. 223, 236, 180, 154, 121
45. ப. 124
46. ப. 110

இவைமட்டுமின்றி அடி கிஜம் போன்ற அளவை முறைகளும் இருந்தன வாகக் கல்வெட்டுக்கள் மூலம் அறிகின்றோம்.[47]

குழி, வேலி, கட்டு என்னும் நில அளவைகள் வழக்கிலிருந்தன.[48] எக்கர், செண்டு என்பனவும் புழங்கி வந்தன.[49]

தானியம் உரி, நாழி, மரக்கால், கலம், கோட்டை, உறை என்ற அளவை முறைகளில் அளக்கப்பட்டன.[50]

## சமய ஒருமைப்பாடு

மராட்டிய அரசர்கள் சைவ சமயம் சார்ந்திருந்தாலும் எல்லா மதங்களையும் மதித்துச் சமயப் பொறையுடன் நடந்து கொண்டனர்.

பல வைணவக் கோயில்களுக்குப் புதிய திருப்பணிகள் செய்து கொடைகளும் பல அளித்துள்ளனர். சில வைணவக் கோயில்கள் புதிதாகக் கட்டப்பெற்றன. சைவ-வைணவ ஒற்றுமையின் பொருட்டுச் சங்கரநாராயணர் வழிபாடு பெரிதும் வழக்கிலிருந்தது.[51]

பிரதாப சிங் நாகூர் தர்காவில் கோபுரம் கட்டினார்.[52] இசுலாமிய அலுவலர் கானுசாயபு அவர்கள் அனுமதியுடன் திருமக்கோட்டைச் செப்பேடு ஞானபுரீசுவரர் கோயிலுக்கு வழங்கப்பெற்றுள்ளது.[53]

கிறித்தவ அலுவலர் பலர் அரண்மனையில் உயர் அலுவல் புரிந்தனர். அவர்களில் டேவிட் பிள்ளை மிக முக்கியமானவர். இரண்டாம் சரபோசி காசி யாத்திரை மேற்கொண்டபோதுகூட டேவிட் பிள்ளை உடன் சென்றுள்ளார். அவரைப்பற்றிய கல்வெட்டுக்களில் 'தஞ்சாவூர் ராஜாவின் மந்திரி' எனக் குறிக்கப் படுகின்றார்.[54]

பாக்கியநாத பிள்ளை, வேதநாயக சாத்திரியார் போன்றவர்கள் மராட்டிய அரசர்களிடம் மிகவும் செல்வாக்குடன் விளங்கினர்.

சுவார்ட்சு, கோலாஃப் ஐயர், கீர்ன்ஸ் பாதிரியார் போன்ற ஐரோப்பியக் கிறிஸ்தவப் பாதிரிமார்களுக்குச் சரபோசியும், சிவாசியும், சிவாசி மகள் விசய மோகன முக்

---

47. ப. 6, 110, 101
48. ப. 116, 117, 121, 192
49. ப. 80
50. ப. 121, 168, 203, 207, 209, 236
51. ப. 37
52. ப. 184, 185
53. ப. 234
54. ப. 96

தாபாயும் கல்லறைகள் கட்டிக்கொடுத்த கல்வெட்டுக்களால் கிறித்தவப் பாதிரிமார்கள் அரசர்களிடம் பெற்றிருந்த செல்வாக்குப் புலப்படுகிறது.[55]

தமிழறிஞர் ஜி. யு. போப் சிவாசி மன்னரின் மிகச்சிறந்த நண்பராக விளங்கினார்.[56]

இவைகளின் மூலம் மராட்டிய அரசர்கள் எல்லா மதங்களையும் மதித்து நடத்திய தன்மை புலப்படுகிறது.

## தஞ்சைப் பெயர் வழக்கு-ஆலயத்திலும் ஆட்கள் பெயரிலும்

தஞ்சாவூர் என்று பெயர் அமைந்தமைக்குப் பல்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன. வெண்ணாற்றங்கரையில் எழுந்தருளியுள்ள ஆனந்தவல்லியம்மன் கோடியம்மன் வடிவெடுத்துத் 'தஞ்சன்' என்ற அரக்கனைக் கொன்றதாகக் கூறுவர். தஞ்சன் இறக்கும்போது வேண்டிக்கொண்டமைக்கிணங்க இவ்வூருக்குத் தஞ்சன் புரி >தஞ்சபுரி > தஞ்சாவூர் என்று பெயர் ஏற்பட்டது என்று 'தஞ்சபுரி மகாத்மியம்' என்னும் நூல் கூறுகிறது.

வெண்ணாற்றங்கரையில் மேற்கண்ட ஆனந்தவல்லியம்மனுடன் எழுந்தருளியுள்ள சிவனுக்குத் 'தஞ்சபுரீசுவரர்' என்று பெயர்.

தஞ்சை நகரம் கீழ வாயிலிலும், வெண்ணாற்றங்கரையிலும் முறையே உள்ள கீழசிங்கப் பெருமாள், மேல சிங்கப்பெருமாள் கோயில்களில் தாயார் இருவருக்குமே 'தஞ்சைநாயகி' என்பது பெயர். இக்கோயில்கள் இரண்டும் மராட்டிய அரசர் திருப்பணிகள் பல பெற்றவை.

துக்கோசி காலத்தில் (1729 - 1735) வணிகர் ஒருவர் 'தஞ்சா செட்டி' என்றும்,[57] இரண்டாம் சரபோசி காலத்தில் (1798-1832) தஞ்சை நகர வெட்டியான் ஒருவன் 'தஞ்சன்' அல்லது 'தஞ்சான்' என்றும் பெயர்கள் வைத்துக்கொண்டுள்ளனர்.[58] தஞ்சைப் பெரிய கோயில் முன் மண்டபத்தில் 'தஞ்சை நாயக பிள்ளை' என்ற பெயர் வெட்டப்பட்டுள்ளது.[59] இம்மண்ணின் மைந்தர்களான இவர்கள் தஞ்சையின் பெயரைத் தாங்கள் வைத்துக் கொண்டமை ஊரின்மீது அவர்களுக்குள்ள ஆழ்ந்த பற்றைக் காட்டுகிறது.

---

55. ப. 82, 84, 85, 91, 93
56. ப. 98
57. ப. 212
58. ப. 50, 51
59. தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல் துறை கண்டுபிடிப்பு.

## அறம் காக்க

கோயில் அறக் கொடைகள் தடையில்லாமல் என்றும் நடைபெற வேண்டும் என்பதை விரும்பிய கொடையாளர்கள் கல்வெட்டுக்களின் இறுதியில் கொடுத்துள்ள ஓம்படைக்கிளவிகள் பலவாறு அமைந்துள்ளன. இவற்றிலிருந்து அக்கால எண்ணங்கள் பற்றி ஓரளவு அறிய முடிகிறது.

'மேற்படி தர்மம் நடவாவிட்டால் அதிகாரியவர்களுக்குத் தெரியப்படுத்தி ஷெ தர்மத்தைக் கிறமமாக பரிபாலினம் பண்ணிவற வேணுமென்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்'[60]

'தர்மம் நடத்தத் தவறினால் தர்ம சிந்தையுள்ளவர்கள் விசாரித்து நடத்துவார்களென்று நம்புகிறேன்.[61]

'இந்தத் தர்மம் பரிபாலனம் பண்ணின பேர் கயிலாச பதவியிலே சந்திராதித்தாள் உள்ளமட்டும் இருப்பார்கள் இந்த தற்மத்துக்கு விகாதம் பண்ணினபேர் கெங்கைக் கரையில் காராம் பசுவை கொண்ண தோஷத்திலே போவான்'[62]

'யிந்தத்தற்மத்தை யாதாமொருத்தர் பரிபாலனம் பண்ணிக்கொண்டு வருவார்களோ அவர்கள் காசியிலே அனேக கோடி கோதான பூதான கன்னிகாதான பலத்தையும் அனேகஞ் சிவலிங்கப் பிறதிட்டா பலத்தையும் பெற்றுச் சுகமேயிருப்பார்கள்'[63]

'யிந்த தற்ம்மத்துக்கு யாதாமொருவர் விகாதம் பண்ணினால் காசியிலே கெங்கைக் கரையிலே கோவதை ப்ரு'வதை பண்ணின தோழத்திலே போகக் கடவோறாகவும் சோழ மண்டலத்திலே தேவாலையம் பிறம்மாலயத்திலே எத்திணை விளக்கு யெரியுதோ அத்திணை விளக்கை அவிச்ச தோழத்திலே போவார்களாகவும்'[64]

'இந்த தர்மம் விசேஷித்து உண்டாக்கினவர் இகலோக பாக்கியம் பரலோக மோட்சம் பெறுவாராகவும்'[65]

'துலுக்கரிலே யாதாமொருவன் விகாதம் பண்ணுரவன் மக்காவிலே பண்ணியை கழுத்தை அறுத்த தோஷத்திலே போவார்கள்'[66]

---

60. ப. 6
61. ப. 15
62. ப. 119
63. ப. 204
64. ப. 220, 221
65. ப. 228
66. ப. 231

## அரிய சில செய்திகள்

1. தஞ்சை மாவட்டத்தில் ஆற்றுத் தண்ணீர் பாயும் நீண்ட காலப் பயிரை பசானம் அல்லது சம்பா என்றும், குறுகிய காலத்தில் மழை நீரால் நடை பெறும் விவசாயத்தைக் குறுவை அல்லது கார் என்றும் அழைப்பர். முதலாம் சரபோசி மன்னர் 1715ஆம் ஆண்டு பசானத்தில் அரைவேலியும்,காரில் அரை வேலியும் பூதலூர் ஆபத்சகாய சுவாமிக்குக் கொடையாகக் கொடுத்தார். இரண்டு போக விளைவிலும் வருட முழுவதும் இறைவனுக்கு நெல் கிடைக்க வேண்டும் என்று இவ்வாறு கொடை கொடுக்கப்பட்டது.

2. துளசா மன்னர் திருப்பூந்துருத்தியில் 1771ஆம் ஆண்டு பாசன வசதிக்காகக் குடமுருட்டி ஆற்றைப் புதிதாக வெட்டினார். ஆறு புதியதாக வெட்டப்பட்ட இடம் கீழத்தெரு அம்பலக்காரருக்குச் சொந்தமானது. அவருக்குரிய 10 கட்டு நிலத்தில் புது ஆறு வெட்டப்பட்டது. அதன்பொருட்டு அவருக்கு 160 பொன் நட்ட ஈடு அளிக்கப்பெற்றது.

3. 1872ஆம் ஆண்டு ஒரத்தநாடு முக்தாம்பாள் சத்திரம் பழுது பார்க்கப்பட்டது. திருப்பணி செய்த ஆசாரி மரத்திலேயே அந்தச் செய்தி முழுவதையும் விரி வாகச் செதுக்கி வைத்துள்ளான்.

4. மன்னர் சாசி காலத்தில் (1685) வாவாசி பண்டிதரய்யன் மதுரை நாயக்க ருடன் நடத்திய போரில் வெற்றியடைந்தார். அந்த வெற்றிக்கு அறிகுறி யாகப் பட்டுக்கோட்டைக் கோட்டை கட்டப்பட்டது.

5. 1814இல் ஐரோப்பாவில் நடைபெற்ற போரில் நெப்போலியன் தோல்வி யுற்றதைக் கண்டும், ஆங்கிலேயர்களின் வெற்றியைக் கண்டும் மகிழ்ந்த சரபோசி ஒரு பெரிய நினைவுக் கோட்டை, உப்பரிகை ஆகியவற்றைக் கட்டினார்.

6. சகோதரர்களான சகசியும் சரபோசியும் இணைந்து ஆட்சி நடத்திய செய்தி சில கல்வெட்டுக்களில் கூறப்படுகின்றது.

7. நிலம் கொடை கொடுக்கும்போது அந்நிலத்தை அரண்மனைச் சனங்களும் (அதிகாரிகள்) நாட்டாரும் தொடர்புடைய கொடைக்குரியோரும் சேர்ந்து அளந்து கொடையாக அளித்தனர்.

8. உழவர்கள் தங்கள் விளைச்சலிலிருந்தும், வணிகர்கள் பேட்டை,பட்டடைகள், சந்தைகளில் விற்பனையாகும் பொருளுக்கு ஏற்றவாறும் உள்ளூர்க் கோயில் களுக்கு மகமைக் கொடை அளித்தனர்.

9. ஊர்ப்பகுதிகளைக் காவல் காக்கும் பொருட்டு காவல்காரர்கள் நெல் சேமிப்பி லிருந்து ஒரு பகுதியைப் பெற்றனர்.

10. புதிய ஊர்கள் ஏற்படுத்தும்போது இலவசமாக நிலம் அளிக்கப்பட்டது. நிலத்தை மக்கள் அனுபவிக்கலாம். ஆனால் விற்பனை செய்யக்கூடாது. யாரும் வாங்கக் கூடாது என்றும் எச்சரிக்கப்பட்டனர்.

11. அதிகாரிகள் நாட்டின் உட்பகுதிகளுக்குச் செல்லும்போது மக்கள் நேரில் முறையிட்டுக் குறைகளைக் கூறினர். பெரும்பாலும் அவை உடனுக்குடன் தீர்த்து வைக்கப்பட்டன.

12. உழுகுடி உழவர்களின் நில வருவாய் கணக்கிடும்போது அரண்மனை வாரம் (அரசுக்குச் செலுத்த வேண்டிய பங்கு) குடிவாரம் (நிலச்சொந்தக்காரர்கட்குச் செலுத்தும் பங்கு) போகத் துண்டு (மீதி) ஆகும் நெல்லே கணக்கிடப்பட்டது.

13. அரசர்களின் நலத்தின் பொருட்டுக் கோயில்கட்குக் கொடை கொடுக்கப் பட்டது.

14. புதியதாக ஏற்படுத்தப்பெறும் வணிகத்தலங்களின் முன்னேற்றம் கருதிச் சில காலத்துக்கு அங்கு விற்பனையாகும் பொருட்களுக்கு சுங்கம் போன்ற வரிகள் நீக்கப்பட்டன.

15. தஞ்சை மாவட்டத்தின் பெருமக்களான கள்ளர் பெருமக்கள், வன்னியப் பெரு மக்கள் ஆகியோரின் தலைவர்கள் பாளையக்காரர்களாக விளங்கினர்.

## பதிப்புமுறை

தஞ்சை நகரத்தில் உள்ள கல்வெட்டுக்களை முதலிலும், பின் தஞ்சை வட்டம், தஞ்சை மாவட்டம், பிற மாவட்டங்கள், பிற மாநிலம் என்ற வரிசையிலும் இங்கு கல்வெட்டுக்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. ஒரு கோயிலைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் காலம் வேறுபட்டாலும் ஒரே இடத்தில் தரப்பட்டுள்ளன.

கல்வெட்டில் சேர்க்க வேண்டிய எழுத்துக்கள் பகரக் குறிக்குள்ளும் [ ] ; நீக்க வேண்டிய எழுத்துக்கள் பிறைக்குறிக்குள்ளும் ( ) காட்டப்பெற்றுள்ளன. ஒருசில இடங்களில் மட்டுமே திருந்திய வடிவம் அடிக்குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. கல் வெட்டுக்களும்,செப்பேடுகளும் பேச்சுவழக்குச் சொற்கள் மலிந்து எழுதப்பட்டுள்ளன. அக்கால மொழிநிலையை ஆராயும்பொருட்டு அவை உள்ளது உள்ளவாறே பதிப் பிக்கப்பட்டுள்ளன.

மராட்டியர் கல்வெட்டுக்கள் கோயில்களில் பெரும்பாலும் தனிக்கல்லில் பொறித்திருக்கும் காரணத்தால் அக்கற்கள் திருப்பணிகளின்போது அப்புறப்படுத்தப் பட்டுச் சில கல்வெட்டுக்கள் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்துவிட்டன.

கல்வெட்டுக்களுக்கு அரேபிய எண்களும்,செப்பேடுகளுக்கு ரோமன் எண்களும் வரிசை எண்களாக அளிக்கப்பட்டுள்ளன.

## மங்கள விலாசம்

சிவாசி மன்னர்க்கு (1832-1855) 20 மனைவியர். தஞ்சை அரண்மனையில் அரசியராக விளங்கிய இவ்விருபது மனைவியரைத் தவிரத் தனக்குரிய வைப்பு மகளிர் பலரைத் தனியாகச் சிவாசி மன்னர் வைத்திருந்தார். அந்தப்புர மகளிராகிய அவர்களுக்கு 'மங்கள விலாச மகளிர்' 'மங்கள வாச மகளிர்' 'ஸ்ரீமன் மங்கள விலாச மகளிர்' எனப் பெயர்கள் வழங்கின.

1855இல் சிவாசி மன்னர் இறந்தபோது மாவட்ட ஆட்சித் தலைவர் 'போர்பஸ்' அரசுக்கு எழுதிய கடிதமொன்றில் சிவாசிக்கு 303 வைப்பாட்டிகள் என எழுதியுள்ளார். இது மிகையான எண்ணிக்கையாக இருக்கக்கூடும். அவர் பணிப் பெண்கள் பலரையும் சேர்த்து அவ்வாறு எழுதியிருக்கலாம்.

28—7—1858 அன்று 'ஆக்டிங் ரெசிடென்ட்' அவர்கள் மங்கள விலாசத் திற்கு வந்து விசாரிக்கும்போது மங்கள விலாச மாதர் 42 பேர் என்று கணக் கிட்டுள்ளார். சிவாசி உயிருடன் இருந்தபோது 48 மங்கள விலாச மகளிர் இருந்துள்ளனர். சிவாசி இறந்த பின்னர் மங்கள விலாச மகளிர் ஹஜூர் மகாலில் பாதிப்பேரும் அசல் மகாலில் பாதிப்பேருமாக இரு பிரிவாகத் தங்கியிருந்தனர்.

மங்கள விலாச மகளிர் 'தாசிகளா ?' என்ற கேள்விக்கு அரண்மனை அதிகாரியான சிரேஸ்ததார் வெங்கட்டராவ் அவர்கள் ரெசிடென்டுக்குக் கீழ்வருமாறு பதில் அளித்தார்.

> '' தாசிகளும் தோழிகளும் அநேக புருஷர்களுடன்
> சகவாசஞ் செய்வார்கள். அவர்களுக்கு மானமோ
> வெட்கமோ கிடையாது. விபசாரம்தான் அவர்
> களுடைய தொழில். மங்கள விலாசப் பெண்கள்
> அப்படி அல்ல. மானத்துடன் ஒரே புருஷனிடத்தில்
> இருந்து வருபவர்கள். அந்தப் புருஷனுக்குப் பின்னர்
> பிழைத்திருக்கும் வரையில் வெளியே போகாமல்
> புருஷன் இறந்துபோன பின்பு ஸ்திரி புழங்க வேண்டிய
> முறைப்படி இருப்பார்கள்''

மனைவியர் போலவே இவர்களும் இருந்தனர் என்பது இதன் மூலம் தெரிகிறது.

இம்மங்கள விலாசத்தார்கள் 'சத்மம்' என்று அழைக்கப்பெற்றனர். 'மங்கள விலாச சத்மத்தின் மாதோஸ்ரீ கிஷ்ணா பாயி பெரிய அம்மா' என்று ஒருவர் குறிக்கப் பட்டுள்ளார்.

மங்கள விலாசத்தைக் கவனித்துக் கொள்ளக் காரியஸ்தர்கள் என்ற தனி அலுவலர் இருந்தனர். பாபா ராவ் அப்பா, அப்பா சுபேதார், ஜம்லை ராவ் அப்பா ஆகியோர் பெயர்கள் காரியஸ்தர்களாகக் குறிக்கப்பட்டுள்ளன.

மங்கள விலாச மகளிர்கட்குக் குழந்தைகள் பிறந்துள்ளன. 1855இல் 10 பெண் குழந்தைகளும் 15 ஆண் குழந்தைகளும் இருந்தனர். இக்குழந்தைகள் அனைவருக்கும் 'விஜய' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

'விஜய வரதானந்தஜி' என்று ஆண் குழந்தையும் 'விஜய வரதாம்பா பாயி' என்று பெண் குழந்தையும் பெயர் பூண்டிருந்தனர்.

இக்குழந்தைகட்கு அரண்மனை அரசியரின் குழந்தைகளைப் போலவே ஜாதகர்மம், நாமகரணம், சூர்யாவலோகனம், அன்னப் பிராசனம் முதலிய குழவிச் சடங்குகள் பலவும் முறைப்படி நடைபெற்றன. மங்கள விலாச மாதரின் பையன் களின் திருமணம் அரண்மனைத் திருமணங்கள் நடைபெறும் சந்திரமௌலீசுவரர் சந்நிதியிலேயே நடைபெற்றன.

மங்கள விலாச மாதர் இறந்தால் அரசர் இறந்த இடத்துக்கு வருவார். ஆனால் அந்திம ஊர்வலத்திலோ அல்லது இறுதிச் சடங்குகளிலோ அரசர் நேரில் கலந்து கொள்ள மாட்டார். குழந்தைகள் இறந்தால் அரண்மனை அலுவலர்களே சடங்குகளை முன்னின்று நடத்துவர்.

மங்கள விலாச மாதர்கட்குத் தனிச் சமையல் கீழ வீதியில் செய்யப்பட்டது. அவர்கள் செலவுகட்கென்று மாதச் சம்பளம் அளிக்கப்பட்டது. சிவாசி மறைவுக்குப் பின்னர்கூடச் சம்பளம் எனப்படும் 'மொயின்' அவர்கட்குத் தொடர்ந்து அளிக்கப் பட்டது. இவையன்றி மிகுதியான நகைகளும் அளிக்கப்பட்டன.

மங்கள விலாச மாதர்களுக்குப் பொதுவாகக் கும்பகோணம் வட்டம் மணவாளப் பேட்டை எனப்படும் கொந்தகை என்னும் ஊரில் 241 ஏக்கர் 32 சென்டு நிலமும் நன்னிலம் வட்டம் பூங்குடியில் 218 ஏக்கர் 23 சென்டு நிலமும் வடமட்டத்தில் 268 ஏக்கர் 73 சென்டும் விடப்பெற்றிருந்தன. அரசருக்குச் சொந்தமான சூரக்கோட்டை நில வருவாயும் கீழ வீதியில் வீடுகளும் மங்கள விலாச மாதர்கட்கு ஒதுக்கப்பட்டிருந் தன. தெற்கு வீதியில் சதாசிவ ராவ் அவர்களிடமிருந்து விலைக்கு வாங்கிய பெரிய மாளிகை 'மங்கள விலாச அரண்மனை' எனப்பட்டது.

மங்கள விலாச மாதரில் மராட்டிய மரபைச் சேர்ந்தவர்கள் மட்டுமில்லாமல் பிராமணர், கவரைநாயுடு, கிறித்தவப் பெண்களும் பிற தமிழ்ப் பெண்களும் இருந் தனர்.

மங்கள விலாசப் பெண்கள் 'பாய்' என்றும் 'அம்மா' என்றும் அழைக்கப்பட்டனர். இப்பெண்கள் தங்களைக் குறிக்கும் போது மங்கள விலாச மகளிர் என்றே குறித்துக் கொண்டனர்.

'கத்திகட்டி விவாகம் செய்து கொண்ட' 'வாள்மணம் புரிந்து கொண்ட' 'கட்க மணம் செய்த' என்றும் குறித்துக் கொண்டனர்.[1] அரசர் இறந்த பின்னர் சுமங்கலிக் கோலம் நீங்கி விதவைகளாகவே மங்கள விலாச மகளிர் இருந்தனர்.

இவர்களில் பலர் பல கோயில்கட்குக் கொடைகள் அளித்துள்ளனர். இம் மங்கள விலாச மகளிரின் கொடைக் கல்வெட்டுக்கள் சிலவற்றை இப்பகுதியில் காணலாம்.

---

1. இந்தத் திருமணம் மராட்டிய அரசர்கள் செய்துகொள்ளும் முறையான திரும்ணத்திலிருந்து வேறுபட்டது. முறையான திருமணத்தில் அரசர் மணமகளுக்குத் தாலி அணிவிப்பார். அம் மகளிர் அரசியர் என்றும் அழைக்கப் பெறுவர். ஆனால் இத்திருமணத்தில் அரசருக்குப் பதிலாக மணமேடையில் அரசரது வாள் வைக்கப்பட்டிருக்கும். சுமங்கலியாக இருக்கும் பிராமணப் பெண் அரசருக்குப் பதிலாக மாங்கல்யத்தை அணிவிப்பார்.

சிவாசியின் மங்கள விலாச மகளிரும் இரண்டாம் சரபோசியின் கல்யாணமகால் மகளிரும் இவ்வகை வாள்மணம் செய்துகொள்ளப்பட்டவர்களே. பிற மராட்டிய அரசர்களும் இவ்வகை மணம் செய்து கொண்டார்கள். இவர்களைச் சேர்த்துக் கொள்ளப் பெற்ற மனைவியர் என்று போன்ஸ்லே வம்ச சரித்திரம் கூறும்.

இவ்வாறு மணம் செய்து கொண்டவர்களுக்கு அரசியர் என்னும் நிலை இல்லை. இவர் கட்குப்பிறந்த ஆண் மக்களுக்கு அரசுரிமை இல்லை என்று கூறப்பெற்றாலும் தஞ்சையை ஆட்சி புரிந்த பிரதாபசிங் (1739-1763) அமர்சிங் (1787-1798) இருவரும் வாள்மணம் புரிந்து கொண்ட மகளிருக்குப் பிறந்தவர்களே என்பது குறிப்பிடத்தக்கது.

# 4. தஞ்சாவூர் தண்ணீர்த் தொட்டிக் கல்வெட்டு

தஞ்சாவூர் கீழ வீதியில் தமிழ்ப் பல்கலைக் கழக அரண்மனை வளாகத்தின் எதிரில் சாலையின் கீழ்ப்புறம் தண்ணீர்த் தொட்டி ஒன்றுள்ளது. அதன் அருகே சுவரில் பதிக்கப்பட்ட கல்லொன்றில் இக்கல்வெட்டு உள்ளது.

அரண்மனையிலிருந்து வெளியே வரும் குதிரைகளும், வழியில் செல்லும் கால்நடைகளும் தம் தாகவிடாயினைத் தீர்த்துக் கொள்ளும் வகையில் சாலை ஓரத்தில் பெரிய அளவில் இத்தொட்டி அழகிய வேலைப்பாடுகளுடன் கட்டப் பெற்றுள்ளது.

தஞ்சாவூர் மராட்டிய மன்னரில் கடைசி மன்னரான சிவாசியின் (1832-1855) இராணிமார்களில் தீபாம்பா பாயி சாகேப், இராம குமரம்பா பாயி சாகேப் ஆகிய இருவரும் 5—11—1901 ஆம் ஆண்டு இத்தண்ணீர்த் தொட்டியைக் கட்டிப் பொது மக்கள் பயன்படுத்த நன்கொடையாக அளித்தனர்.

இந்த அரசியர் இருவரும் உடன் பிறந்த சகோதரிகள். இருவரும் யஸ்வந்த ராவ் ரகுநாதராவ் ஜாதவ் என்பவரின் பெண் மக்கள் ஆவர்.

18—7—1852 அன்று மன்னர் சிவாசி ஒரே நாளில் மணம் செய்து கொண்ட 17 மனைவிமார்களில் இவர்கள் இருவரும் அடங்குவர். இவர்களைச் 'சகோதரி இராணிகள்' என்றே அரண்மனை வட்டாரத்தில் அழைத்தனர். கல்வியில் தேர்ச்சி பெற்றிருந்த இவ்விருவரும் சரசுவதி மகாலிலிருந்து பல நூல்கள் பெற்றுப் படித்தனர் என்பதைச் சில ஆவணங்கள் கூறுகின்றன.

தீபாம்பா பாயி சாகேப்பிற்குப் 'பத்தராயி' என்றும், இராம குமரம்பா பாயி சாகேப்பிற்கு 'இந்திராயி' என்றும் குடும்பப் பெயர் வழங்கிற்று.

இக்கல்வெட்டு ஆங்கிலத்திலும் தமிழிலும் சிவலிங்க வடிவில் பொறிக்கப் பெற்று அழகிய முறையில் அமைக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

**TANJORE PALACE**

**A**

**GIFT**

**BY**

**H. H. M. DEEPAMBA BOYEE SAHIB**

**AND**

**H. H. M. RAMA KUMARAMBA**

**BOYEE SAHIB**

**RANEES OF THE LATE**

**H. H. SIVAJEE MAHARAJAH**

**OF**

**TANJORE**

*5 — 11 — 1901*

*தஞ்சாவூர்*

*அரண்மனை*

H. H. *சிவாஜீ மஹாராஜா அவாள்*

*மகா இராணிகள்*

H. H. M. *தீபாம்பா பாயீ சாஹேப்*

H. H. M. *ராம குமராம்பா பாயீ சாஹேப்*

*அவர்கள்*

*தண்ணீர் தொட்டி தர்மம்.*

*பிலவ ஸூ அர்ப்பசி மீ 20உ*

# 5 - 7. தஞ்சாவூர் மணிகர்ணிகேசுவரர் கோயில் கல்வெட்டுக்கள்

இரண்டாம் சரபோசி ஆழ்ந்த சமய நம்பிக்கை கொண்டவர். சைவர்கள் முத்திநகர் ஏழில் ஒன்று எனக் கருதும் காசித் தலத்துக்குச் சரபோசி மன்னர் 23—9—1820 அன்று தன் பயணத்தை 3000 பேர் கொண்ட பெருங்குழுவுடன் மேற்கொண்டார். அப்பெரும் பயணம் முடிந்து 24—4—1822 அன்று தஞ்சாவூர் வந்தடைந்தார்.

10—7—1821 அன்று காலை 8 மணியளவில் காசி சென்று சேர்ந்த சரபோசி மன்னர் அங்குள்ள திருப்பனந்தாள் காசி மடத்தில் தங்கினார். அடுத்த நாள் கங்கையாற்றில் மணிகர்ணிகை கட்டத்தில் (படித்துறை) திருமுழுக்காடினார். அங்குள்ள மணிகர்ணிகை கட்டத்தில் சில திருப்பணிகளையும் செய்ததோடு நாள் தோறும் இம்மணிகர்ணிகா தீர்த்தத்தில் சரபோசி மன்னர் நீராடினார். அதன் நினைவாக,சரபோசி மன்னர் தஞ்சாவூர்க் கோட்டைக்குள் கீழராசவீதியில் கட்டிய கோயிலே இம்மணிகர்ணிகேசுவரர் கோயில் ஆகும். 1827இல் இக்கோயில் கட்டி முடிக்கப்பெற்றுக் குடமுழுக்குச் செய்யப்பெற்றது. சரபோசி மன்னர் புதியதாகக் கட்டிய காரணத்தால் இக்கோயில் 'புதுக்கோயில்' என்றும் அழைக்கப்பெறும்.

இக்கோயில் விமானம் பெருமழையினால் சாய்ந்து பின்னர் திருப்பணி செய்யப் பெற்றது. அம்மன் பெயர் மங்களநாயகி. மூல இலிங்கமும், விநாயகர் சந்நிதியில் உள்ள இரண்டு இலிங்கங்களும், வேறு எங்கும் இல்லாத வகையில் பிரம்மா, விட்டுணு, மகேசுவரர் ஆகிய மும்மூர்த்திகள் எழுந்தருளியுள்ள இலிங்க வடிவங்களும் காசியிலிருந்து கொணர்ந்தவை என்பர். தஞ்சை மராட்டியர் அரண்மனைப் பாயி மார்களில் ஒருவர் 'மணிகர்ணிகா பாயி' எனப் பெயர் பெற்றிருந்தார்.

## 5. நடராசர் மண்டபத் தென்சுவர்க் கல்வெட்டு :

குரோதன ஆண்டு ஆவணி மாதம் 9 ஆம் நாள் ( 13—9—1865 ) மங்கள விலாசம் அகிலாண்டபாயி அம்மாள் அவர்கள் நடராசர் மண்டபத்தைக் கட்டிய செய்தி இக்கல்வெட்டில் குறிக்கப்பெறுகிறது.

### கல்வெட்டு

1 உ
2 ஸொஸ்தஸ்ரீ நிற்ப
3 சாலியவாகன சகா
4 ற்த்தம் 1787 க்கு
5 குறோதனா ஷு சிம்ம மீ
6 9 உ புதன்(க்)கிழமை உ
7 த்திற நட்சத்திறம்
8 சித்த னாம யோகம் க
9 வுல வாகறணம் பக
10 ல் 3 னாழிகை சிம்ம ல
11 க்கினத்தில் ஸ்ரீமன் ம
12 ங்கள விலாச ஸத்ரு
13 அகிலாண்ட பாயி
14 அம்மா அவற்களா
15 ல் யிந்த தற்மம் செ
16 ய்யப்பட்டிருக்கிறது

## 6. மகாமண்டபக் கிழக்குச் சுவர்க் கல்வெட்டு - அ :

19—12—1892 ஆம் ஆண்டு மங்கள விலாசம் பெரிய தர்முபாய் அம்மாள் அவர்கள் 250 ரூபாய் மூலப்பொருள் வைத்து அதற்கு வட்டியாகக் கிடைக்கும் 13 ரூபாயில் மணிகர்ணிகேசுவரர் கோயிலில் ஆடிப் பதினெட்டாம் பெருக்கு விழா, அன்னாபிடேகம், நைவேத்தியம், சுவாமி திருவீதி உலா ஆகியன அரண்மனை தேவஸ்தான அலுவலர் நாகராஜ ராமாஜி பண்டிதர் அவர்கள் மூலம் செய்த ஏற்பாடுகளை இக்கல்வெட்டு குறிக்கிறது.

## கல்வெட்டு

1. உ
2 19—12—1892
3 தஞ்சாவூர் அறமனை ஸ்ரீமன்
4 மங்கள விலாஸம் பெறிய
5 தர்ம்முபாய் அம்மாளாகிய
6 நாம் கோட்டைக்குள் ஸ்ரீமணிக
7 றணிகேசுவற ஸ்வாமிக்கு உ
8 பயமாக ஷெ தேவஸ்தாநம்
9 ஏஜண்டாபீசில் 1892 ம் ௵ ஜூ
10 ன் மீ 23 உ ரூபாய் 250 குடுத்
11 து சிட்டா தாக்கலாகி யிருக்குற துக
12 யின் விருத்தி அம்சத்தில் வரு
13 ஷந்தோரும் பதிநெட்ட
14 ாம் பெருக்குக்காக ரூப
15 ாய் 8 அன்னாபிஷேக
16 த்துக்கு ரூபாய் 5 ம் கு
17 டுத்து அபிஷேகம் நெ
18 வேத்தியம் புறப்பா
19 டு வகைறா சிலவை நட
20 த்தி வருவதாக ஏஜண்
21 டு ஸ்ரீ நாகறாஜ றாமாஜீ ப
22 ண்டிதறவர்களால்
23 1892 ம் ௵ நவம்பர் மீ
24 12 உ யுள்ள 27 நெ இயா
25 தாஸ்து நமக்கு கெடை
26 த்திருக்குற விபறத்தை
27 ஸகலருக்கும் எச்சறி
28 க்கப்பட்டிருக்குறது

## 7. மகாமண்டபக் கிழக்குச் சுவர்க் கல்வெட்டு - ஆ :

**23—4 –1897** ஆம் ஆண்டு மங்கள விலாசம் கோரி இலட்சுமிபாய் அம்மாள் அவர்கள் மணிகர்ணிகேசுவரர் காலைச் சந்திப் பூசைக்காகஅரண்மனைத் தேவத்தான ஏஜண்டு டி. துரைசாமி அய்யங்கார் மூலமாக 1000 ரூபாய் மூலப்பொருள் வைத்து

அதற்கு வட்டியாகக் கிடைக்கும் 60 ரூபாயில் செய்த ஏற்பாடுகளை இக்கல்வெட்டுக் கூறுகிறது. 1892 இல் சீனியர் ராணி காமாட்சியம்பா பாயி இறந்ததும் உமாம்பா பாயி சீனியர் ராணி ஆகியுள்ளார் என்பது இக்கல்வெட்டு மூலம் தெரிகிறது.

## கல்வெட்டு

1 உ
2 1897 ௵ ஏபிரல் மீ 23 உ தஞ்சாவூர்
3 அரண்மனை ஹ்'ஸ் ஹைனஸ் சிவா
4 ஜீ மகாராஜா அவர்கள் மண மங்கள
5 விலாசம் மாதோஸ்ரீ கோரி லெட்சுமு
6 பாயி அம்மாளாகிய நாம் ஷை அரண்
7 மனை இலாக்கா தேவஸ்தானத்துக்குள்ப
8 ட்ட தஞ்சாவூர் கோட்டைக்குள் கீழ வீ
9 தி ஸ்ரீ மணிகரணிகேசுவர சுவாமிக்
10 கு கால சந்தி பூஜை நெய்வேத்தியத்தி
11 ற்க்கு உபயமாக ஷை இலாகா தேவஸ்த
12 ானம் ஆதீனஸ்தரும் சீனியர் றாணி அ
13 வர்களுமாகிய ஹர் ஹைநீஸ் மாதோ
14 ஸ்ரீ உமாம்பா பாயி சாயேப் அவர்
15 களுடைய ஏஜண்டு D. துரைசாமி அ
16 ய்யங்காரவர்கள் முலமாய் ஷை தே
17 வஸ்தானம் ஆபீசு கஜானாவில் ரூ 1000
18 பண்டாக கொடுபட்டு அதின் விருத்தா
19 ம்சத்தில் கூடுதலாகிற வருஷம் 1க்கு ரூ 60
20 தைக் கொண்டு ஷை தர்மம் நிரந்தரமா
21 க நடத்தப்பட்டு வருகுறது அப்ப
22 டி தர்மம் நடத்தத் தவறினால் தர்ம
23 சிந்தனையுள்ளவர்கள் விசாரித்து ந
24 டத்துவார்களென்று நம்புகிறேன்
25 கோரி லெட்சுமு பாய் அம்மாள்

# 8. தஞ்சாவூர் அரண்மனைக் கல்வெட்டு

தஞ்சாவூர் அரண்மனையின் உள்ளே இப்போது வேளாண்மைக் கிடங்கு உள்ள கீழ்த்தளம் ஒன்றில் கல் தூணின் கீழ்ப்பகுதியில் நான்கு பக்கங்களிலும் இக்கல்வெட்டு மராத்தி மொழியில் வெட்டப்பட்டுள்ளது.

இப்பொழுது தஞ்சைக் கோட்டைக்குள் இருக்கும் அரண்மனையின் பெரும் பகுதியும், கோட்டையும் தஞ்சை நாயக்கர் காலத்தில் கட்டப்பெற்றனவாகும்.

அரண்மனையில் மராட்டியர் தர்பார் மண்டபம் என்னும் பகுதி மராட்டிய மன்னர் சாசி (1684 - 1711) காலத்தில் கட்டப்பெற்றது. கீழவீதியை ஒட்டியுள்ள ஏழு அடுக்கு மாடியை இரண்டாம் சரபோசி மன்னர் (1798 - 1832) கட்டினார்.

1800 இல் கசேந்திர மகாலுக்குத் தென்புறம் 'கௌரி விலாசம்' என்ற பகுதியை இரண்டாம் சரபோசி மன்னர் புதியதாகக் கட்டினார் என்ற செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. சுகர்சன் ஆண்டு 1221.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

1 *ஶ்ரீ*
*கஜேந்திர மகாலுக்குத் தென்புறம்*
*கௌரி விலாசம்*
*ரௌத்திரி வருசம்*
2 *மாதம் ஆவணித்திங்கள் சுகர்சன்*
*இகிதே மயானதன்*
3 *ஆலப் மாதம் ரபிலாவல்*
*மகாராஜா ஶ்ரீசரபோஜி ராஜா சாகேப்*
4 *அவர்கள் புதிய மகால் கட்டுவித்தார்*

# 9, 10. தஞ்சாவூர் வரதராசப் பெருமாள் கோயில் கல்வெட்டுக்கள்

**கிழக்கு ராச வீதியில் அரண்மனையின் தென்கீழ்ப் பகுதியை அடுத்து இக்கோயில் உள்ளது. தஞ்சை நாயக்கர் காலத்தில் கட்டப்பெற்ற கோயிலாக இருக்கலாம்.**

## 9. இரண்டாம் சரபோசி கல்வெட்டு :

**வரதராசப் பெருமாள் கோயிலில் மகாமண்டப நுழைவாயில் நிலையின் இருபுறமும் இக்கல்வெட்டு மராத்தியில் பொறிக்கப்பட்டுள்ளது.**

**1804 ஆம் ஆண்டு இரண்டாம் சரபோசி மன்னர் இக்கோயிலில் வரதராசர் சன்னிதியிலும், தனிக்கோயில் பெருந்தேவி சன்னிதியிலும், திருச்சுற்றிலும் செய்த பல்வேறு திருப்பணிகளை இக்கல்வெட்டு விரிவாகக் கூறுகிறது.**

### கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகம் 1726 தற்போது நடப்பு கலியுகம் 4905 ரத்தாட்சி வருடம் ஜேஷ்ட சுத்த பிரதமை வெள்ளிக்கிழமையாகிய இந்நாளன்று பகல் 6 நாழிகைக்கு மேல் 8 நாழிகைக்குள் இந்த நன்னாளில் ராசஸ்ரீ சரபோசி ராசா அவர்கள் வரதராஜசுவாமி கோயிலுக்கு மண்டப வேலைகள் செய்வித்தார். அதற்கு விபரம்.*

*மூலவரின் கோயிலுக்கு அர்த்தமண்டபம், மகாமண்டபம் முதலியவைகளைக் கட்டுவித்தார். நர்த்தன மண்டபத்தைப் புதியதாகக் கட்டி இதிலிருந்து முற்றமும் கட்டுவித்தார். ஆஞ்சநேயர் மண்டபம், கருட மண்டபம் இவைகளையும் புதியதாகக் கட்டுவித்தார். தாயார் கோயிலில் மகாமண்டபத்தைப் புதியதாகக் கட்டுவித்தார். முற்றங்கள் 9 கட்டினார். அர்த்தமண்டபம், கருவறை ஆகியவைகளைப் புதுப்பித்துத்*

*திருப்பணி செய்து தளவரிசை போடப்பட்டது. இம்மாதிரி 4 பிராகாரங்களிலும் தரையில் செங்கற்களால் தளவரிசை போடப்பட்டது. முற்றத்தில் மடப்பள்ளியும் புதியதாகக் கட்டப்பட்டது.*

*வசந்த மண்டபம் கட்டுவித்தார் ; மண்டபத்திலே யாகசாலை செங்கற்களால் கட்டப்பட்டது. பிராகாரங்களில் புதுச்செங்கற்கள் போட்டுக் காரையால் தளவரிசை போடப்பட்டது.*

*நந்தவனத்தின் சுவர்கள் புதுப்பிக்கப்பட்டன. எதிரில் உள்ள கோபுரம் புதுப்பித்துக் கட்டப்பட்டது. கோமுகம் புதியதாகப் புதுப்பிக்கப்பட்டுத் தேர்முட்டியும் கட்டுவிக்கப்பட்டது.*

*இம்மாதிரியாகப் பல திருப்பணி வேலைகள் நடத்தப்பட்டன.*

## 10. காமாட்சியம்பா பாயி கல்வெட்டு :

**இக்கல்வெட்டு தஞ்சை கிழக்குவீதி வரதராசப் பெருமாள் கோயிலில் உள்ள தனிக்கோயில் பெருந்தேவி கோயிலில் மகாமண்டப நுழைவாயிலின் மேல்புறம் கூட்டுமண்டபத்தில் உள்ளது.**

**1890 ஆம் ஆண்டு சிவாசி மன்னரின் மனைவியார் காமாட்சியம்பா பாயி சாகிப் அவர்கள் அரண்மனை இலாக்கா தேவத்தானங்களின் பொறுப்பாளராக இருந்தபோது தனிக்கோயில் தாயார் பெருந்தேவி கோயிலின் முன் மண்டபமான கூட்டு மண்டபத்தைக் கட்டியும், பழுதடைந்திருந்த சுவாமி கோயில் விமானத்தைப் புதுப்பித்தும், தளவரிசைகள் அமைத்தும் திருப்பணி செய்தார். மேலும் அரண்மனையின் தெற்கு எல்லையில் கிழக்கு வீதியிலிருந்து மேற்கு நோக்கிச் செல்லும் 'தாஸ்தா மகால் சந்து' என்ற குறுகிய தெருவில் உள்ள சதுர்புச வரதராசப் பெருமாள் கோயில் மிகவும் பழுதடைந்திருந்ததால் அந்தக் கோயிலின் மூலவரான சதுர்புச வரதராசரை இக்கோயில் சுவாமி சன்னிதியில் எழுந்தருளச் செய்தார். இங்கிருந்த சதுர்புச வரதராசர் சிலை இப்போது தெற்குவீதி கலியுக வெங்கடேசப் பெருமாள் கோயிலில் வைக்கப்பட்டுள்ளது.**

## கல்வெட்டு

1 தஞ்சாவூர் அரமனை ஹிஸ் லேட் ஹைனஸ் ஸ்ரீ சிவாஜீ மகா
2 றாஜா சாயபவர்கள் ஜேஷ்ட பத்நியும் ஷெ இலாகா தேவஸ்
3 தானங்களின் ஆதீனஸ்தரும் விசாரணை கற்த்தறவர்களுமா
4 ன ஹர் ஹைனஸ் மாது காமாக்ஷியம்பா பாயி ஸாயபவர்
5 களுடய ஆஜ்ஞையின் பேறில் ஏஜண்டு நாகறாஜ றாமாஜீ பண்டி
6 தறவர்களால் ஸ்ரீ வறதராஜ பெருமாள் கோவில் அம்மன் ஸ
7 ன்னிதானத்தில் நூதனமாக கோபுறம் கூட்டுமண்டபம் ஜீர்ண
8 மடைந்திருந்த ஸ்வாமி அம்மன் விமானம் தளவறிசை முத
9 லிய வேலைகளையும் ஜீர்ணோத்தாரணம் செய்தும் அனுப்
10 யோகமான ஸ்தலத்திலிருந்து ஸ்ரீ சதுர்புஜ வரதறாஜ பெரு
11 மாளை ஷெ ஸ்வாமி சன்னதி மண்டபத்தில் ஸ்தாபித்து
12 ம் கலி 4991 சகம் 1812 விக்ருதி ௵ கார்த்திகை மாஸம் 23 தேதி
13 க்கி 1890 ௵ டிசம்பர் மாஸம் 7 தேதி மகற லக்கினத்தில் ஸ
14 ம்புறோக்ஷணமும் செய்யப்பட்டிருக்கிறது

# 11. தஞ்சாவூர் அண்ணா சத்திரக் கல்வெட்டு

தஞ்சை நகரில் மானோசியப்பா தெருவில் உள்ள அண்ணா சத்திரத்திற்கு வெளியே வீதியில் கட்டப்பட்டுள்ள தண்ணீர்த் தொட்டியின் மேல் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

இரண்டாம் சரபோசியின் ஆசைநாயகி முத்தம்மாள் நாயக்கர் பரம்பரையில் தோன்றிய பெண். அக்குடும்பத்தினர் தஞ்சை நாயக்கர் காலத்திலிருந்து உயர் அலுவலர்களாகத் தஞ்சை அரசில் திகழ்ந்தனர்.

முத்தம்மாளின் இரண்டு சகோதரர்கள் இரண்டாம் சரபோசியிடமும், சிவாசியிடமும் உயர் பணி ஆற்றினர். அவர்கள் பெரிய அண்ணா, சின்ன அண்ணா என்று அழைக்கப்பட்டனர். பெரிய அண்ணா கட்டிய பஜனை சாலையில் அவர் செய்த கொடைகளை இக்கல்வெட்டு கூறுகிறது.

தஞ்சை மராட்டிய மன்னர்களின் அந்தரங்க நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அரசில் நம்பிக்கையான பணிகளை ஏற்று அரச குடும்பத்திற்கு மிகவும் வேண்டியவர்களாகத் திகழ்ந்தனர் அண்ணா சகோதரர்கள். இவர்கள் வழியினர் இன்னும் தஞ்சையில் 'அண்ணா எஸ்டேட்' என்ற பெயரில் பெருநிலக்கிழாராகப் பரம்பரைப் பெருமையுடன் வாழ்ந்து வருகின்றனர். சூரக்கோட்டையில் உள்ள அண்ணா சத்திரம் இவர்கள் கட்டியது ஆகும்.

## கல்வெட்டு

1 ஸ்ரீ
2 வேங்கடேசாய நம
3 யுவ ஸுூ ஆனி மீ 14 உ க்கு 1875 ஸுூ சூன் மீ 26 உ
4 தஞ்சை நகரங் கோட்டைக்குள் மானோஜியப்பா வீதியிலிருக்கும்
5 வேங்கடதாசனாகிய என்னாலியற்றப்பட்டிருக்குற இப்பஜனை சாலை
6 யில் நித்தியோத்ஸவமாகிய காலையில் சுவாமி பூஜையும், சாயரெக்ஷை

7 பஜனையும், இவ்விரண்டு வேளையிலும், பிறாமண அதிதிகளுக்கு நைவே

8 த்திய விநியோகமும் பக்ஷோத்ஸவமாகிய ஏகாதசிகளும் ஸம்வத்ஸோ

9 த்ஸவமாகிய சிறாவண ஸ்ரீத்தில் கோகுலாஷ்டமி உத்ஸவமும், மார்கழி ஸ்ரீத்தில்

10 தனுர் ஸ்ரீ பூஜையும் இறாதா கலியாணோத்ஸவமும் வைகாசி ஸ்ரீத்தில் ஸ்ரீபிரசன்ன

11 வேங்கடேசப் பெருமாள் அக்ஷய திருதியை உதய கருட வாகனோத்ஸவமும் மேற்கண்ட உத்ஸ

12 வங்களில் பிறாமண அதிதிகளுக்கு விசேஷமான நைவேத்திய சந்தர்ப் பணமும் நீடித்து ந

13 டத்தும்படி பூஸ்திதிகளை ஏற்படுத்தி வைத்து இதற்க்காக 1875 ௵ சூன் ஸ்ரீ 21 தீ ஏற்பட்ட ஒ

14 யிலின்படி இத்தர்மத்தை யாதொரு குறைவின்றி பரிபாலிக்கும் பொருட்டே சில டிரஸ்டிகளையு

15 ம், ஒரு காரியதரிசியையும் பாகவதர்களையும் பின்னும் வேண்டிய ஆள்மாகாண

16 ங்களையும், நியமித்திருப்பதாலவர்களும் இதில் சேறாத மைத்துமுள்ள தர்மவான்களு

17 ம் ஷி ஏற்பாட்டையும் இதுவரையில் நடந்த வழக்கத்தை யனுசரித்து நிரந்தரமாய் நடத்தி

18 வற பாத்தியப்பட்டிருக்கிறார்களென்பதை இதனால் யாவருமறியும்பொருட்டு தெரிவிக்கலானேன்

19 ஹிஸ் ஹைநிஸ் சிவாஜீ மகாறாஜா சாயெபவர்கள் மந்திரியாகிய

20 பெரியண்ணாவென்னும் வேங்கடதாஸன்

21 இந்த எழுத்து மச்சுப் பள்ளிக்கூடத் தெருவிலிருக்கும் கல் தச்சு. வீ. மருதை யாசாரி [யால்] கொத்தப்பட்டது

# 12. தஞ்சாவூர் பசார் இராமசாமி கோயில் கல்வெட்டு

தஞ்சாவூர்க் கோட்டையினுள் அமைந்துள்ள தொன்மையான கடைத் தெருவிற்கு 'அய்யன் கடைத்தெரு' என்றும் 'மானோசியப்பா தெரு' என்றும் பெயர். முக்கியமான வணிகத் தெரு ஆதலின் இது பசார் எனப்பட்டது.

அரண்மனையின் மேல்புறம் மதிளை ஒட்டி வெளிப்புறம் மேற்கண்ட தெருவில் அமைந்துள்ள கோயிலுக்குப் பசார் இராமசாமி கோயில் என்று பெயர். அரண்மனையிலிருந்து இக்கோயிலுக்குச் சென்றுவர முன்பு வழி இருந்தது.

இக்கோயிலின் முன்பக்கம் திருவிழாக் காலங்களில் பந்தல் அமைப்பதற்காகச் சுமார் 4 மீட்டர் உயரமுள்ள இரு கல்தூண்கள் நிறுத்தப்பட்டுள்ளன. அவற்றில் ஒரு தூணில் அநுமார் சிற்பமும், மற்றொரு தூணில் கருடன் சிற்பமும் சிறிய அளவில் செதுக்கப்பட்டுள்ளன.

இத்தூணை 1854 ஆம் ஆண்டு ஏப்பிரல் 12 ஆம் நாள் இக்கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்தவர் சிவாசியின் அந்தப்புர மகளிருள் ஒருவரும், மங்கள விலாச மகளிருள் ஒருவருமான தர்ம்மாபாயி அம்மாள் அவர்கள் ஆவர். இவருக்குத் தர்ம்ம வல்லிபாயி என்றும் பெயர் உண்டு. இவருக்கு முராரி ராவ் என்ற மகன் ஒருவர் இருந்தார்.

வடபுறம் உள்ள தூணில் தர்ம்மா பாயின் கொடையை விளக்கும் கீழ் வரும் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

கல்வெட்டு

1 உ
2 ஆனந்த ஷு
3 சித்திரை மீ 1
4 தர்ம்மா பாயி
5 அம்மாள் உப
6 யம் யிந்த யிர
7 ண்டு கம்பமும்

# 13. தஞ்சாவூர் இராசகோபாலசுவாமி கோயில் கல்வெட்டு

தஞ்சாவூர் மராட்டிய மன்னர்களின் ஓலை, காகித முத்திரைகளில் 'ஸ்ரீவீர கரவாசினி' அல்லது 'ஸ்ரீராம பிரதாப வீர கரவாசினி' 'ஸ்ரீராமபிரதாப' என்ற தொடர்கள் பொறிக்கப்பட்டிருக்கும்.

மராட்டிய மாநிலத்தில் கோலாப்பூர் அருகே உள்ள ஊர் 'கரவீர' என்பது. அவ்வூர் சக்திபீடம் அமைந்துள்ள ஊர். அம்பாபாய் அல்லது கரவீர மகாலட்சுமி என்று அவ்வூர் சக்தி தெய்வம் அழைக்கப்படுவார். 'கரவீர' என்ற தொடரே 'வீரகர' என்று மாற்றி எழுதப்பட்டுவிட்டது என்பர்.

சாத்தாரா மாவட்டத்தில் மகாபலேசுவரம் அருகே உள்ளே கோட்டை சூழ்ந்த ஓர் ஊருக்குப் பெயர் 'பிரதாபகடா' என்பதாகும். அங்குள்ள 'பவானி' கோயில் மராட்டியர்களுக்கு மிகவும் விசேடமான வழிபடு தெய்வம் உறையும் கோயிலாகும். இவ்வூரைக் குறிக்கும் சொல் 'பிரதாப' என்பதாகும் என்று பேராசிரியர் முனைவர் துல்புலே அவர்கள் கருதுகிறார்கள்.

மேற்கண்ட இரண்டு இடங்களும் மராட்டியர்களுக்கு இன்றியமையாத ஊர்களாதலின் இப்பெயர்களையும், அங்குள்ள வழிபடு தெய்வத்தின் பெயரையும் தஞ்சை மராட்டியர் தம் முத்திரையில் பொறித்துக் கொண்டனர்.

சிவாசியின் குலகுரு 'இராமதாசர்' தஞ்சைக்கும் வருகை புரிந்துள்ளார். தஞ்சை மராட்டிய அரசை ஆசீர்வதித்து நிலைக்கச் செய்தவர் இராமதாசர் என்ற கருத்தும் உண்டு. இவற்றையெல்லாம் உட்கொண்டே தங்கள் முத்திரைகளில் 'ஸ்ரீராமபிரதாப' என்று தஞ்சை மராட்டிய அரசர்கள் பொறித்துக் கொண்டனர் என்றும் ஊகிக்கலாம்.

தஞ்சை மராட்டிய அரசர்களும் அரசிகளும் தங்கள் கடிதங்களில் தங்கள் கையெழுத்துக்களை இடாமல் அதற்குப் பதிலாக 'ஸ்ரீராமபிரதாப' என்றே எழுதினர். இதனைப் பல ஆவணங்களில் நாம் காணுகின்றோம்.

'தஞ்சையில் டேனிசு மோடி ஆவணங்கள்' என்னும் நூலாசிரியர் 'ஸ்ரீராம பிரதாப' என்பதற்கு 'Name of the family deity as equivalent of king's signature' என்று விளக்கம் தருகின்றார்.

இந்த 'ஸ்ரீராமபிரதாப' என்று முத்திரைகளிலும், அரசர் கையெழுத்தாகவும் காணப்படும் தொடர் தஞ்சை நகரம் இராசகோபாலசுவாமி கோயிலின் கொடிக் கம்பம் அருகில் மிகவும் அரிதாகத் தரையில் ஒரு கல்லில் பொறிக்கப்பட்டு அதனைத் தொடர்ந்து 'சா. 1769' என்றும் வெட்டப்பட்டுள்ளது. இது சாலிவாகன ஆண்டைக் குறிக்கலாம். எனவே கி.பி. 1847 இல் தஞ்சையை ஆட்சிபுரிந்த கடைசி மராட்டிய மன்னர் சிவாசி, இக்கல்வெட்டின் அருகே உள்ள கொடிக்கம்பத்தை நிறுவியிருக்கலாம்; அல்லது கல்வெட்டு உள்ள தளத்தில் கல் பாவியிருக்கலாம் என்று இதன் மூலம் ஊகிக்கலாம்.

## கல்வெட்டு

1 ஸ்ரீ ராம பிரதா
2 ப. சா. 1769

# 14. தஞ்சாவூர் எல்லையம்மன் கோயில் கல்வெட்டு

தஞ்சாவூர் நகரில் எல்லையம்மன் கோயில் தெருவில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் நுழைவாயிலின் இடப்பக்க நிலையில் இக்கல்வெட்டு உள்ளது.

இம்மராத்தி மொழிக் கல்வெட்டில் எல்லம்மன் என வழங்கப்பெறும் இத்தெய்வம் மராட்டியர்களின் குல தெய்வம் ஆகும். எல்லையம்மன் கோயில் என்று மக்களால் இக்கோயில் அழைக்கப்பட்டாலும் ஊர் எல்லைக்கும் இக்கோயிலுக்கும் தொடர்பில்லை.

எல்லம்மனை இரேணுகாதேவி என்றும் அழைப்பர். இரேணு என்ற வருமராசன் மகளும் சமதக்னி முனிவரின் மனைவியும் பரசுராமர் தாயும் இரேணுகாதேவி ஆவார். பரசுராமரால் கொல்லப்பட்டுப் பின் உயிர் பெற்றுக் கிராம தேவதையாக இருக்கப் பணிக்கப்பட்டவள் என்று கருதப்படும் இரேணுகாதேவி கோயில்களில் தலைமட்டுமே கருவறையில் தெய்வமாக இருப்பது வழக்கம். இங்கும் அவ்வாறே உள்ளது.

இக்கோயிலில் பலிபீடத்தின் முன் அமைக்கப்பட்டுள்ள சிறு பலகைக் கல்லில் குந்தளாதேவியம்மன் ஒரு புறமும், போத்துராஜா ஒரு புறமும் அழகிய முறையில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளனர். முன்பு மராட்டியருடைய திருமணச் சடங்குகள் இக்கோயிலுக்கு வந்து இவர்களை வணங்கிய பின்னரே தொடங்கப் பெற்றன.

இக்கோயிலின் கிழக்குச் சுவர், தென்கிழக்கு மூலையில் உள்ள மடைப்பள்ளிச் சுவர், தெற்குத் திருச்சுற்றில் உள்ள அரசமரத்து மேடை, கிழக்குத் திருச்சுற்றில் வடகீழ்ப்பக்கம் உள்ள கிணறு ஆகிய இடங்களில் நூற்றுக்கணக்கான அழகான சிறு சிறு நாகர் சிற்பங்கள் வேலைப்பாடுகளுடன் காணப்படுவன குறிப்பிடத்தக்கதாகும்.

இக்கோயிலில் தெற்குத் திருச்சுற்றில் வடக்கு நோக்கி மாதங்கிதேவி கோயில் இருக்கிறது. வீணை வாசிக்கும் நிலையில் கைகளை வைத்துக்கொண்டு சற்றுத் தலையை உயர்த்திக் கம்பீரமாக அமர்ந்துள்ள நிலை கண்ணைக் கவருவதாகும். கலைமகள் விழாவன்று இக்கோயிலில் சிறப்புப் பூசை நடைபெறும். இசை, கூத்துக் குரிய பெண்ணாகக் கலம்பக நூல்களில் மதங்கியார் என்ற பெண்பாலார் குறிக்கப் படுவது வழக்கம். மதங்க குலத்துப் பெண் மாதங்கி ஆவாள். இரேணுகாதேவிக்கும் மாதங்கி என்று பெயர் உண்டு.

திருச்சுற்றில் தென்மேற்குப் பக்கம் நாக கன்னிகைக்குத் தனிக்கோயில் உள்ளது. இடையில் இரு கைகளிலும் நாகங்கள் தாங்கிய நிலையில் ஒரு நாக கன்னிகையும், இருபுறமும் வணங்கிய நிலையில் இரு நாக கன்னிகைகளும் உள்ளனர்.

வடக்குத் திருச்சுற்றில் உள்ள சண்டீசுவரன் கோயில் வாயிலின் இருபுறமும் ஜேஷ்டாதேவியின் மிகத் தொன்மையான சிற்பமும், பூரணை புட்கலையுடன் அய்யனார் உருவச் சிலைகளும் உள்ளன.

மகாமண்டபத்தின் தெற்குச் சுவரில் சரபமூர்த்தி, மாதொருபாகன், தத்தாத் ரேயர், அகோர வீரபத்திரர், சீதேவி பூதேவியுடன் மன்னார்குடி ராசகோபால சுவாமி ஆகியோரும், வடக்குச் சுவரில் காளி, ஊர்த்துவத்தாண்டவம், கலியாண சுந்தரர், கண்ணனும் யசோதையும் ஆகிய உருவங்களும் வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இடைப்பகுதியில் கண்ணனின் பல்வேறு திருவிளையாடல்கள் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளன.

இக்கோயிலில் 1803ஆம் ஆண்டு இரண்டாம் சரபோசி மன்னர் பல திருப் பணிகளைச் செய்தார். கருவறை, பிற மண்டபங்கள், முன் கோபுரம், மடைப் பள்ளி, தளவரிசை, சுற்றுச்சுவர், வாயில் படிக்கட்டு ஆகிய அனைத்தையும் புதிய தாகச் சரபோசி அமைத்த விபரத்தை இக்கல்வெட்டுக் கூறுகிறது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்ரீ*

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1725 சென்ற கலியுகாதி 4904 இதற்குமேல் நடைபெறுகின்ற ருத்ரோத்காரி வருடம் மாசி மாதம் வளர்பிறை திரிதியை சனிக் கிழமை பகல் நாழிகை 16க்கு மேல் 18 நாழிகைக்குள் இந்த சுபதினத்தில் ராஜஸ்ரீ சரபோசி மகாராசா அவர்களால் கட்டப்பட்ட ஸ்ரீ எல்லம்மா தேவி கோயிலில் திருப்பணி வேலைகள் நடந்ததற்கு விபரம் :*

கர்ப்பக் கிருகம் | அர்த்தமண்டபம் | மகாமண்டபம் |
நர்த்தன மண்டபம் | முன் கோபுரம் | மடைப்பள்ளி |
மாதங்கி தேவி கோயில் | நாககன்னிகை கோயில் |
சண்டி கோயில் | நான்கு பிராகாரச் சுவர் |
நான்கு பிராகாரங்களில் செங்கல் தளவரிசை |
கோபுர நுழைவாயில் படிக்கட்டு |
இதன்படி புதிய திருப்பணி வேலைகள் நடந்தன.

## 15. தஞ்சாவூர் விசுவநாதர் கோயில் கல்வெட்டு

தஞ்சாவூர்க் கோட்டைக்குள் நான்கு விசுவநாதர் கோயில்கள் உள்ளன. தெற்குவீதி விசுவநாதர் கோயில், தெற்குவீதி பாஞ்சாள விசுவநாதர் கோயில், மேற்குவீதி விசுவநாதர் கோயில், மேற்குவீதி அய்யன்குளம் விசுவநாதர் கோயில் என்பன அவை. இக்கோயில்கள் காசி விசுவநாதர் கோயில் என்றும் அழைக்கப்படுகின்றன. இவையன்றி வெண்ணாற்றங்கரையில் விசுவநாதர் கோயில் ஒன்றும், பல சிவாலயங்களில் தனி விசுவநாதர் சன்னிதிகளும் உள்ளன. இக்கல்வெட்டு தெற்கு வீதி விசுவநாதர் கோயில் கிழக்குச் சுவரில் தனிக்கல்லில் வெட்டப்பட்டு பதிக்கப் பட்டுள்ளது.

தெற்குவீதி விசுவநாதர் கோயில் எல்லையம்மன் கோயில் வீதியும் தெற்கு வீதியும் சந்திக்குமிடத்தில் உள்ளது.

இக்கோயில் தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் (1739-1763) காலத்தில் கட்டப்பட்டது. பிரதாபசிங் திருவாரூர்க் கமலாலயக் குளக்கரையிலும் விசுவநாதர் கோயில் ஒன்றை 1747இல் கட்டுவித்தார்.

இக்கோயிலுக்குத் திருப்பணிகள் சில செய்து 1833இல் குடமுழுக்கு விழா நடைபெற்றுள்ளது. 1835இல் இவ்விசுவநாதர் கோயிலுக்கு 'விசய விசுவநாத சுவாமி கோயில்' என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது. பின் இப்பெயர் வழக் கிழந்து விசுவநாதர் கோயில் என்று மட்டும் அழைக்கப்படுகின்றது.

ஒருமுறை இக்கோயிலுக்குப் போதுமான வருவாய் இல்லாதபோது மாரி யம்மன் கோயில் (புன்னைநல்லூர்) அருகே இருக்கும் யமுனாம்பாள் பேட்டை கோதண்டராமர் கோயில் வருமானம் இக்கோயிலுக்கு அளிக்கப்பட்டது.

அம்மன் கோயில் மகாமண்டபத்தைக் கட்டிக் கிருட்டிண பட்சம் பிரதோச விழாவைச் செய்யத் தெற்குவீதியில் இக்கோயிலுக்கு எதிரில் கடை வைத்துள்ள மு. அருணாசலம் செட்டியார் ஏற்பாடு செய்ததாக அம்மன் கோயில் மகாமண்டபக் கல்வெட்டு கூறுகிறது.

தீர்த்தக் கிணற்றின் சுவரில் உள்ள கல்வெட்டு நாள்தோறும் சாயங் காலப் பூசைக்கு விட்ட கொடைபற்றிக் கூறுகிறது.

கந்தசஷ்டி விழாவில் கடைசிநாள் விழா நடத்துவதற்காகத் தஞ்சாவூர் நகரம் மானோசியப்பா வீதியில் உள்ள மருதாயி அம்மாள், அவர் மகள் பொன்னாயி இருவரும் கள்ளப் பெரம்பூரில் நிலம் வாங்கி 1917இல் அளித்ததாக விசுவநாதர் கோயில் முன் மண்டபக் கிழக்குச் சுவர்க் கல்வெட்டு கூறுகிறது.

மங்கள விலாசத்தைச் சேர்ந்த பெரிய தர்முபாய் அம்மாள் அவர்கள் இவ் விசுவநாதர் கோயிலில் சிவன்ராத்திரி விழா ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டு வருவதற்காக 300 ரூபாய் மூலப் பொருள் 1895இல் வைத்ததை இக்கல்வெட்டு கூறுகிறது.

சிவன்ராத்திரியில் 4 காலப் பூசைகள் செய்து காளை வாகனத்தில் சிவபெருமான் திருவீதி உலா வரவேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

1 உ
2 1895 ஷு ஜனவரி மீ 31 உ
3 தஞ்சாவூர் அறண்மனை ஸ்ரீம
4 ன் மங்கள விலாசம் மா. பெரி
5 ய தர்முபாயி அம்மாளாகிய
6 நாம் ஷெ யூர் கோட்டைக்குள்
7 தெற்கு வீதியிலுள்ள ஸ்ரீ விஸ்
8 வ நாத ஸ்வாமி கோவிலில் ம
9 ஹா சிவன் ராத்திரியின் வு
10 த்சவம் வருஷந்தோரும்
11 சாஸ்வதமாய் நடந்து வ
12 ரும்படி ஷெ தேவஸ்தானத்
13 தாரிடத்தில் நம்மால் வுப
14 யமாகக் கொடுக்கப்பட்
15 ட ரூ 300 இந்த ரூபாயின் அ
16 பிவிர்த்தியைக் கொண்
17 டு ஷெ வுத்சவத்தின் 4 கு
18 ஜாம. அபிஷேகம் பூசை
19 நைவேத்தியங்களும் நா
20 ன்காம் ஜாமத்தில் ஸ்வா

21 மி அம்மன் சஹிதம் வி
22 ருஷபாரூடராய் வீதிப்பி
23 ரதக்ஷிணம் செய்விப்ப
24 தற்கு யேர்ப்படுத்தப்பட்டி
25 ருப்பதையும் இதற்காக
26 ஷெ தேவஸ்தானத்தாரிட
27 மிருந்து நமக்கு இயாதாஸ்
28 து கிடைத்திருப்பதையு
29 ம் தெரிவிக்கலாயினோம்

# 16. தஞ்சாவூர் காளிதேவி கோயில் கல்வெட்டு

தஞ்சாவூர் நகரம் தெற்கு வீதியில் உள்ள காளி கோயிலின் கருவறை, அர்த்த மண்டபச் சுவர்ப்படையின் கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகிய பக்கங்களில் இக் கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது.

இக்காளி கோயில் மராட்டியர் ஆட்சிக் காலத்தின் இறுதிவரை தஞ்சை மராட்டிய அரசரின் அரண்மனை தேவத்தானத்துக்குச் சேராமல் விசுவகர்ம சமூகம் எனப்படும் அஞ்சுசாதியார் பொறுப்பில் அவர்களின் குலதெய்வமாக விளங்கியது. காமாட்சியம்பாபாயி காலத்தில்தான் இக்கோயில் அரண்மனைத் தேவத்தானக் கட்டுப்பாட்டில் வந்தது.

காளிகா புராணம் விசுவகர்ம சமூகத்திற்குச் சக்தி வழிபாடு தொன்று தொட்டு வந்துள்ளது எனக்கூறும். அமர்சிங்கின் திருவிடைமருதூர்ச் செப்பேடு 'ஸ்ரீமது காளிகாதேவி கமண்டலீசுவரி அருள் பெத்த பஞ்ச கம்மாளத்தார்' என்று கூறும்.

எந்தக் கோயில் கட்டுவதாக இருந்தாலும் சிற்பாச்சாரியார்களுடைய குல தெய்வமான காமாட்சி என்னும் காளிகாதேவிக்கு ஆலயம் எழுப்பிச் சக்தி பூசை செய்து அவள் அருள் பெற்ற பின்னரே அத்திரபூசை செய்து கோயில் கட்ட வேண்டிய இடத்தை வாஸ்து விதிப்படி அளந்து கோயில் கட்டத் தொடங்குவது வழக்கம். இதன்படிப் பெரிய கோயில்கள் உள்ள தலங்களில் காமாட்சி அல்லது காளிதேவி கோயிலும், அக்கசாலை விநாயகர் கோயிலும் இருப்பதை இன்றும் காணலாம்.

இப்பண்டைய வழக்கத்திற்கேற்பத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலை இராசராசன் கட்டத் தொடங்குமுன்னர்ச் சிற்பாச்சாரியார்கள் விருப்பப்படியும், அன்றைய வழக்கப்படியும் இந்தக் காமாட்சி என்னும் காளிகாதேவி கோயிலைச் சிற்பிகட்குக் கையுறையாகக் கட்டினார் என்பர்.

இக்காளிகாதேவி ஆலயத்திற்கு 1002ஆம் ஆண்டாகிய சுபகிருது ஆண்டு ஆவணி மாதம் 19ஆம் நாள் குடமுழுக்கு நடைபெற்றது என்றும், அன்றைய தினமே பெருவுடையார் கோயில் கட்ட அடிக்கல் நாட்டப்பெற்றது என்றும் கூறுவர். இன்றும் இக்கோயில் தஞ்சாவூர் விசுவகர்ம குடும்பத்தினரின் வழிபடு தெய்வமாக அவர்களின் பராமரிப்பில் உள்ளது.

இக்கோயிலுக்கு அருகில் உள்ள அக்கசாலை விநாயகர் கோயிலும், விசாலாட்சியுடனமர் பாஞ்சாள விசுவநாதசுவாமி கோயிலும் விசுவகர்ம சபையாரின் நேரடிப் பராமரிப்பில் உள்ளன.

இக்கோயில் திருப்பணிகளை விசுவகர்ம சமூகத்தினர் ஒருவர் செய்ததாக இக்கோயில் முன் மண்டபத் தூணிலுள்ள தேதி குறிப்பிடாத ஒரு கல்வெட்டு கூறு கிறது.

1759ஆம் ஆண்டு, தஞ்சாவூர் மராட்டிய மன்னர் பிரதாபசிங் அவர்கள் ஆட்சிக்காலத்தில் இராசா சரபோசி அவுல்தார் அவர்கள் குமாரர் வாலோசி அப்பா அவர்கள் வேண்டுகோளின்படி பாஞ்சாளத்தார் எனப்படும் அஞ்சுசாதியார் இக்காளி கோயிலின் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் முதலியவைகளைக் கருங்கல் திருப்பணியாகக் கட்டி வைத்தனர் என்று இக்கல்வெட்டு கூறுகிறது.

இடங்கைச் சாதியாரான பாஞ்சாளத்தார் தங்களுக்குக் கிடைத்த ஒரு சமூக வெற்றியின் அறிகுறியாக இக்கோயிலைக் கட்டினர் என்ற குறிப்பு கல்வெட்டில் காணப்படுகிறது.

இக்கல்வெட்டு பிழைகள் மலிந்தும், வரிவடிவ வேறுபாடுகளுடனும் காணப்படு கிறது. அகரம் ஆகாரம் போலும், னகரம் னாகாரம் போலும், எகரத்துக்குப் பதிலாக இகரமும் பொறிக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் ரகர றகர, நகர னகர வேறுபாடு இல்லாமல் எழுதப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டு மைய அரசின் கல்வெட்டுத் துறையினரால் படி எடுக்கப் பெற்றுள்ளது.[1] இதன் கலியுக ஆண்டு 4860 ஆக இருக்கவேண்டும்.

## கல்வெட்டு

**கிழக்குப் பக்கம் :**

*1 உ காம[ா]ட்சி தேவி அம்மன் கோவி[ல்] கருப கிருகம் ஸ்வஸ்தஸ்ரீ*
*2 ஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் ஆரியராய விபாடன் பாசைக்குத்*
*த[ப்]புவராயர் கண்டன் மூவராய கண்டன்*

---

1 *A. R. E.* No. 202 of 1932 - 33.

2 கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் பாண்டி மண்டலத்து மாசனத் தேருரன் . . . . சேர மண்டலத்துக்குக் கசபதிராயன் துலுக்கர் மோகம்ந் தவி[ர்]த்தான் ப(த்)திநெட்டு

3 க் கோட்டத்தில் வன்னியர்கள் மிண்டன் என்ம . . . . முறைகொண்ட . . . . பரராசராசர் . . . . . . ண்டராசர் மகாராசர் அச்சுத மகாராயர்

**தெற்குப் பக்கம் :**

4 துட்டர் துட்ட துட்ட நிற்கிறக கண்டன் கெடி வன்னி[ய]ற்கள் சூரன் கெடி வன்னியற்கள் காலன் நரலோக னாறாயணன் பூலோக தேவேந்திரன் நரபதி னாயகன் மன்னரில்

5 மன்னன் மருமன்னிய தம்பிறான் தொண்ட மண்டல பரிபாலன் சோழ மண்டலத் தாபனாசாரியென் ஈழமுங் கம்பளமும் இசுன் . . . . இவ் வுலகும் அழித்துக் கெச வேட்

6 டை கண்டருளிய வீர வசந்தறாயற் தேவறாய மகாறாயர் புசபெல தேவ மகாறாயற் வீர கோசற தேவ மகாறாயர் ச(ா)தாசிவ தேவ மகாறாயற் விக்கிறம கேசரி தே

**மேற்குப் பக்கம் :**

7 வ மகாறாயர் கிஷ்ண தேவ மகாறாயர் இப்படி பிறதிவிறாச்சியம் பண்ணி அருளாயி நின்ற சாலிவாகனம் 1681 க(ா)லியுகம் 4660 இதி[ன்] மேல் செல்லாநின்ற சோழ மண்டல தெட்சிண காசி ஸ்தலம் போசலை வங்குஷம் றாசமானிய

8 றாசஸ்ரீ துக்கோசி மகாறாச சாயுபு அவற்கள் குமாரனாகிய றாச மானிய றாசஸ்ரீ றாய மகீந்திர பூப்பாலகன் பிறத்தாப்ப சிங்க மகாறாச சாயிப்பு அவற்கள் றாச்சியம் பரிபாலனம் பண்ணுகுற னாளையிலேய் பாஞ்சாளத்தாற் வங்குஷத்தை காப்பாத்தி இக்கோவி

9 லுக்கு முன் பஞ்ச பாண்டவாள் றாச்சியம் ஆண்டு வந்து பரிபாலனம் பண்ணுகிற னாளையிலே ஸ்ரீமன் மகாவிஷ்ணு கிருஷ்ணா அவதாறம் எடுத்து கம்சனை சம்வாதம் பண்ணி பஞ்ச பாண்டவாள்கு றாச்சியம் பட்டா அபிஷேகம் பண்ணி வச்சு ரெச்சித்தாப்பலை கலியுகத்திலே றாச சரப்பே[ா]சி அ

**மேற்குப் பக்கம், மேல் :**

10 வுல்தார் குமாரன் வாலோசி அப்பா அவர்கள் பாஞ்சாளத்தார் வங்குஷத்தை னம்மேல் வாங்கி இடங்கை சாதி சன சகிதம் இங்குர மானா

அபிமானம் சுப சோபனங்கள் கீர்தி பிறதிஷ்டை உண்டாகி னடுப் பிவிச்சு குடுத்த னமுடைய மத்திஸத்தில் சிலா சாசனமாயி தற்மம் பன்ன வேணும் என்று காமாட்சி தேவி அம்மன் கோவில் வி

**தெற்குப் பக்கம், மேல் :**

11 மானம் கறுப கிரஹம் அருத்த மண்டபம் ம(ா)ஹா மண்டபம் இதுகள் எல்லாம் வெள்ள கல்லால் சிலா சாசனமாயி கட்டி வச்சு சூரிய சந்திராள் கல்லும் காவேரி உள்ள மட்டுக்கும் இறுக்க வேணும் என்று அந்தப்படி கோவிலும் கட்டி வச்சு கும்பா அபிஷேகமு பன்னி

**கிழக்குப் பக்கம், மேல் :**

12 வச்ச படியினாலை ஸ்ரீ வாலோசி அப்ப[ா] அவற்கள் காமாட்சி தேவி கிருபா கடாக்ஷத்தினாலை அஷ்ட அயிசுவரியத்தோடே சுகமாயி இறுக்கக் கடவறாகவும் வ

# 17, 18. தஞ்சாவூர் சங்கரநாராயணர் கோயில் கல்வெட்டுக்கள்

சைவ-வைணவ ஒற்றுமையின் பொருட்டு எழுந்தருளுவிக்கப் பெற்ற மூர்த்தி சங்கரநாராயணர் திருக்கோலம் ஆகும். வலப்பக்கம் சிவபெருமானாகவும் இடப் பக்கம் திருமாலாகவும் இங்கு எழுந்தருளியுள்ளார். இதற்கேற்ப 'பார்வதி லட்சுமி சமேத சங்கர நாராயணர்' என்று குறிக்கப்படுகின்றார். தஞ்சையில் உள்ள தொன்மையான திருக்கோயில்களில் இதுவும் ஒன்று.

திருச்சுற்றில் கசலட்சுமி, இராமர், சீதை, இலக்குவன், அனுமார், முருகன், வள்ளி, தெய்வானை, விசுவநாதர், விசாலாட்சி ஆகியோருக்குத் தனிச் சன்னிதிகள் உள்ளன. விசாலாட்சி சன்னிதியில் ஓர் அம்மையார் அமர்ந்து சிவலிங்கத்தை மல ரால் அருச்சிப்பது போன்ற சிற்பம் ஒன்றுள்ளது. அதனை 'அவ்வையார்' சிற்பம் என்று கூறுகின்றனர்.

இக்கோயிலில் துளசி மாடம் அருகே வடமேற்கு மூலையில் கோயில் அடிப் பகுதியில் உள்ள ஒரு கல்லில் மதுரை கொண்ட கோப்பரகேசரியான முதலாம் பராந்த கனின் கல்வெட்டுத் துண்டொன்று உள்ளது.

இக்கோயிலினுள் வடகிழக்கு மூலையில் உள்ள நடராசர் மண்டபத்தின் முன் சுவரில் 1842ஆம் ஆண்டு அர்த்தசாம உற்சவ ஏகாந்த சேவைக்காக நடராசர் மண்டபத்துடன் ஒரு மண்டபத்தைத் தஞ்சைப் பெரிய கோயில் தாசி காவேரி மகள் பாலாம்பிகை என்பவர் கட்டியதாக ஒரு கல்வெட்டு உள்ளது.

அம்மன் சன்னிதி முன்புள்ள 12 அங்கண மனையைத் தங்கவேலை வெங்கட்ட ராயலு அவர்கள் மனைவி பார்வதி அம்மாள் அவர்கள் செய்ததாக அம்மன் கோயில் மகாமண்டபத் தூணில் உள்ள கல்வெட்டு கூறுகிறது. மேற்கண்ட ஏகாந்த மகோத்சவ மண்டபம் கட்டப்பட்ட அதே ஆண்டு இப்பன்னிரண்டு அங்கண மண்டப மும் கட்டப்பெற்றது.

## 17. இலட்சுமிபாயி அம்மா கல்வெட்டு :

கோயில் நுழைவாயிலின் இடப்புறம் சுவரில் இக்கல்வெட்டு உள்ள கல் பதிக்கப்பட்டுள்ளது. தமிழில் பொறிக்கப் பெற்றுள்ள இக்கல்வெட்டின் கடைசியில் 'சௌபாக்ய லட்சுமிபாயி அம்மா' என்ற தொடர் மட்டும் மராத்திமொழியில் உள்ளது.

சிவாசி மன்னரைக் 'கத்திகட்டி விவாகம் செய்துகொண்ட' சௌபாக்கியவதி லட்சுமி பாயி அம்மாள் அவர்கள் 1894ஆம் ஆண்டு பாலாம்பிகை சமேத சங்கர நாராயண சுவாமிக்கு ரூபாய் 1700 செலவில் 160 சேர் நிறையுள்ள வெள்ளிக்காளை வாகனத்தைத் திருவாசியுடன் செய்தளித்தார். அதன் உற்சவத்திற்கு 800 ரூபாயும், அம்மன் சன்னிதியில் தீபமிட 100 ரூபாயும் மூலப்பொருள் வைத்தார்.

ஆண்டுதோறும் திருவிழாவின் கடைசி நாளில் மேற்கண்ட தொகையின் வட்டியிலிருந்து இக்கோயிலின் எதிரில் நாணயக்காரத் தெரு முனையில் இவரது பேத்தி சௌபாக்கியவதி சுந்தரேசுவரி பாயி அம்மணி என்னும் கிருஷ்ணப்பா பாயி அம்மணி சாயேப் 1891இல் கட்டிய துவாதசிக் கட்டளைச் சத்திரத்தில் காலையில் பிராமணர்கள் உண்ண ரூபாய் 15, இரவு பஞ்சமூர்த்திகளும் இராச வீதிகளில் திருவுலா வர ரூபாய் 45 தேவத்தானக் கமிட்டியார் கல்யாண சுந்தரமய்யர் அவர்கள் வசம் மூலப்பொருளை வைத்து எப்பொழுதும் இவ்வறக்கட்டளை தொடர்ந்து நடைபெற வேண்டும் என்ற தன் விருப்பத்தையும் தெரிவித்துள்ளார்.

### கல்வெட்டு

1 உ
2 ஸ்ரீசங்கர நாராயண பாலாம்பிகா
3 பிரசன்னம் சாலிய வாகன சகாத்த
4 ம் 1817 ஜய ஹூ ஆவணி மீ இதற்கு
5 ச் சரியான இங்கிலிஷ் 1894ஆ
6 கஸ்டு மீ தஞ்சாவூர்க் கோட்டை மே
7 ல வீதியிலிருக்கும் ஸ்ரீ பாலாம்பிகை
8 க சமேத சங்கர நாராயண சுவாமிக்
9 குத் தஞ்சாவூர் ஹமினேஸ் சிவாஜீ ம
10 காராஜா அவர்கள் சத்திகட்டி விவாகஞ்
11 செய்து கொண்ட சௌ.லட்சுமு பாயி அ
12 ம்மாளாகிய நான் சுவாமிக்குச் செய்
13 திருக்கிற தருமமானது 1700 ரு கிரயமான

14 160 சேர் நிறையுள்ள வெள்ளி இடபவா
15 கனம் திருவாசியுள்பட ஒன்றும் அதன்
16 உற்சவத்திற்காக ரூ 800 ம் சுவாமி அம்
17 மன் சந்நியில் தீபம் போட ரூ 100
18 ம் வருஷந்தோறும் நடத்துகிற திரு
19 விழாவின் கடைசி நாளில் மேற்கண்ட
20 வட்டியின் தொகையில் சௌ.சுந்தரேஸ்
21 வரிபாய் அம்மணியென்கிற கிருஷ்ணப்
22 பா பாயி அம்மணி சாயேப்[1] சத்திரத்தில்
23 காலையில் பிராமண போஜனஞ் செய்ய
24 ரூ 15 ம் அன்றிரவில் பஞ்ச மூர்த்திகளு
25 ம் இராஜ வீதியில் திருவுலா வருகிறத
26 ற்காக ரூ 45 ம் தேவஸ்தானம் கம்மிட்
27 டியார் அவர்கள் கனம் கல்யாண சுந்த
28 ரமய்யர் அவர்கள்வசம் வெள்ளி திரு
29 ருவாசி யுள்பட இடப வாகனம் ஒன்று
30 ம் ஷெ ரூ 900 மும் கொடுத்திருக்கிே
31 றன் நான் மனப்பூர்வமா யிந்த
32 த் தருமம் செய்திருப்பதால் வரு
33 ஷந் தோறும் தவறாமல் நடந்து வ
34 ர வேண்டியது இது தவறினால் தரு
35 ம சிந்தனையுள்ளவர் யாரேனுஞ்
36 சரிவர நடக்கும்படி செய்வீர்
37 களென்று நம்புகிறேன்
38 சௌபாக்ய லட்சுமிபாயி அம்மா

## 18. இரண்டாம் சரபோசி கல்வெட்டு :

1805ஆம் ஆண்டு இரண்டாம் சரபோசி மன்னர் இக்கோயிலுக்குச் செய்த திருப்பணிகளை இக்கல்வெட்டு விரிவாக விளக்குகிறது. இறைவன் சன்னிதி தெற்கு வாயிலின் கிழக்கு, மேற்கு ஆகிய இரு நிலைகளிலும் மராத்தி மொழியில் இக்கல் வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டின் பிற்பகுதி மிகவும் சிதைந்த நிலை யில் உள்ளது.

---

1 அடுத்த கல்வெட்டில் இவர் பெயர் கிருஷ்தப்பா பாயி என்று கூறப்படுகிறது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

**மேற்குப் பக்கம் :**

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகாப்தம் 1727 ஆயிரத்து எழுநூற்று இருபத்தேழு கலியுகத்தில் சென்ற வருடம் 4906 நாலாயிரத்துத் தொளாயிரத்து ஆறு இரத்தாட்சி ஆண்டு ஜேஷ்ட சுத்த பிரதமை வெள்ளிக்கிழமை பகல் 7 நாழிகைக்குப் பிறகு 17 நாழிகைக்குள் ஸ்ரீசங்கர நாராயணர் கோயிலில் ஸ்ரீசரபோசி ராசா அவர்களால் செய்யப்பட்ட திருப்பணி வேலைகட்கு விபரம் :*

*சுவாமியின் கர்ப்பக் கிரகத்தில் அர்த்த மண்டபத்தில் செங்கல் போட்டுக் காரை பூசப்பட்டது. மகா மண்டபம் முதலியன கட்டி அதிலிருந்து முற்றம் கட்டிக் காரை பூசப்பட்டது. அநேக மண்டபங்கள் செங்கற்கள் நிரப்பிக் காரை பூசப்பட்டது........... அதற்கும் செங்கல் போடப்பட்டு வேலைகள்...........*

**கிழக்குப் பக்கம் :**

*நாலா பக்கம் உள்ள கோபுரத்திலிருந்து உட்புறம் ஒன்றிரண்டு தூண்கள், உட்புற மண்டபம் கட்டப்பட்டது........ கட்டிக் கோபுரம் கட்டிக் காரை பூசப்பட்டது. மடப்பள்ளியும் மேலும்.... மண்டபத்துடன் சேர்த்துக் கிழக்குப் பக்கத்திலும் தெற்குப் பக்கத்திலும் உள்ள சுவர்கள் கட்டி மண்டபத்திற்கு மேலும் உள்ளும் செங்கல் போட்டுக் காரை பூசப்பட்டது.*

*தெற்குப் பிராகாரத்தில் சுவருக்கு ........... .... .. .... ..................... ........................ புதுக்கலசம் முதலியவைகளைச் செய்து சுவர்களைப் பழுது பார்த்து மேல்புறம் காரை பூசப்பட்டது.*

# 19. தஞ்சாவூர் துவாதசிக் கட்டளைச் சத்திரக் கல்வெட்டு

மேலராச வீதியில் உள்ள பாலாம்பிகை சமேத சங்கர நாராயணர் கோயிலில் துவாதசிக் கட்டளைக்காக இந்தச் சத்திரத்தைக் கட்டி 20-4-1891 முதல் துவாதசிக் கட்டளை இங்கு நடைபெறுமாறு செய்தவர் வச்சிர சூடாமணி சௌபாக்கியவதி சுந்தரேசுவரி பாயி என்ற கிருஷ்தப்பா பாயி சாகேப் ஆவார்.

இவர் இக்கல்வெட்டில் சிவாசி மன்னரின் பேத்தி என்றும், ராசஸ்ரீ விஜய வரதானந்தஜி சாகேப் அவர்கள் மகள் என்றும் குறிக்கப் பெறுகின்றார். விஜய வரதானந்தஜி சாகேப், சிவாசி மன்னரின் அந்தப்புரமாகிய மங்கள விலாசத்தைச் சேர்ந்த சௌபாக்கியவதி லட்சுமி பாயி அம்மாள் அவர்களின் மகன் ஆவார்.

கீழ்க்கண்டவாறு இவர்கள் கால்வழி அமையும்.

சிவாசி மன்னர் + சௌபாக்கியவதி லட்சுமிபாயி அம்மாள்



விஜய வரதானந்தஜி சாகேப்



வச்சிர சூடாமணி சௌபாக்கியவதி சுந்தரேசுவரி பாயி என்கிற
கிருஷ்தப்பா பாயி சாகேப்

லட்சுமிபாய் கவரா நாயுடு குடும்பத்தைச் சேர்ந்தவர். மங்கள விலாசத்தைச் சேர்ந்த அந்தப்புர மகளிர் வழி வந்தவர்கள் சிவாசி மன்னருடன் தம்மைத் தொடர்பு படுத்திக் கொள்வர் என்பதற்கு இக்கல்வெட்டு ஓர் எடுத்துக்காட்டு.

சங்கர நாராயணர் கோயிலில் உள்ள கல்வெட்டொன்றில் தமிழில் சௌபாக்கியவதி லட்சுமிபாயி அம்மாள் தன்னைத் 'தஞ்சாவூர் ஹயினேஸ் சிவாஜி மகாராஜா அவர்கள் கத்திகட்டி விவாகஞ் செய்து கொண்ட சௌ. லட்சுமு பாயி அம்மாளாகிய நான்' என்று குறித்துக் கொள்ளுகின்றார். இங்கு ஆங்கிலத்தில் 'Sword wife of H. H. Soubakya lakshmi Boyee Ammal' என்று குறிக்கப் பெறுகின்றார்.

## கல்வெட்டு

SRI. SUNKARA NARAYANA BALAMBIKA PRUSANA. THIS Chuttrum for Dwathasi katt alai is built according to the desire of the late Vajra Sudamony Soubakya vathi Sundareswari Boyee *alias* Kris tappa Boy Saheb grand-daughter of the late H. H. Sivaji Maharaj Chatra pati of Tanjore and daughter of H. H's Sword wife's son Ry. Vijaya Varada nundajee Saheb by her grand moth er and sword wife of H. H. Soubakya lakshmi Boyee Ammal. The Dwath asi Kattalai commences from the 20th April 1891.

# 20. தஞ்சாவூர் அரசினர் இராசா மிராசுதார் மருத்துவமனைக் கல்வெட்டு

1875 ஆம் ஆண்டு தஞ்சையில் மருத்துவப்பள்ளி ஒன்று தொடங்கப்பெற்றது. அப்பள்ளிக்கு இந்தியாவை ஆட்சிபுரிந்த இங்கிலாந்து நாட்டின் இளவரசர் பெருமானின் அப்போதைய தென்னிந்திய வருகையை ஒட்டி 'வேல்சு இளவரசர் மருத்துவப் பள்ளி' என்று பெயரிடப்பெற்றது. இப்பள்ளி தஞ்சைவாழ் மக்களின் பொருள் உதவியால் கட்டப்பெற்றது.[1]

பின்னர் என்றி சல்லிவன் தாமசு[2] அவர்கள் 1876ஆம் ஆண்டு தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்தபோது பெரிதும் முயன்று தஞ்சையில் மருத்துவ மனை ஒன்று பெரிய அளவில் கட்டவேண்டுமென்று மிகவும் விரும்பினார்.

அப்போது தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தின் தலைவியாக விளங்கிய சிவாசி மன்னரின் மனைவியார் காமாட்சியம்பா பாயி தனக்குச் சொந்தமாக இருந்த 'இராணி பூங்கா' என வழங்கிய இடத்தில் இருந்த சுமார் 40 ஏக்கர் நிலத்தை அன்பளிப்பாக வழங்கினார். பெரும் பொருளையும் கொடையாக வழங்கினார்.

திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவர் தவத்திரு இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள், பூண்டி வீரையா வாண்டையார், கபித்தலம் துரைசாமி மூப்பனார், பொறையாறு தவசிமுத்து நாடார், டி. கோபால கிருட்டிண பிள்ளை போன்ற பலர் பெரும் பொருட் செலவில்[3] பல கட்டிடங்களைக் கட்டித் தந்தனர். இன்றும் அவர்கள் 1876இல் செய்த கொடையை விளக்கும் கல்வெட்டுக்கள் மருத்துவமனைப் பகுதிகளில் ஆங்காங்கு உள்ளன. அவர்களின் வரைபடங்களும் மருத்துவமனை முதல்வர் அலுவலக அறையில் உள்ளன.[4]

---

1. இப்பள்ளி 1933இல் மூடப்பட்டது.
2. Henry Sullivan Thomas.
3. 1876இல் கட்டிய கட்டிடங்களின் மதிப்பு ரூ. 60,000.
4 பின்னர் மருத்துவமனையின் பல பகுதிகள் 1914-18 முதல் உலகப் பெரும் போர் வெற்றியின் நினைவாகவும், பின் வேறு பல ஆண்டுகளிலும் விரிவாக்கப்பட்டன.

71-6

அரசின் சார்பாக மாவட்ட ஆட்சித் தலைவர் என்றி சல்லிவன் தாயசு முயற்சி செய்தமையாலும், மராட்டிய அரச குடும்பத்தினர் நிலம் அளித்தமையாலும், தஞ்சை மாவட்டப் பெருமக்களாகிய மிராசுதார்கள் பலர் பற்பல கட்டிடங்கள் கட்டப் பெரும் பொருளை வழங்கியமையாலும் இத்தஞ்சை மருத்துவமனைக்கு 'அரசினர் இராசா மிராசுதார் மருத்துவமனை' என்று பெயர் ஏற்பட்டது. அப்பெயர் நூறாண்டு களுக்கு மேலாகியும் இன்றும் மாறாமல் அப்படியே வழங்கி வருகிறது.

இம்மருத்துவ மனைக்கு மராட்டிய அரசி காமாட்சியம்பா பாயின் நிலக் கொடையை அறிவிக்கும் இந்த ஆங்கில மொழிக் கல்வெட்டு, அவசர நோயாளிகள் பகுதியாக இன்று விளங்கும் 'தாமசு ஹால்' எனப்படும் பகுதியில் முன் அறையில் தென்கீழ் மூலையின் அடிப்பகுதியில் உள்ளது.

### கல்வெட்டு

This Hospital<br>
was built<br>
on the site presented by<br>
Her Highness the Princess of Tanjore IOCI<br>
By the voluntary contributions of<br>
the inhabitants of<br>
the District<br>
A. D. 1879

---

இக்கொடையை அளித்தவர் சிவாசியின் மகள்
விஜய மோகன முக்தாபாய் என்ற கருத்தும் உண்டு.

# 21. தஞ்சாவூர் லோகநாதேசுவரர் மடப்பள்ளிக் கல்வெட்டு

தஞ்சை நகரில் கோட்டையின்உள் தென்கிழக்கு எல்லையில் சாமந்தான் குளத்தின் மேல்கரையில் உள்ள பழமையான மடப்பள்ளிக் கட்டிடத்தில் இக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

தஞ்சாவூர்க் கோட்டையின் தென்கீழ்ப் பக்கம், சாமந்தான்குளம் என்ற பெரிய குளம் உள்ளது. இக்குளத்தின் மேல்கரையில் லோகநாதேசுவரர் என்ற சிவன் கோயில் சிறிய அமைப்பில் கட்டப்பெற்றுள்ளது.

அக்கோயிலின் வடபால். லோகநாதேசுவரர் கோயில் மடப்பள்ளிக்காகத் தஞ்சாவூர் மராட்டியர் மரபினரான புசங்கராவ் அவர்கள் ஒரு கட்டிடம் கட்டிக் கொடையாக அளித்தார். காலப்போக்கில் அம்மடப்பள்ளிக் கட்டிடம் பழுதடைந்து விட்டது.

புசங்கராவ் அவர்களின் பெயரர் C.S. இராமராவ் அவர்கள் 1914ஆம் ஆண்டு அந்த மடப்பள்ளிக் கட்டிடத்தைப் புதுப்பித்துக் கட்டி இக்கல்வெட்டையும் அங்குப் பொறித்து வைத்தார்.

## கல்வெட்டு

1 உ
2 *சிவமயம்*
3 *இந்த மடப்ப[ள்]ளி*
4 *கட்டடம் அடுத்த ஸ்ரீ*
5 *லோகநாதேஸ்வர ஸ்*
6 *வாமிக்கு நைவேத்தி*
7 *யம் செய்ய என் ப*

8 ரட்டனார் புஜங்க றா
9 வ் அவர்களால் கட்ட
10 ப் பட்டது ஷெ கட்டட
11 ம் ஜீரணமாய்ப் போன
12 படியால் ஷெ யார் பேரன்
13 c. s. றாம றாவ் அ
14 வர்களால் புதுப்பி
15 த்து கட்டப்பட்ட தர்ம
16 ம்
17 29 - 2 - 1914

# 22 - 34. தஞ்சாவூர் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள்

மாமன்னன் முதலாம் இராசராசன் (985-1014) கட்டுவித்த பெரும் கலைக் கோயில் தஞ்சைப் பெருவுடையார் கோயில். கி. பி. 1004இல் இக்கோயிலைக் கட்டத் தொடங்கி ஏறத்தாழ 7 ஆண்டுகளில் இராசராசன் கட்டி முடித்தான். இதன் குடமுழுக்கு இராசராசனின் 25ஆம் ஆட்சியாண்டில் (1010) நடைபெற்றிருக்க வேண்டும் என்பதை,

> 'யாண்டு இருபத்தைஞ்சாவது நாள் இருநூற்றெழுபத்தைஞ்சினால் உடையார் ஸ்ரீராஜராஜதேவர் ஸ்ரீராஜராஜீச்வரமுடையார் ஸ்ரீ விமானத்துச் செம்பின் ஸ்தூபித்தறியில் வைக்கக் கொடுத்த செப்புக்குடம் ஒன்று'

என்ற கல்வெட்டுப் பகுதியால் அறியலாம். விமானத்தில் கல்வெட்டுக்களைப் பொறிக்க 26ஆம் ஆட்சியாண்டு 20ஆம் நாளில் (1011) இராசராசன் ஆணை பிறப்பித்துள்ளான்.

## 22. முதலாம் சரபோசி திருப்பணி :

241.51 மீட்டர் நீளமும் 125.218 மீட்டர் அகலமும் உள்ள பெருவுடையார் கோயிலின் கருவறையின்மீது 66 மீட்டர் உயரமான 'தட்சிண மேரு' என்னும் விமானம் வீறுடன் விளங்குகிறது. விமானத்தின் மேல் 7.77 மீட்டர் பக்கமுள்ள சதுரக் கல்லின்மேல் கலசம் (செப்புக்குடம்) அமைக்கப்பட்டுள்ளது.

இக்கலசம் 339.55 கிலோகிராம் எடையுள்ளது என்றும், அக்கலசத்தின்மேல் வேயப்பட்டுள்ள பொன் தகடு 2926½ கழஞ்சு (1902 சவரன்) எடையுடையது என்றும் கூறுவர்.

இக்கலசத்தின் கீழ்ப்பகுதியில் தெற்குப் பக்கம் இவ்வெழுத்துக்கள் பொறிக்கப் பட்டுள்ளன.[1] 1729இல்முதலாம் சரபோசி (1711 - 1729) காலத்தில் பெருவுடையார் கோயிலில் பல திருப்பணிகள் நடைபெற்றுக் குடமுழுக்கு விழா நடைபெற்றதென இப்பொறிப்புக்கள் மூலம் அறிகின்றோம்.

### எழுத்துப் பொறிப்பு

1 ராரா சறபோசி மகாராசா
2 உபையம்

## 23. கோயிலார் திருப்பணி :

முதலாம் சரபோசி மன்னரின் பொறிப்புக்கு அருகில் வேறு சில எழுத்துப் பொறிப்புக்களும் காணப்படுகின்றன. முதலாம் சரபோசி மன்னர் காலத்தில் கோயில் நிருவாகிகளாக இருந்தவர்களும், கோயில் அர்ச்சகர்களும் செய்த கொடைச் செயல்களை இவை விளக்குகின்றன.[2] இவை நான்கு பகுதிகளாகப் பொறிக்கப் பட்டுள்ளன.

### எழுத்துப் பொறிப்பு

அ. 1 தானம் தாண்டவ
2 ராய பிள்ளை
ஆ. 3 ஸ்வாதி குருக்கள்
4 வீரபத்திர முதலியார்
5 சதா சேருவை
இ. 6 சவுமிய வருசம் சித்திரை மாதம்
7 பஞ்சலோக கலசமதில் கோத்தது சிவபெருமாள் கொத்தன்
8 வைத்தது தேவர் நர்சி
ஈ. 9 கோயிலார் சுவாமிக்கு தன்மம்

'கோயிலார் சுவாமிக்கு தன்மம்' என்ற கடைசி வரி தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் கல்வெட்டுத் துறையினர் விமானக் கலசத்தில் புதியதாகக் கண்டுபிடித்த தொடராகும்.

---

1. *A. R. E.* No. 252 of 1971 - 72
2. *A. R. E.* No. 251, 252 of 1971 - 72

## 24. சிவாசி திருப்பணி :

கி. பி. 1729இல் முதலாம் சரபோசி மன்னர் காலத்தில் தஞ்சைப் பெரிய கோயிலில் திருப்பணிகள் சில செய்து குடமுழுக்கு விழாச் சிறப்புடன் நடைபெற்றது. அதற்குப்பின் தஞ்சை மராட்டிய மரபின் கடைசி மன்னர் சிவாசி (1832-1855) சிகரப் பிரதிட்டையும், அட்டபந்தனமும் செய்து 7—9—1843 வியாழக்கிழமை அன்று குட முழுக்கு விழாவினைச் செய்தார் என்று ஓர் எழுத்துப் பொறிப்புக் கூறுகிறது.[3] இதில் முதலாம் சரபோசியின் திருப்பணியும் குறிப்பிடப்பெறுகிறது. இது விமானக் கல சத்தின் வடபுறம் உள்ளது.

இப்பொறிப்பு தமிழ் மொழியில் கிரந்த எழுத்தில் வெட்டப்பட்டுள்ளது ஒரு புதுமையாகும். இதன் அருகிலேயே இதன் மராத்தி மொழி வடிவமும் வெட்டப் பட்டுள்ளது.[4]

### எழுத்துப் பொறிப்பு

1) *ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகந சகம் 1765 கலியப்தம் 4944 யிதின் மேலே செல்லாநிண்ட[5] சோபகிருது வருசம் ஆவணி மாசம் 24 தேதி சுக்லபட்சஞ் சதுர்த்தசி குருவாரத்தில்*
2) *சாலிவாகந சகம் 1651 சவுமிய வருஷத்தில் ஜீரணோத்தாரம் சைதிருக்க[6] க்ஷத்திரிய குல பூஷண போசல குலோத்பவரான சரபோஜி மகாராஜா வினுடைய*
3) *பேரனுக்குப் பேரனாகிய ஸ்ரீமத் சோள சிம்மாசனாதிபதி ஸ்ரீமது ராஜஸ்ரீ சிவாஜீந்திர மகாராஜா சத்ரபதி சாகேப் அவர்கள் ஸ்ரீசுவாமிக்கு சிகர பிரதிஷ்ட்டை அஷ்ட்ட பந்தனம்*
4) *முதலான ஜீர்ணோத்தாரம் கும்பாபிஷேகம் சைதார்[7]*

மேலே பதிப்பிக்கப் பெற்ற மூன்று எழுத்துப் பொறிப்புக்களும் விமானச் செப்புக் கலசத்தில் பொறிக்கப் பெற்றுள்ளன என்றாலும், தஞ்சை மராட்டியமரபினர் திருப்பணியைக் குறிப்பதாலும், மிக இன்றியமையாத பொறிப்புக்கள் ஆதலாலும் இங்குச் சேர்க்கப்பட்டுள்ளன.

---

3. *A. R. E.* No 249 of 1971-72 4. *A. R. E.* No 250 of 1971-72

5. செல்லாநின்ற

6. செய்திருக்க

7. செய்தார்

## இரண்டாம் சரபோசி கல்வெட்டுக்கள்

**1798இல் தஞ்சை மராட்டிய மன்னர் அமர்சிங் பதவி நீக்கம் செய்யப்பட்டுத் திருவிடைமருதூருக்கு அனுப்பப் பெற்றபின் பதவிக்கு வந்த இரண்டாம் சரபோசி மன்னர் (1798 - 1832) தஞ்சைப் பெரிய கோயிலில் பல்வேறு திருப்பணிகளைச் செய்தார். அவை அனைத்தும் மராத்தி மொழியில் வெட்டப்பட்டுள்ளன; அவை களை மைய அரசின் கல்வெட்டுத் துறையினர் படி எடுத்துள்ளனர். அவற்றின் மொழிபெயர்ப்புக்கள் கீழே அளிக்கப்பட்டுள்ளன.**

### 25. கிழக்குப் பிராகாரக் கல்வெட்டு[8] :

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1723க்குச் செல்லாநின்ற கலியுகம் 4902க்குப் பிறகு நடக்கும் துர்மதி ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்கில பக்கம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா சரபோசி மகாராசா அவர்கள் செய்த சிரேபந்தி[9] தருமம்.*

### 26. வடக்குப் பிராகாரத் தூண் கல்வெட்டு[10]-அ :

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1723 கலியுகம் 4902க்குப் பிறகு நடக்கும் துர்மதி ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்கில பக்கம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா ஸ்ரீ சரபோசி மகாராசா கட்டிய கோயிலுக்கு வடமேற்குப் பாகத்தில் தெற்கு முகத்தில் இருபது பழைய அங்கணம் புதிய இருபத்தாறு பிராகார சாலைகள் தருமம்.*

### 27. வடக்குப் பிராகாரத் தூண் கல்வெட்டு[11]-ஆ :

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1723 கலியுகம் 4902க்குப் பிறகு நடக்கும் துர்மதி ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்கில பக்கம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா ஸ்ரீ சரபோசி மகாராசா கட்டிய கோயிலுக்கு வடமேற்குப் பாகத்திலிருந்து கிழக்குப் பக்கத்தில் முடிவுவரையில் தெற்கு முகத்தில் 20 பழைய அங்கணம் புதிய 26 பிராகார சாலைகள் தருமம்.*

### 28. கிணற்றுக் கல்வெட்டு[12] :

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1724க்கு மேல் செல்லாநின்ற கலியுகம் 4903க்குப் பிறகு நடக்கும் உருத்ரோத்காரி ஆண்டு ஆவணி மாதம் திகழி[13] தேதி*

---

8. *A. R. E.* No. 415 of 1924.
9. இத்தொடர் தரையில் கருங்கல் பாவியதைக் குறிக்கும்.
10. *A. R. E.* No. 416 of 1924.
11. *A. R. E* No. 417 of 1924.
12. *A. R. E.* No. 419 of 1924.
13. திகழி என்பது தமிழைக் குறிக்கும்.

ஆடி மாதம் 10 ஆம் தேதி சுக்கில பக்கம் பஞ்சமி சனிக்கிழமை உத்திர நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா ஸ்ரீ சரபோசி மகாராசா வடக்குப் பிராகாரம் கிழக்குப் பக்கத்தில் செய்த தருமம். இங்கு இருந்த மண்டுக தீர்த்தம்[14] மிகவும் சிதைந்திருந்தது. இப்போது அத்தீர்த்தம் கிணறு வடிவில் சரபோசி மன்னரால் மாற்றி அமைக்கப் பட்டது.

## 29. விநாயகர் கோயில் வாயிற்படிக் கல்வெட்டு[15] :

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1723 கலியுகம் 4902க்குப் பிறகு நடக்கும் துர்மதி ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்கில பக்கம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா ஸ்ரீ சரபோசி மகாராசா அவர்கள் கர்ப்பக் கிரகத்தை நிற்கவைத்து அர்த்த மண்டபத்திலிருந்து தூண்களும் கொறடும் புதியதாகக் கட்டி அர்த்தமண்டபம், மகாமண்டபம் இவைகளைப் புதியதாகக் கட்டினார்.

## 30. வாகன மண்டபப்படிக் கல்வெட்டு[16] :

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1723 சென்ற கலியுகம் 4902க்கு மேல் நடக்கும் துர்மதி ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்கில பக்கம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா ஸ்ரீ சரபோசி மகாராசா அவர்களால் சுப்பிரமணிய சுவாமியின் கோயில் மண்டபத்துக்கு எதிரிலிருக்கும் மண்டபத்தில் சுவர்களைக் கட்டி இரண்டு மண்டபத்தையும் சேர்த்துப் புது மண்டபமாகச் செய்து படிகளும் புதியதாகக் கட்டப்பட்டன. இவ்விதமாகத் திருப்பணிகள் நடைபெற்றன.

## 31. விநாயகர் கோயில் வடக்கு, மேற்குச் சுவர்க் கல்வெட்டு[17] :

ஸ்வஸ்திஸ்ரீ மகாமண்டலேசுவரன் ராசாதிராச ராச கம்பீர போசல வம்ச குல சிகாமணி மகாராசா ஸ்ரீ பிரதாபசிம்ம மகாராசா சாகேப் அவர்கள் கருவில் தலைமணியாகப் பிறந்த மகாராச ராசஸ்ரீ துளசா மகாராசா சாகேப் அவர்கள் மகன் மகாராசஸ்ரீ சரபோசி மகாராசா சாகேப் அவர்கள் ஸ்ரீ ராமன் அவதாரத்திலிருந்து சோழ நீதிக்கும் அதிகமாக அரச பரிபாலனம் செய்துகொண்டு வரும்பொழுது வெட்டி

14. 'சோழர் காலக் கல் நந்தியின் உள்ளே ஒரு தேரை இருந்து அது ஒரு சிற்பியால் வெளிப்பட்டு. இத்தீர்த்தத்தினுள் விழுந்ததால் இதற்கு 'மண்டூகத்தீர்த்தம்' எனப் பெயராயிற்று' (மண்டூகம் - தவளை, தேரை) - பிரகதீசுவர மகாத்மியம், சரசுவதி மகால் வெளியீடு, 1985. பக். 35.
15. *A. R. E.* No. 420 of 1924.
16. *A. R. E.* No. 111 of 1927-28.
17. *A. R. E.* No. 421 of 1924.

யான், கல்வெட்டி[18] வகையராக்கள் அரச சபைக்கு விண்ணப்பம் கொடுத்தார்கள். அந்த விண்ணப்பத்தினை அரசர் நீதி மகாலுக்கு அனுப்பி விசாரணை செய்கிறது என்று உத்தரவாகி வந்த விண்ணப்பம் வந்தபடிக்கு :

கல்வெட்டி எழுதிக் கொடுத்த மனு விவரம் : ''தஞ்சை நகர வெட்டியான் காணியாட்சி முன்பு என்னுடையதாயிருந்தது. சென்ற சில ஆண்டுகளில் அது தங்களுடையது என்று சையத்தினுடைய அதிகாரிகள் புதியதாகப் பறையன் தஞ்சான், கொடியான், சின்னான் ஆகிய மூவரை நியமித்தார்கள். இவர்கள் கோட்டையில் வெட்டியான்கள் காணியை ஆண்டு வந்தார்கள் ; மேலும் கிழக்குப் பேட்டையின் வெட்டியான் காணியைத் தங்கள் பங்காளி பெரமானிடமிருந்து எடுத்துக்கொண்டனர்; இதை விசாரித்து நீதி வழங்க வேண்டும்''.

இந்த மனுவில் பெரமானும் கையெழுத்துப் போட்டான். இதற்காகத் தஞ்சான், கொடியான், சின்னான் இவர்களைக் கூப்பிட்டழைத்து விசாரணை செய்ததில் அவர்கள் எழுதிக் கொடுத்த விவரம் :

''வெகு காலத்திலிருந்தே தஞ்சை நகர வெட்டியான் காணி எங்களுடையதே. 70, 80 ஆண்டுகளுக்கு முன்னர் கல்வெட்டியின் முன்னோர் தஞ்சாவூர் நகர வெட்டியான் காணியாட்சி தங்களுடையது என்று வற்புறுத்திப் பறித்துக் கொண்டார்கள். அது உடனடியாகப் பொய்யென்று ஆகிவிட்டது.

எங்களுடைய காணியாட்சியை நாங்கள் அனுபவித்து வரும்போது மறுபடியும் இருமுறை கல்வெட்டி விவகாரம் செய்து பொய்யாகிப் போய்விட்டது. இப்போது காணியாட்சி எங்களுடையதாய் இருக்கிறது.''

நியாயமாக விசாரிக்க வேண்டும் என்று கல்வெட்டி எழுதிக் கொடுத்திருக்கிறான். இருவரும் எழுதிக் கொடுத்தபடி இரு வாதிகளையும் கூப்பிட்டழைத்துச் சாட்சியுடன் விவகாரத்தை அறிந்துகொள்ள வேண்டும் என்றும் எழுதித்தந்துள்ளனர்.

பிரகதீசுவர சுவாமியின் சன்னிதியில் சூடான நெய்யில் கை முக்கியதில் தஞ்சான், கொடியான், சின்னான் இவர்களில் தஞ்சானுடைய விரல்கள் மட்டும் எரிச்சல் பெறவில்லை.

வெட்டியான் காணியாட்சி என்னுடையது என்று நிச்சயம் செய்து கொண்டு வந்த விவகாரம் தோற்றுவிட்டது என்று மன்னிப்பு எழுதித் தருகிறேன் என்று கல்வெட்டி எழுதிக் கொடுத்தான்.

சாலிவாகன சகாப்தம் 1724 கலியுகம் 4903 துந்துபி ஆண்டு ஆடி மாதம் 8ஆம் தேதிக்கு பிரகதீசுவரசுவாமி கோயிலின் சன்னிதியில் நெய்யைக் கொதிக்க வைத்து,

---

18. கல்வெட்டி- ஒரு ஆளின் பெயர்.

கொதிக்க வைத்த நெய்யில் தஞ்சன் வெட்டியான் காணியாட்சி தன்னுடையது என்றும், கல்வெட்டிக்கு இல்லை என்றும் சொல்லி விரலை விட்டான் ; விரல்கள் எரியவில்லை. அதைக் கல்வெட்டி ஒப்புக்கொண்டு காணியாட்சி என்னுடையது என்று கட்சி ஆடியதை நான் இதற்குமேல் வழக்காடவில்லை ; தஞ்சன், கொடியான், சின்னான் இவர்கள் அனுபவித்து வந்துகொண்டிருக்கிற வெட்டியான் காணியாட்சியைத் தஞ்சன், கொடியான், சின்னான் இவர்களே அனுபவித்து வருவதற்குச் சம்மதிக்கிறேன் ; நான் எழுதிக் கொடுத்தது தவறு என்று கல்வெட்டி எழுதிக் கொடுத்தான். அதில் பெரமான் கையெழுத்துப் போட்டான்.

இரண்டு பேருடைய மனு கையெழுத்துப் பிரமாணத்திலிருந்து கொடியானுடைய வெட்டியான் காணியாட்சி கல்வெட்டிக்கு அவசியமில்லை என்றும், கிழக்குப் பக்கத்தில் உள்ள பேட்டையில் தஞ்சன், கொடியான், சின்னான் ஆகிய இவர்கள் இன்றுவரையில் எவ்வளவு அனுபவித்து வருகிறார்களோ அவ்வளவு பெரமானுக்கு அவசியமில்லை என்றும், கோட்டை மற்றும் கிழக்குப் பக்கத்திலுள்ள பேட்டையில் தஞ்சன், கொடியான், சின்னான் இவர்கள் இன்றுவரையில் அனுபவித்து வந்து கொண்டிருப்பதற்குச் சாட்சியாக சந்திர சூரியர் உள்ளவரை மகன் பேரன் வழியில் தஞ்சான், கொடியான், சின்னான் இவர்களே அனுபவித்து வருகிறது என்றும், கிழக்குப் பக்கத்தில் பேட்டையில் தஞ்சன், கொடியான் சின்னான் ஆகியோர் இன்றுவரையில் அனுபவித்து வருகிறது போக எஞ்சியது பெரமான் இன்று வரையில் அனுபவித்து வருவதைப் போல் பெரமானே அனுபவித்து வரவேண்டியது என்றும் முடிவு செய்து தஞ்சான், கொடியான், சின்னான் ஆகிய மூன்று பேருக்கும் வெற்றிப் பத்திரம் கொடுத்து அது ஸ்ரீ பிரகதீசுவரசுவாமி கோயிலில் கல்லின்மேல் எழுதப்பட்டிருக்கிறது.

## 32. விநாயகர் கோயில் மேற்கு, தெற்குச்சுவர்க் கல்வெட்டு[19] :

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1720 கலியுகம் 4899 பிரகதீசுவர சுவாமிக்கு ராசா சரபோசி ராசா அவர்கள் நகைகள், பாத்திரங்கள் கொடுத்த விபரம் :

வைரக்கற்கள் பதித்த சந்திரன் போன்ற பதக்கம். இரதத்தின் மேல் அமர்ந்து அரண்மனையின் மாடிக்கு அண்மையில் வந்தபோது அளித்த பச்சைக்கல் பதக்கம். மாணிக்கம், முத்துக்கள் பதித்துச் சரிகையால் ஆன வடம். வெள்ளிக் கிண்ணங்களும் வேலைப்பாடு மிக்க கிண்ணங்களும். பெரிய நிலைப்பாத்திரங்கள். வெள்ளியில் செய்த வேலைகளுடன் நடுவில் பொன்னையும் சேர்த்துக் கட்டிய சங்கு, முத்து, பவளம், பொன்னால் செய்யப்பட்ட மணிகளுடன் கூடியது. அந்தச் சங்கை வைக்கப்

19. *A. R. E.* No. 422 of 1924.

பீடம் ஒன்று. 26 குமிழ்கள் உள்ள கோபுர ஆரத்தி. அகலமான பாத்திரங்கள், தேவிக்குக் கிரீடம், கவசம், அங்கங்கு கொக்கிகளுடன் கூடிய உடைகள்.

மகர குண்டலங்கள், கைக்குக் கங்கணங்கள், விரலுக்கு மோதிரங்கள், கைக்குத் தாமரை போன்ற பூக்கள். பாடகம், குசராத்திக் கொலுசு, தோடா, பூநகை, மெட்டிகள் போன்ற கால் நகைகள். ஒட்டியாணம், சூரியன், சந்திரன் போன்ற தலை நகைகள். தொங்கட்டான், நெற்றிச் சுட்டி, வகிடு நகைகள், பதக்கம், சந்திரமாலை, மணிக்கட்டு நகை, நெற்றிப்பொட்டு, நெற்றியில் கட்டும் பிற அணிகள், மூக்குத்தி, சங்கிலி, மோதிரம், சடை அணிகலன்கள், 108 சிறிய சிவலிங்கங்கள் வெள்ளிக் கம்பியில் கோத்த தாலி, கற்பூரத்தட்டு, தூப ஆரத்தி, ஐந்து ஆரத்தி, வெள்ளி இடபமும் கைப் பிடியுடனும் கூடிய மணி, சங்கு, காளாஞ்சி, கைப்பிடி வைத்த ஆரத்தித்தட்டு.

**(கற்களின் எண்ணிக்கை, அளவுகள், எடை ஆகியவை மிகவும் சிதைந்து புரியாமல் உள்ளதால் விடப்பட்டுள்ளன.)**

## 33. விநாயகர் கோயில் வடக்குச் சுவர்க் கல்வெட்டு[20] :

ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1723க்குச் செல்லாநின்ற கலியுகம் 4902க்குப் பிறகு நடந்த துர்மதி ஆண்டு வைகாசி மாதம் 3ஆம் தேதி சுக்கில பக்கம் துவிதியை வியாழக்கிழமை ரோகிணி நட்சத்திரம் கூடிய நன்னாளில் ராசா சரபோசி மகாராசா அவர்கள் பிரகதீசுவரர் கோயிலில் பல்வேறு திருப்பணிகளைச் செய்தார். அவை களின் விவரம் :

சுப்பிரமணிய சுவாமி கோவில் கோபுரம், கொடுங்கையிலிருந்து தூபி வரை யில் திருப்பணி வேலை செய்து, சுதையினால் விக்கிரகங்கள் அமைத்து, வண்ணம் பூசி, புதிய கலசம் வைத்து, குடமுழுக்குச் செய்து அர்த்தமண்டபம் மகாமண்டபம் இவைகளின்மேல் செங்கல் தளமிட்டுக் காரை பூசி,மண்டபத்தின் முன்பு 300 வெள்ளைக் கல் பாவி, தளவரிசை செய்து, மண்டபத்தின் நான்கு பக்கங்களிலும் சுவரிலும் செங்கல்லினால் படிகள் அமைத்து இணைப்பாகத் திருப்பணிகள் நடைபெற்றன.

அம்மன் சன்னிதியில் கருவறை மேல் 3 நிலைகளிலும் அர்த்தமண்டபம், மகா மண்டபம், வைரவ மண்டபம், எதிரில் உள்ள நந்தி மண்டபம் ஆக ஏழு மண்டபங்களின் மீதும் செங்கல் வேலைகள் செய்து காரைபூசித் தளவரிசை அமைத்து மகாமண்டபத் தின்மேல் தெற்கு, வடக்கு ஆகிய இரண்டு பக்கங்களிலும் குறடுகளின்மேல் வெள்ளைக் கல் தளவரிசை 20 அடி செய்து புதியதாகக் காரை பூசப்பட்டது.

சபாபதி கோயிலில் அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆக இரண்டு மண்டபங்கள்

---

20. *A.R.E.* No. 423 of 1924.

*மீது செங்கல்லால் தளவரிசை செய்து காரை பூசி மண்டபத்தில் 200 அடி வெள்ளைக் கல்லால் தளவரிசை செய்யப்பட்டது.*

*தட்சிணாமூர்த்தி கோபுரத்திற்கு மண்டபத்திலிருந்து தூபி வரையில் தாழ்வாரம் அமைத்து வண்ணம் பூசப்பட்டது.*

*சண்டிகேசுவரர் கருவறை மேல் மண்டபத்திலிருந்து தூபி வரையில் தாழ்வாரம் போட்டு, புது விக்கிரகம் செய்து வண்ணம் பூசிப் புதிய கலசமும் வைத்துக் குடமுழுக்கும் செய்து மண்டபத்தின்மேல் செங்கல் தளவரிசை செய்து காரை பூசப்பட்டது.*

*மடப்பள்ளி மண்டபத்திற்கும் சுவருக்கும் செங்கல் வைத்துக் காரைபூசப்பட்டது.*

*தெற்குப் பிராகாரத்தில் கிழக்குப் பக்கத்தில் திருமாளிகைப் பத்தியில் திண்ணையிலிருந்து மேற்குப் பக்கம் திருமாளிகைப் பத்திவரை பசுக்களுக்குக் கொட்டில் செங்கல்லினால் புதியதாகச் சுவர்போட்டுக் காரை பூசிக் கட்டப்பட்டது. கஜம் 260. குறுக்குச்சுவர் கஜம் 90. ஆக 350 கஜம் புதியதாகச் சுவர் அமைக்கப்பட்டது.*

*திருமாளிகைப் பத்தியில் 241 சிறு லிங்கங்களும், ஓர் அம்மனும் ஆக 242 படிமங்கள் எழுந்தருளுவிக்கப்பட்டன.*

*வடக்குப் பக்கம் பிராகாரத்தில் தேவியின் கோயிலில் 4 பிராகாரங்களிலும் செங்கல் தளவரிசை புதியதாகச் செய்து நடுவில் வெள்ளைக்கல் தளவரிசை போடப்பட்டது. இதன் நீளம் 1500 கஜம்.*

*இந்த விதத்தில் செங்கல்லால் தளவரிசை 3 செங்கல் உயரத்திற்குப் போட்டு 180 கஜம் வரையில் தளவரிசை செய்து 4 பக்கத்துத் தண்ணீரும் சாய்க்கடையில் போய் விழும்படியாகக் கட்டப்பட்டது.*

*கோபுரத்திற்கு எதிரில் அட்டக்கொடித் தூண் மேடை வெள்ளைக் கல்லால் குறடு போட்டுச் செங்கல்லினால் $1\frac{1}{4}$ கஜம் 3 கஜ நீள அகலத்திற்குப் போட்டுப் புதியதாகக் கட்டப்பட்டது.*

## 34. வடக்குப் பிராகாரக் கல்வெட்டு[21] :

**இக்கல்வெட்டு தெற்குச் சுவரில் உள்ள போன்சலே வம்ச சரித்திரத்தைக் கூறும் பெரிய கல்வெட்டின் தொடக்கப் பகுதிகள் சிலவற்றைக் கொண்டுள்ளது. பெரிய எழுத்துக்களில் வெட்டப்பட்டுள்ளது. தரையின் மேல் கற்களில் மக்கள் நடக்கும் பகுதியில் உள்ள காரணத்தால் பல பகுதிகள் தேய்ந்தும் அழிந்தும் காணப்படுகின்றன.**

---

21. *A.R.E.* No. 418 of 1924

இக்கல்வெட்டு *A.R.E.* No. 424 of 1924 ன் தொடக்கப் பகுதிகளேயாகும்.

கல்வெட்டு முழுமையாக இல்லை. ஒரு சில பகுதிகளே அழியாமல் உள்ளன. முதலில் போன்சலே வரலாறு கூறும் இக்கல்வெட்டைப் பிராகாரத்தின் தரை முழுவதிலும் வெட்ட முயற்சி மேற்கொள்ளப்பட்டது போலும். பின் யாது காரணம் பற்றியோ வரலாற்றுக் கல்வெட்டு பிராகாரத் தரையில் வெட்டப் பெறாமல் தெற்குச் சுவரில் வெட்டப்பட்டிருக்க வேண்டும்.

# 35. தஞ்சாவூர் சுப்பிரமணியர் கோயில் கல்வெட்டு

தஞ்சாவூர்க் கோட்டையினுள் மேல வாயில் அருகே இருக்கும் பகுதி மேல அலங்கம் எனப்படும். அங்குச் செயற்கையாக அமைக்கப்பட்ட சிறு குன்றுபோன்ற பகுதியில் இச்சுப்பிரமணியர் கோயில் உள்ளது. கோயிலின் உட்செல்ல 18 படிகள் உள்ளன. முருகன் கோயிலுக்கு ஏற்பக் கோயில் புறச்சுவர்களில் சில இடங்களில் மயில்களின் சிற்பங்கள் அழகுறச் செதுக்கப்பெற்றுள்ளன.

1757ஆம் ஆண்டு தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் காலத்திய செப்பேடு ஒன்று இக்கோயிலில் உள்ளது. தஞ்சை, வல்லம் வணிகர்கள் கொடை அளித்து இரவுவேளைப் பூசை செய்துள்ளனர். அச்செப்பேட்டில் 'மேலக்கோட்டை வாசல் குமாரசுவாமி' என்று இச்சுப்பிரமணியர் அழைக்கப்பட்டுள்ளார்.

1872ஆம் ஆண்டு சிவாசி மன்னரின் அந்தப்புர மகளிருள் ஒருவராகிய மங்கள விலாசத்தைச் சேர்ந்த காமுபாயி அம்மா அவர்கள் இக்கோயிலுக்குச் சில திருப் பணிகள் செய்து கும்பாபிடேகம் செய்துள்ளார். சிவலிங்கம் ஒன்றையும் பிரதிட்டை செய்துள்ளார்.

இக்கோயிலின் வடக்குத் திருச்சுற்றிலிருந்து கோயிலுக்கு உள்ளே வரும் வழியில் தரையில் இக்கல்வெட்டு உள்ள கல் பதிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

1 *ஸ்ரீ பிரசோத்பத்தி ஷு மாசி மாத*
2 *ம் காமுபாயி அம்மா அவ*
3 *ர்கள் திருப்பணீ வேலையு*
4 *ம் கும்பாபிஷேகமு[ம்]செயிவி*
5 *த்து சிவ பிரதிஸ்ட்டை*
6 *செயிதார்கள் 1872 ஷு*

# 36. தஞ்சாவூர் காசி விசுவநாதர் கோயில் கல்வெட்டு

தஞ்சைக் கோட்டை மேலவீதியில் உள்ள சிவாலயங்களில் இதுவும் ஒன்று. 1805ஆம் ஆண்டு இரண்டாம் சரபோசி மன்னரால் இக்கோயிலின் பெரும்பகுதி திருப்பணி செய்யப்பட்டதென்று இம்மராத்தி மொழிக் கல்வெட்டால் அறியலாம். கோயில் நுழைவாயில் நிலையின் இருபுறமும் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

**தெற்கு நிலை :**

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகாப்தம் 1727 ஆயிரத்து எழுநூற்று இருபத்தேழு சென்ற கலியுகம் 4906 நான்காயிரத்துத் தொளாயிரத்து ஆறு அதற்குமேல் நடப்பு குரோதன ஆண்டு மாசி மாதம் தேய்பிறை பஞ்சமி சனிக்கிழமை பகல் 14 நாழிகைக்குமேல் 16 நாழிகைக்குள் இந்த நல்ல நாளில் ஸ்ரீ சரபோசி மகாராசா அவர்களால் விசுவநாதசுவாமி கோயிலில் செய்யப்பட்ட திருப்பணி வேலைகளுக்கு விபரம் :*

*விசுவநாத சுவாமியின் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், விசாலாட்சி அம்பாளின் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம் இப்படிப்பட்ட பல பகுதிகள் கட்டப்பட்டன.*

**வடக்கு நிலை :**

*இதன் எதிர்த்திசையில் கோபுரம், முற்றம், கணேசர் மண்டபம், முற்றம், சுப்பிரமணியர் மண்டபம், முற்றம், சண்டிகேசுவரர் கர்ப்பக்கிரகம், மேலும் அர்த்தமண்டபம், சபாபதிமண்டபம், முற்றம், மேலும் உக்கிராணமண்டபம், முற்றம், யாகசாலைகள், மண்டபம், முற்றம் ஆகியன கட்டப்பட்டன.*

தென்புறத்தில் உள்ள பிராகாரத்தில் நிலம் வாங்கிக் கட்டப்பட்டது. நான்கு பிராகாரத்தில் உள்ள சுவர்கள் தளவரிசை இம்மாதிரியாக அத்திவாரத்திலிருந்து திருப் பணி வேலைகள் அனைத்தையும் புதியதாகச் செய்வித்தார்.

# 37. தஞ்சாவூர் விசயராமர் கோயில் கல்வெட்டு

தஞ்சைக் கோட்டைக்குள் மேற்கு வீதியில் உள்ள டபீர் விசய இராமசாமி கோயில் என்று வழங்கப்படும் விசயராமர் கோயிலின் மகா மண்டப வாயில் நிலையின் இருபக்கங்களிலும் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

தஞ்சை மராட்டிய மன்னர், நில அளவுக்கென வடநாட்டிலிருந்து வரவழைத்த டபீர் பண்டிதர் என்பவர் தாம் நாள்தோறும் பொழுது புலர்வதற்கு முன் தம் கொட்டிலில் உள்ள பசுக்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்கள் கொடுத்துப் பராமரிப்பது வழக்கம். ஒருநாள் அவ்வழக்கம் தவறிப் பசுக்கள் உணவின்றிக் கிடந்த பாவத்தைப் போக்கத் தஞ்சைக் கீழவாயிலுக்கு அடுத்து இக்கோயிலையும், டபீர் குளம் என்ற திருக்குளத்தையும் கட்டியதாகவும், கோயில் மாத்திரம் பிற்காலத்தில் அங்கிருந்து மேலவீதியில் இடம் மாற்றிக் கட்டப்பெற்றது என்றும் கூறுவர். 1768ஆம் ஆண்டு இக்கோயிலுக்கு அளிக்கப்பெற்ற கொடை பற்றி மோடி ஆவணம் ஒன்று கூறுகிறது.

இக்கோயிலில் தஞ்சை மராட்டிய மன்னர் இரண்டாம் சரபோசி செய்த திருப்பணிகளை இம் மராத்திமொழிக் கல்வெட்டு விளக்குகிறது.[1]

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

**தெற்கு நிலை :**

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகம் 1727 சென்ற கலியுகாதி 4906 இதற்கு மேல் நடப்பு குரோதன வருசம் ஆவணி மாதம் வளர்பிறை சஷ்டி வெள்ளிக்கிழமை பகல் 13 நாழிகைக்கு மேல் 17 நாழிகைக்குள் இந்தச் சுபதினத்தில் ராசஸ்ரீ சரபோசி மகாராசாவினால் கட்டப்பட்ட ஸ்ரீராமசாமி கோயிலுக்குத் திருப்பணி வேலைகள் நடந்ததற்கு விபரம் :*

1. *A.R.E.* No. 351 of 1925-26.

நர்த்தன மண்டபத்தில் நடந்த வேலைகளுக்கு விபரம் : கருடனுக்குப் புதிய கோயில் கட்டிக் காரையிடப்பெற்றது. மேற்குப் பக்கம் மூன்று முற்றங்களுக்குப் புதிய சுவர்கள் கட்டி, வெள்ளைக் கல்லினால் சதுர மேடை கட்டப்பெற்றது.

சபாமண்டபத்தில் நடந்த வேலைகளுக்கு விபரம் : கருடகம்பம் வைத்துப் புதிய கொறடு கட்டிப் பலிபீடத்துக்கும் கொறடு கட்டிக் காரை பூசப்பட்டது.

தெற்குப் பக்கத்தில் மூன்று முற்றங்கள் கட்டி, வானதி கட்டி, மேலே செங்கல் போட்டுக் காரை பூசப்பட்டது. பிராகாரத்திலுள்ள தண்ணீர் வெளியேறச் சலதாரைகள் கட்டிக் காரை போடப்பட்டது.

தென்கிழக்கில் கிழக்குக் கோபுரத்தின் வெளிப்பக்கம் சுவர்கள் எழுப்பி, மூன்று முற்றங்கள் மண்டபம் கட்டி, மேலே செங்கல் போட்டுக் காரை பூசப்பட்டுப் பூமிக்கும் செங்கல் தளவரிசை போடப்பட்டது.

**வடக்கு நிலை :**

வடக்குப் பக்கத்தில் வசந்த மண்டபம் காமாட்சியம்மன் கோயிலுக்கு மடப்பள்ளிக்காக முன்பு கொடுக்கப்பட்டிருந்தது. தற்போது காமாட்சி அம்மன் கோயிலுக்கு மடப்பள்ளி மண்டபம் புதியதாகக் கட்டிக் கொடுத்து இந்தக் கோயிலின் மண்டபம் பதினைந்து அங்கணம் இந்தக் கோயிலுடன் சேர்த்துக் கொண்டு மண்டபத்தின் மேல் செங்கல் போட்டுக் காரை பூசப்பெற்றது. கீழ்த் தூண்கள் பழுது பார்த்துத் தரைக்குச் செங்கல் தளவரிசை போடப்பட்டது. பிராகாரத்தில் தெற்கு, மேற்கு, வடக்கு மூன்று பக்கங்களில் உள்ள சுவர்களும் பழுது பார்க்கப்பட்டுக் காரை பூசப்பெற்றுக் கீழே தளவரிசையும் போடப்பெற்றது.

மேற்குப் பிராகாரத்தில் கிணற்றுக்குச் சுவர் எழுப்பப்பெற்றுத் தளவாடங்கள் செய்து சுண்ணாம்பு பூசப்பெற்றது.

அர்த்தமண்டபம், மகாமண்டபத்தின் மேல் செங்கல் போட்டுப் பழுது பார்க்கப்பட்டது ; காரை பூசப்பட்டது.

இரதோத்சவம் இல்லாமலிருந்ததால் இரதம் பழுது பார்க்கப்பட்டு உற்சவமும் நடத்திப் புதியதாகத் தேர்முட்டியும் கட்டுவித்துத் தேர்முட்டிக்குப் படிக்கட்டுக்களும் கட்டப்பட்டன. இம்மாதிரியாகத் திருப்பணி வேலைகள் பல நடந்தன.

# 38, 39. தஞ்சாவூர் பங்காரு காமாட்சியம்மன் கோயில் கல்வெட்டுக்கள்

தஞ்சாவூர் நகரில் மேற்கு வீதியில் உள்ள பங்காரு காமாட்சியம்மன் கோயில் நுழைவாயிலின் இரு பக்கங்களிலும் இக்கல்வெட்டுக்கள் உள்ளன.

மன்னர் பிரதாபசிங் (1739-1763) ஆட்சிக் காலத்தில் இப்பங்காரு காமாட்சியம்மன் பாதுகாப்பின் பொருட்டுக் காஞ்சிபுரத்திலிருந்து இங்குக் கொண்டுவந்து வைக்கப்பட்டது. மன்னர் துளசா காலத்தில் இக்கோயில் விரிவு படுத்திக் கட்டப் பட்டது.

பச்சையப்ப முதலியாரால் இக்கோயிலுக்கு 1842 ஆம் ஆண்டு மாலைப் பூசையின் பொருட்டுக் கொடையளிக்கப்பட்டுள்ளது. 1895ஆம் ஆண்டு தஞ்சையிலிருந்த புகைப்படக்காரர் ஒருவரின் மனைவியான மீனாட்சி அம்மாள் அவர்களால் மகா மண்டப வடக்கு வாயில் கட்டப்பட்டுள்ளது. அவருடைய சிற்பத்திற்குமேல் புகைப்படக் கருவியும் சிற்பமாகத் தீட்டப்பட்டுள்ளது.

இரண்டாம் சரபோசி மன்னர் 1805ஆம் ஆண்டு இக்கோயிலுக்குப் பல திருப் பணிகள் செய்துள்ளார். 1874 ஆம் ஆண்டு சிவாசி மன்னரின் மனைவியார் காமாட் யம்பா பாயி சாகிப் அவர்களால் சில கொடைகள் இக்கோயிலுக்கு அளிக்கப் பட்டுள்ளன.

இவ்விரண்டு கல்வெட்டுக்களும் மராத்தி மொழியில் உள்ளன. அவற்றின் மொழிபெயர்ப்புக்கள் இங்கே அளிக்கப்பட்டுள்ளன.[1]

---

1. *A.R.E.* NO. 349, 350 of 1925-26.

## 38 இரண்டாம் சரபோசி கல்வெட்டு :

**தெற்கு நிலை :**

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகம் 1727 ஆயிரத்து எழுநூற்று இருபத்தேழு சென்ற கலியுகம் 4906 நாலாயிரத்துத் தொளாயிரத்து ஆறு குரோதன ஆண்டு ஆனித் திங்கள் தேய்பிறை நவமி திங்கட்கிழமை பகல் 5 நாழிகைக்குமேல் 7 நாழிகைக்குள் இந்த நன்னாளில் சரபோசி மகாராசாவால் ஸ்ரீகாமாட்சி அம்மாளுக்குச் செய்யப்பட்ட திருப் பணி வேலைகளுக்கு விபரம் :*

*எதிரில் உள்ள கோபுரம் கட்டுவித்து வண்ணம் பூசப்பட்டது. முற்றத்திலுள்ள மடப்பள்ளி புதுப்பிக்கப்பட்டு ஆறு முற்றங்கள் கட்டிக் காரையும் பூசப்பட்டது. கீழே செங்கற்கள் போடப்பட்டிருக்கின்றன. இரண்டு முற்றங்கள் செங்கற்களால் போடப் பட்டன ; காரையும் பூசப்பட்டுச் செங்கற்களால் தளவரிசையும் போடப்பட்டன.*

**வடக்கு நிலை :**

*இரண்டு உக்கிராணங்கள் கட்டி, முற்றமும் கட்டித் தளவரிசை போடப்பட்டது. தளவரிசைகளுக்குச் செங்கற்கள் போடப்பட்டன. மொத்தம் 10 முற்றம் கட்டிப் புதுச் செங்கற்கள் நிரப்பி அதிலிருந்து நிருத்தமண்டபம் கட்டுவிக்கப்பட்டது. பிராகாரத் தினுடைய நான்கு சுவர்களுக்குத் தெற்குப் பக்கத்திலும், வடக்குப் பக்கத்திலும்,இரண்டு சுவரிலும், முற்றங்களிலும் கீழ்த்தளவரிசை போடப்பட்டது. கருவறை, கோபுரம் இவைகளுக்குத் தளவரிசைக் கற்கள் பாவப்பட்டன.*

*காமகோடி தேவியினுடைய கருவறை பழுதுபார்த்துப் புது வண்ணமும் பூசப் பட்டது. நர்த்தன மண்டபம் செப்பனிடப்பட்டுக் காரை பூசப்பட்டது. இம்மாதிரியாகத் திருப்பணி வேலைகள் செய்து முடிக்கப்பட்டன.*

## 39. காமாட்சியம்பா பாயி கல்வெட்டு :

*ஸ்ரீ*

*கல்வெட்டு அறிக்கை*

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகம் 1796 பவ ஆண்டு வளர்பிறை பிரதிமை புரட்டாசி மாதம் தேதி 1 ஸ்ரீசரபேந்திர பூபதியவர்களின் மகள் வயிற்றுப் பேர்த்தி ஸ்ரீசிவேந்திர ராசா அவர்களுடைய மூத்த மனைவி ஸ்ரீ காமாட்சியம்பா பாயி இவர் களுடைய குலம் விளங்கவேண்டியும், நிலையான புகழ் அடைய வேண்டியும், தஞ்ச*

புரி ஸ்ரீகாமாட்சியம்மன் தேவிக்குப் புதியதாகத் தொடங்கப்பட்ட காலைக் கட்டளை விபரம் : நாள்தோறும் அதிகாலையில் தயிர்சாதம் படைத்து அந்த அன்னத்தைப் பிரசாதமாக 8 அந்தணர்களுக்கு வழங்கவேண்டும். அதற்காக ஒதுக்கப்பட்ட முதல் ரூபாய் 5000. மேலும் இத்தொகையிலிருந்து வரும் வரும்படியைக் கொண்டு நாள் தோறும் விடியற்காலையில் குங்குமத்தினால் அஷ்டோத்திர அர்ச்சனை செய்யவேண் டும். பாக்கித் தொகையைக் கொண்டு வருடந்தோறும் சாரதா நவராத்திரிக்குள் வெள்ளிக்கிழமை மண்டபப்படி அபிடேகம் பூசை நைவேத்தியம் முதலியவைகளை அரசு அலுவலர்களின் மூலமாக நடத்திவர வேண்டியது. இன்று எழுதப்பட்ட பத்திரப் படி முதல் கொடுக்கப்பட்டது ரூபாய் 500. மொத்தம் இவ்வறங்கள் மூன்றிற்கும் மொத்தம் முதலாகக் கொடுக்கப்பட்ட தொகை 5500 ஐயாயிரத்து ஐநூறு ரூபாய். இது கோவிலின் தானிகர் குப்புசாமி சாத்திரி அவர்களிடம் கொடுத்து அந்தத் தொகையைக் கொண்டும் நில வருமானத்தைக் கொண்டும், அதனுடைய வட்டியைக் கொண்டும் பரம்பரையாக இந்த அறங்களை நிரந்தரமாகச் சந்திர சூரியர் உள்ளவரை முறைப்படி நடத்திவர வேண்டியது, ஆகையால் இதை எல்லாப் பொது மக்களும் பார்த்துக் கொடையை நிரந்தரமாக நடத்திவர வேண்டும். இதன்படிக்கு மாதுஸ்ரீ அவர்களுடைய மனத்திலிருந்து கொடுத்த கட்டளைப்படி காரியஸ்தர் நாகராசர் அவர்கள் இந்தக் கல்வெட்டு அறிக்கையைக் கல்வெட்டாக வெட்டி வைத்திருக் கிறார்கள்.

'அறம் செய்தல், பிறர் செய்த அறத்தைப் பேணுதல் ஆகிய இவ்விரண்டில் பிறர் செய்த அறத்தைப் பேணுவதே சிறந்தது. அறம் செய்தால் தேவருலகு மட்டுமே கிடைக் கிறது. ஆனால் அறத்தைப் பாதுகாப்பதால், காப்பவன் விட்டுணுவின் பதத்தையே அடைகின்றான்.'[2]

2. இப்பகுதி வடமொழிச் சுலோக வடிவில் உள்ளது.

# 40. தஞ்சாவூர் கிருட்டிணன் கோயில் கல்வெட்டு

தஞ்சை நகரில் கோட்டைக்குள் மேல வீதியில் கிருட்டிணன் கோயில் உள்ளது. இக்கோயில் தஞ்சை நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பர்.

1805ஆம் ஆண்டு இரண்டாம் சரபோசி மன்னர் இக்கோயிலுக்குச் செய்த பல்வேறு திருப்பணிகளை இக்கல்வெட்டு விளக்குகிறது. தஞ்சை மராட்டியர் மரபினர் சைவ சமயம் சார்ந்தவர்களாக இருப்பினும் அரசரும், அரச குடும்பத்தினரும், அரசியரும், அலுவலர்களும் சமய வேறுபாடின்றி வைணவக் கோயில்கள் பலவற்றுக்கும் கொடைகள் அளித்தனர்; திருப்பணிகள் செய்தனர் என்பதைக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கூறுகின்றன.

கோயிலின் நுழைவாயில் நிலையின் இருபுறங்களிலும் மராத்தி மொழியில் இக்கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

**தெற்கு நிலை :**

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகாப்தம் 1727 சென்ற கலியுகம் 4906 அதற்கு மேல் நடப்பு குரோதன ஆண்டு ஐப்பசி வளர்பிறை தசமி வியாழக்கிழமையன்று பகல் 7 நாழிகைக்குமேல் 12 நாழிகைக்குள் இந்த நன்னாளில் ராசஸ்ரீ சரபோசி மகாராசா அவர்களால் செய்யப்பட்ட கிருட்டிணசாமி கோயிலில் நடந்த திருப்பணி வேலைகளினுடைய விபரம் :*

*அர்த்த மண்டபத்தின்மேல் செங்கல் போட்டுக் காரை பூசப்பட்டது. மகா மண்டபம் முற்றம் வானதி கட்டி அதன்மேல் செங்கல் போட்டுக் காரை பூசப்பட்டது. கீழ்த்தரைக்குச் செங்கல்லால் தள வரிசை போட்டுப் புதுத் தூண்களுக்கும், சுவர்களுக்கும், உள்ளும் வெளிப்புறமும் வண்ணம் பூசப்பட்டது.*

எதிரில் இருக்கும் கோபுரம் புதியதாக அத்திவாரம் போட்டுக் கட்டிக் காரை பூசப்பட்டது. மடப்பள்ளி அங்கணம் மூன்று, உக்கிராணம் அங்கணம் இரண்டு ஆக அங்கணம் ஐந்து அத்திவாரத்

**வடக்கு நிலை :**

திலிருந்து சுவர் கட்டப்பட்டு மேலே மண்டபமும் செங்கல்லால் கட்டிக் காரை பூசிக் கீழே தரையில் செங்கல் தளவரிசை அமைத்துச் சுவருக்கும் காரை பூசப்பட்டது.

பிராகாரத்தினுடைய கிழக்கு, மேற்கு, வடக்கு ஆகிய சுவர்களும் அத்திவாரத்துடன் புதுச் செங்கற்களால் கட்டிக் காரை பூசப்பட்டது. நான்கு பிராகாரங்களிலும் செங்கல் தளவரிசை போடப்பட்டது. இந்த முறையில் திருப்பணி வேலைகள் நடைபெற்றன.

# 41-48. தஞ்சாவூர் கைலாச மகால் கல்வெட்டுக்கள்

தஞ்சாவூரின் வடக்கில் வடவாற்றின் தென்கரையில் 'வம்புலாஞ்சோலை' எனப்படும் தொன்மையான இடத்தின் அருகில் மராட்டிய அரச குடும்பத்துச் சமாதிகள் உள்ளன. அச்சமாதிகள் உள்ள இடத்துக்குக் 'கைலாச மகால்' என்பது பெயர். இதற்கு 'இராசாகோரி' என்றும் பெயர் வழங்கப்படுகிறது. அங்குள்ள சமாதிக் கோயில்கள் சிலவற்றில் உள்ள கல்வெட்டுக்கள் இங்குத் தரப்படுகின்றன. சமாதி யாருக்குரியது ; அச்சமாதிக்குரியவர் எப்பொழுது இறந்தார் என்ற குறிப்புக்கள் அக்கல்வெட்டுக்களில் உள்ளன. சிலவற்றில் சமாதிக்கோயில் கட்டி முடிக்கப் பெற்ற காலமும் பொறிக்கப்பட்டுள்ளன.

மராட்டிய அரச மரபினர் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் இறந்தபின்னர்க் கைலாச மலைக்குச் சென்று சிவபதம் அடைகிறார்கள் என்பது நம்பிக்கை. அதனால் தஞ்சை மராட்டிய அரசரோ அல்லது அரசியோ மரணம் அடைந்தால் அவர்கள் 'கைலாச வாசியானார்' என்று கூறப்பெறுவது வழக்கம்.

> '1737இல் தஞ்சாவூர்க் கோட்டை அன்ன சத்திரத்தில்
> மகாராசா கைலாச வாசம் செய்தார்'

என்று இரண்டாம் ஏகோசி இறந்த செய்தி குறிக்கப்பெறுகிறது. இறந்த அரசர்களைக் 'கைலாசவாசி' என்ற அடைமொழியுடன் குறிப்பது வழக்கம். அரசியாரையும் இவ்வாறே குறிக்கும் வழக்கமும் உள்ளது.

பழங்காலத்தில் கணவன் இறந்தபின் மனைவி உடன்கட்டை ஏறி உயிர்விடும் வழக்கம் இருந்தது. இதனைச் 'சதி' அல்லது 'சககமனம்' என்பர். தஞ்சை மராட்டிய மன்னர் மரபிலும் இவ்வழக்கம் இருந்தது. முதல் சரபோசியின் மூன்று மனைவியரில் சுலக்சணா பாயி சாகேப், ராஜச பாயி சாகேப் இருவரும், பிரதாபசிங்கின் 5 மனைவியரில் மூன்றாம் மனைவியான யமுனா பாயி சாகேப்பும், ஐந்தாம் மனைவியான சக்வார் பாயி சாகேப்பும் ஆகிய இருவரும், துளசாவின் மனைவியான ராசகுமராம்பா பாயி சாகேப்பும், அமரசிங்கின் இரு மனைவியரும் உடன்கட்டை ஏறி உயிர் விட்டதாகக் குறிப்புக்கள் உள்ளன.

அரசர்களுக்குச் சிவலிங்க வடிவும், அரசிகட்கு இரு கைகள் உடைய பெண் வடிவமும் சமாதிக் கோயிலினுள் அடையாளமாக வைக்கப்படும். சமாதிக் கோயில் களின் மேல் வைக்கும் கலசங்களிலிருந்து அரசர் தனியாக இறந்தாரா ? அல்லது அவருடன் எத்துணை மனைவியர் உடன்கட்டை ஏறினர் என்ற விபரம் தெரிந்து கொள்ளலாம். ஒரு கலசம் இருப்பின் அரசருக்கு மட்டுமே சமாதிக் கோயில் எடுக்கப்பட்டது என்பதை அறியலாம். இரண்டு கலசங்கள் இருந்தால் ஒரு மனைவி உடன்கட்டை ஏறியுள்ளரர் என்பதையும், மூன்று கலசங்கள் இருந்தால் இரு மனை வியர் உடன்கட்டை ஏறினர் என்பதையும் அறிந்து கொள்ளலாம்.

கடைசி மராட்டிய மன்னர் சிவாசியின் சமாதிக் கோயிலும், அவரது மனைவி யரின் சமாதிக் கோயில்களும் தனிச் சுற்றுச் சுவருக்குள் கைலாச மகாலில் அமைக்கப் பட்டுள்ளன.

இரண்டாம் சரபோசி, துளசா, பிரதாபசிங்கின் சமாதிகள் வெளியே கட்டப் பட்டுள்ளன. பழமையான சமாதிகள் பீசப்பூர் மொகலாயர் கலைப்பாணியிலும், பிற்காலத்தவை அனைத்தும் திராவிடக் கலைப் பாணியிலும் கட்டப்பட்டுள்ளன.

முதலில் பெண்களுக்குச் சமாதிக் கோயில்கள் கட்டாமல் பிருந்தாவனம் (துளசி மாடம்) அமைப்பில் மட்டும் கட்டிடம் கட்டப்பெற்றது. பின்னாளில் பெண்களுக்கும் அரசர்களைப் போலவே சமாதிக் கோயில்கள் கட்டப்பெற்றன.

இந்தச் சமாதிக் கோயில்கள் அரசர் அல்லது அரசி எந்த இடத்தில் எரியூட் டப்பெற்றனரோ அதே இடத்தில் கட்டப்பட்டன. இவைகள் கோயில்கள் அல்லது ஆலயங்கள் என்றே அழைக்கப்பட்டன. அதற்கேற்றவாறு சமாதிக் கோயில்கள் சிலவற்றில் 'ஆலயம் கட்டிக் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது' என்றே கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளதைக் காணுகின்றோம். இதனால் பிற கோயில்கள் போலவே சமாதிக் கோயில்களும் கட்டி முடிக்கப் பெற்றுக் குடமுழுக்கு விழாவும் செய்யப்பட் டுள்ளது என்பதை அறிகின்றோம்.

இந்தக் கைலாச மகால் தஞ்சை அரண்மனை அமரர் மூத்த இளவரசர் திரு. ராசாராம் ராசா சாகிப் அவர்கள் குடும்பப் பொறுப்பில் உள்ளது. இவைகளைப் பராமரிப்பதற்கென்றே மன்னார்குடி அருகே கோட்டூரில் கொடை நிலங்களும் அளிக்கப்பட்டுள்ளன. இவற்றிற்குப் பூசை செய்வதற்கென்றே தனி அந்தணர் குடும்பமும் உள்ளது. இந்தக் கைலாச மகால் மன்னர் குடும்பத்திற்கு மட்டுமே தனிப்பட்ட உரிமையுடையதாகும்.

## 41. அப்புரம்பா பாயி சாகேப் பள்ளிப்படைக் கல்வெட்டு :

1890ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 29ஆம் தேதி (விக்ருதி ஆண்டு மார்கழி மாதம் 16ஆம் தேதி) வளர்பிறை நான்காம் நாள் சிவாசி மகாராசாவின் மனைவி யாகிய அப்புரம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தி குறிக்கப்படுகிறது.

அரசர் பெயருக்கு முன் HIS HIGHNESS என்ற சொற்றொடரின் சுருக்கமாக H. H. என்றும், அரசியர் பெயருக்கு முன் HER HIGHNESS MATOSRI என்ற சொற்றொடரின் சுருக்கமாக H. H. M. என்றும் குறிக்கப்பட்டுள்ளன.

18 - 7 - 1852இல் சிவாசி மன்னர் ஒரே நாளில் மணம் செய்து கொண்ட 17 மனைவியருள் இவரும் ஒருவர். அப்புரம்பா பாயி இராமச்சந்திரராவ் கோவிந்தராவ் விசாரே என்பவரின் மகளாவார் இவரது குடும்பப் பெயர் திராயி என்பது.

## கல்வெட்டு

*1 விக்ருதி ஞு மார்கஷீர்ஷ மீ கிருஷ்ண பக்ஷம் சதுர்த்திக்கு சரியான 1890ஞு*

*2 டிசம்பர் மீ 29உ சோமவாரம் H. H. சிவாஜி மகாறாஜா சத்திரபதி அவர்களின்*

*3 பாரியை H. H. M. அப்புரம்பா பாயி சாகேப் அவர்கள் சிவலோக பதவி அடைந்தார்கள்*

## 42. காமாட்சியம்பா பாயி பள்ளிப்படைக் கல்வெட்டு :

1892ஆம் ஆண்டு சனவரி மாதம் 27ஆம் தேதி புதன்கிழமை சிவாசி மன்னரின் இரண்டாம் மனைவியார் காமாட்சியம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தி இக்கல்வெட்டில் வெட்டப்பட்டுள்ளது.

சிவாசியின் மூத்த மனைவி சைதாம்பா பாயி சாகேப் இறந்தபின் அரண்மனையில் மூத்த அரசியாக விளங்கி அரச காரியங்கள் பலவற்றைச் செய்தவர் காமாட்சியம்பா பாயி சாகேப். இவர் இரண்டாம் சரபோசியின் மகள் வயிற்றுப் பேத்தி. தன் அக்கா பாயம்மா பாயின் மகளான இவரை 1829ஆம் ஆண்டு சிவாசி மணம் செய்து கொண்டார்.

'சீனியர் ராணி', 'ஜேஷ்ட பத்னி', 'தஞ்சாவூர் அரண்மனை இலாகா தேவஸ்தானங்களின் ஆதீனஸ்தர்', 'விசாரணை கர்த்தர்' என்றெல்லாம் கல்வெட்டுக்கள் இவரைக் குறிக்கும். சிவாசி மன்னர் 25—10—1855இல் இறந்த பின்னரும் 37 ஆண்டுகள் வாழ்ந்து பல அறச் செயல்களைச் செய்தவர்கள்.

காமாட்சியம்பா பாயி சாகேப் பல கோயில்களில் திருப்பணிகளைச் செய்தமைக்குரிய கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. சைவ வைணவக் கோயில்கட்கு வேறுபாடு இன்றிக் கொடைகள் அளித்துள்ளார். அல்லாட' பண்டிகையின்போது இசுலாமியப் பக்கீர்கள் பலருக்கும் ஏனைய மராட்டிய அரசர்கள் போலவே காமாட்சியம்பா பாயும் பல பொருள்கள் கொடையளித்துள்ளார்.

தஞ்சை மராட்டிய மரபில் 5ஆம் மன்னர் பாவா சாகிப் (இரண்டாம் ஏகோசி) இறந்தபின் அவரது மூத்த மனைவி சுஜான்பாயி அரசப் பொறுப்புக்களை ஏற்றது போலத் தனக்கும் பொறுப்பளிக்க வேண்டும் என்று ஜான்புரூஸ் நார்ட்டன் என்னும் ஆங்கிலேயச் சட்ட நிபுணர் மூலம் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்தார். ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாரும், சிவாசியின் மற்ற மனைவிமார்களான பாயி சாகிப்மார்களும் பிரதிவாதிகளாகச் சேர்க்கப்பட்டனர்.

இரண்டாம் சரபோசி + அகல்யாபாயி (இரண்டாம் மனைவி)
(1798 - 1832)

பாயம்மா பாயி + யஸ்வந்தராவ் இராமச்சந்திர சூர்வே

காமாட்சியம்பா பாயி சாகேப் (ம) + சிவாசி (1832 -1855)
(1855 - 1892)

சக்வார் பாயி (ம) + இராமச்சந்திர ராவ் யஸ்வந்தராவ் மானே இங்ளே

பிரதாபருத்ர மானே இங்ளே

மூன்றாம் சரபோசி (1855-1903)

இரண்டாம் சிவாசி (1903-1927)

இராசாராம் ராசா சாகேப் (1927-1985)

கல்வெட்டு

1 கர ஹு தை மீ 15 உ புதவாரம் றாத்திரி கைலாஸவாஸி
2 யான மாதுஸ்ரீ. காமாக்ஷியம்பா பாயி சாஹேபவர்கள்
3 தகனமானவிடத்தில் இந்த ஆலயம் கட்டப்பட்டிருக்கிறது

## 43. யஸ்வத்தம்பா பாயி சாகேப் பள்ளிப்படைக் கல்வெட்டு :

1894ஆம் ஆண்டு சனவரி மாதம் 10ஆம் தேதி சிவாசி மன்னரின் மனைவியாகிய யஸ்வத்தம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தியைக் குறிக்கிறது.

இவரும் 18—7—1852இல் சிவாசி திருமணம் செய்து கொண்டவர்களில் ஒருவர். இவர் தந்தையார் ஜகதேராவ் பாப்புராவ் சூர்வே. யஸ்வத்தம்பாவின் குடும்பப் பெயர் ஹம்ராயி என்பதாகும்.

### கல்வெட்டு

1 *விஜய ஷு பௌஷ மாஸ*
2 *சுக்கில பட்ச திர்தியை*
3 *க்கு சரியான 1894 ஷு*
4 *ஜனவரி மீ 10 உ புத*
5 *வாரதினம்* H. H. *ஸி*
6 *வாஜி மாஹறாஜா*
7 *சத்திரபதி அவர்க*
8 *ளின் பாரியை* H. H.
9 M. *யெஸ்வத்தம்பா*
10 *பாயி ஸாஹேப் அவர்*
11 *கள் சிவலோக பதவி*
12 *அடைந்தார்கள்*

## 44. அனுசம்பா பாயி சாகேப் பள்ளிப்படைக் கல்வெட்டு :

1895ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30ஆம் தேதி மன்னர் சிவாசியின் மனைவி அனுசம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தி இக்கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

இவர் முன் கல்வெட்டில் குறிக்கப்பெற்ற யஸ்வத்தம்பா பாயி சாகேப்பின் சகோதரியாவார். இவரது குடும்பப் பெயர் கம்ராயி என்பது. இவருடைய தந்தை ஜகதேவராவ் பாப்புராவ் சூர்வே.

### கல்வெட்டு

1 *மன்மத ஷு அஸ்வனி மாஸ சுக்கில பட்ச துவாதசிக்கு சரியான*
2 *1895 ஷு செப்டெம்பர் மீ 30 உ சோமவாரம்* H. H. *சிவாஜி மகாறாஜா சத்தி*
3 *ரபதி அவர்களின் பாரியை* H. H. M. *அனுஸம்பா பாயி ஸாஹேப்*
4 *அவர்கள் சிவலோக பதவி அடைந்தார்கள்*

## 45. தீபாம்பா பாயி சாகேப் பள்ளிப்படைக் கல்வெட்டு :

1905ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 19ஆம் தேதி செவ்வாய்க்கிழமை சிவாசி மன்னரின் மனைவி தீபாம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தியை இக்கல்வெட்டு குறிக்கிறது.

இவருக்குச் சமாதிக் கோயில் கட்டி, குடமுழுக்கு 1905ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 3ஆம் தேதி நடத்தப்பெற்றது.

இவரும் இவர் தங்கை இராமகுமராம்பா பாயி சாகேப் அவர்களும் சிவாசியை 18—7—1852இல் ஒரே நாளில் திருமணம் செய்து கொண்டனர். இவர்களின் தந்தையார் யஸ்வந்தராவ் இரகுநாதராவ் ஜாதவ் அவர்கள். தீபாம்பாவின் குடும்பப் பெயர் பத்தராயி என்பது.

### கல்வெட்டு

*1 விசுவாவசு ஞு புரட்டாசி மீ கிருஷ்ண பக்ஷம் ஷஷ்ட்டி செவ்வாய்க்கிழமை*
*2 4 உ க்குச் சரியான 1905 ஞு செப்டம்பர் மீ 19 உ ஹிஸ் ஹைனெஸ் சிவாஜீ*
*3 மஹாராஜா அவர்கள் பத்தினியாகிய ஹர் ஹைனெஸ் மாதோஸ்ரீ*
*4 தீபம்பா பாயி சாஹேப் அவர்கள் தெய்வ கெதியடைந்ததால் ஷை ஞு கார்த்திகை மீ 18 உ ஞா*
*5 யிற்றுக் கிழமை சுக்கில பக்ஷம் சப்தமி தினம் ஆலயம் கட்டி கும்பாபிஷேகம் செய்யப்பட்டது*

## 46. கௌரம்பா பாயி சாகேப் பள்ளிப்படைக் கல்வெட்டு :

1906ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 11ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை மன்னர் சிவாசியின் மனைவி கௌரம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தி இக்கல் வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

இவர் பலவந்தராவ் பாபுராவ் சூர்வே அவர்களுடைய மகள் ஆவார். இவரது குடும்பப் பெயர் கௌராயி என்பது.

### கல்வெட்டு

*1 விசுவாவசு ஞு பால்குன மீ கிருஷ்ண பக்ஷம் பிரதிபதைக்கு சரியான 1906 ஞு மார்ச்சு மீ 11 உ றவி*
*2 வார தினம் ஹிஸ் ஹைனெஸ் சிவாஜீ மஹாராஜா சாயேப் அவர்கள் பத்னி ஹர்*
*3 ஹைனெஸ் மாதுஸ்ரீ கௌறம்பா பாயி சாயேப் அவர்கள் கைலாச வாசமடைந்*
*4 து தஹனமான இடத்தில் இந்த ஆலயம் கட்டப்பட்டது*

## 47. இராம குமராம்பா பாயி சாகேப் பள்ளிப்படைக் கல்வெட்டு :

1910ஆம் ஆண்டு சூலை மாதம் 9ஆம் தேதி சனிக்கிழமை சிவாசி மன்னரின் மனைவி இராமகுமராம்பா பாயி சாகேப் அவர்கள் இறந்த செய்தி இக்கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. இவர் தீபாம்பாவின் தங்கையாவார்.

இவரது சமாதிக் கோயில் கட்டி முடிக்கப்பட்டு 1910ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 22ஆம் தேதி குடமுழுக்குச் செய்யப்பட்டது. இவர் குடும்பப் பெயர் இந்தி ராயி என்பது.

## கல்வெட்டு

*1 சாதாரண ஸு ஆனி மீ 26 தீ சுக்கில பக்ஷம் திருதியை சனிக்கிழமைக்கி சரியான 1910 ஸு ம்*
*2 துலை மீ 9 தீ ஹிஸ் ஹைநெஸ் சிவாஜீ மகாறாஜா அவர்கள் பத்தினியாகிய ஹர் ஹைநெஸ் மாதோ*
*3 ஸ்ரீ இராம குமறாம்பா பாயி சாஹேப் அவர்கள் தெய்வகெதி அடைந்ததால் ஷெ ஸு ஆவணி மீ*
*4 7 தீ திங்கள்க் கிழமை கிருஷ்ண பக்ஷம் திவிதியை தினம் ஆலயங் கட்டி கும்பாபிஷேகம் செய்யப்பட்டுது*

## 48. யமுனாம்பா பாயி பள்ளிப்படைக் கல்வெட்டு :

இரண்டாம் சரபோசியின் வழிவந்த நாகராச மாடிக் அவர்களின் மனைவி யார் யமுனாம்பா பாயி அவர்கள் 3—3—1926இல் மரணம் அடைந்த பொழுது அவர்களுக்கு எழுப்பிய பள்ளிப்படையில் இக்கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது.

தஞ்சை அரச மரபினர் அனைவரும் சைவ சமயத்தைப் பின்பற்றுபவர்கள். இக்கல்வெட்டில் யமுனாம்பா பாயி அம்மையார் வைகுண்ட பதவி அடைந்தார் என வைணவ மரபு கூறியிருப்பது பிற பள்ளிப்படைக் கல்வெட்டுக்களில் இல்லாத புதிய ஒன்றாகும்.

கீழ்வரும் மரபுப் பட்டியல் யமுனாம்பா பாயி யார் என்பதை விளக்கும்.



## கல்வெட்டு

சாலி வாகன சகே. 1847 பால்
குண பஹுள ப்ஞ்சமி (3—3—1926)
ஸ்ரீ சௌ யெமுனாம்பா பாயி
அம்ணீ மாஹாடிக் அவ
ர்கள் வைகுண்ட பதவி
அடைந்தார்கள்

# 49 - 52. தஞ்சாவூர் வடவாற்றங்கரைக் கல்வெட்டுக்கள்

தஞ்சாவூரின் வடக்கே கரந்தை அருகே ஓடும் ஆறு வடவாறு. வடவாற்றின் தென்கரையில் மண்டபத்திலும், சமாதிகளிலும், தனியாகக் கிடக்கும் கற்களிலும் சில கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மராட்டியர் காலக் கல் வெட்டுக்கள் சில இப்பகுதியில் தரப்படுகின்றன.

## 49. அரங்கதாசன் கல்வெட்டு :

1804ஆம் ஆண்டு தஞ்சை மராட்டிய அரசில் சுபேதாராகப் பணிபுரிந்த அரங்கதாசன், கோவிந்த சாத்திரியாரின் குரு நித்தியானந்த சுவாமிக்குச் செய்த திருப்பணியை இக்கல்வெட்டு குறிக்கிறது.

இத்திருப்பணியைச் செய்த சுபேதார் அரங்கதாசன் பரங்கிப்பேட்டையின் தலைக் கிராமமான அரிகோஷ்ட்டி புதுப்பேட்டையில் இருந்த நல்லாறய்யங்காரின் சீடன் என்றும், பிறமாத்தா சின்னது பிள்ளை பேரன் என்றும், அரிய பிள்ளை என் பாரின் மகன் என்றும் இக்கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றார்.

அரங்கதாசன் செய்த திருப்பணிக்கு முத்துக்கறுப்பன் என்பவர் உதவி செய்த தாகவும் குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது.

### கல்வெட்டு

1 *றத்தாட்சி ஹூ மாசி மீ ௧ வ*
2 *கோவிந்த சாத்திரியார் கு*
3 *ரு நித்தியாநந்த சுவாமிய*
4 *ாறவற்களுக்கு பறங்கி பே*
5 *ட்டைக்கி தலக்கிராமமான*

6 அரி கோஷ்ட்டி புதுப்பே
7 ட்டையிலிருக்கும் நல்ல
8 ாறய்யங்காற் சீஷன்
9 பிறமாத்தா சின்னது பி
10 ள்ளை பவுத்திறன் அரிய
11 பிள்ளை புத்திறன்
12 ஸ்ரீரெங்க தாசன் சு
13 பையதாறவற்கள் செ
14 ய்த திருப்பணி யிது
15 க்கு முத்துகறுப்பனும்
16 ஸ்ரீராம செயம்

## 50. போச்சல் மண்டபக் கல்வெட்டு :

வடவாற்றங்கரையின் தென்கரையில் உள்ள பராசரக் குளத்தின் தெற்கே கிழக்கு நோக்கிக் கட்டப் பெற்றுள்ள மண்டபத்தின் ஒரு தூணின் மேல் பகுதியில் இக்கல்வெட்டுக் காணப்படுகிறது. செங்கல்லால் கட்டப்பெற்ற இம்மண்டபம் இப்போது மிகவும் சிதைந்த நிலையில் இடிந்து உள்ளது.

தாது ஆண்டு வைகாசி மாதம் படே உசேன் கோயிலுக்கு (தர்கா) எதிர் வீட்டில் குடியிருந்த இராமசாமி போச்சல் என்னும் மராட்டிய மரபினர் ஒருவரால் இம்மண்டபம் கட்டப் பெற்றது. சிவாசியின் மனைவி காமாட்சி அம்பாள் அவர்கள் உதவியால் இது செய்யப்பட்டது. படே உசேன் தர்கா தஞ்சாவூர் வடக்கு அலங்க வீதியில் உள்ளது.

இக்கல்வெட்டில் ஆறாவது வரியின் தொடக்கத்தில் கல்வெட்டில் வெட்டப் பெற்றிருந்த ஒரு சொல் முற்றிலும் அழிக்கப்பட்டுள்ளது. 'மராட்டியர்' என்ற சொல் அங்கு முன்பு வெட்டப்பெற்றிருக்க வேண்டும். மராட்டியர் மட்டுமே அங்கு இறுதிக்கடன் செய்யவேண்டும் என்ற விருப்பத்தை இராமசாமி போச்சல் தன் கல் வெட்டில் பொறித்திருக்க வேண்டும். பிற்காலத்தில் பிற இனத்தாரும் அங்கு இறுதிக்கடன் செய்ய வந்தவர்கள் தம் உரிமையையும் அங்கு நிலைநாட்டும் பொருட்டு 'மராட்டியர்' என்ற சொல்லை அழித்திருக்க வேண்டும்.

'போச்சல்' என்பது மராட்டியர் மரபில் ஒரு பிரிவின் பெயராகும்.

### கல்வெட்டு

1 தாது ஸூ வையாசி மீ ஸ்ரீ
2 காமாக்ஷி அம்பாள் கிருபை

*3 யால் படே உசின் கோயிலு*
*4 க்கெதிர்த்த வீட்டிலிருக்கும் ரா*
*5 மசாமி போச்சல் என்பவர்*
*6 [மராட்டியர்] கருமஞ் செய்ய*
*7 க் கட்டிய தர்ம மண்டபம்*

## 51. சிவராம் பள்ளிப்படைக் கல்வெட்டு :

**வடவாற்றங்கரையின் தென்பக்கம் தஞ்சை அரச குடும்பத்தின் சமாதி இராசா கோரி அருகே பல மராட்டியப் பொது மக்களின் சமாதிகளும் உள்ளன. சிதானந்தீசுவரர் கோயிலின் தெற்கே உள்ள பராசரக் குளத்தின் கீழ்க்கரையில் இருக்கும் சமாதியொன்றில் இம்மராத்தி மொழிக் கல்வெட்டு காணப்படுகிறது.**

**வடவாற்றுக்கு 'மணிமுத்தாநதி' என்ற பெயர் உண்டு என்று இக்கல்வெட்டு மூலம் அறிகின்றோம். கரந்தையில் கிடைத்த 17ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்றில் வடவாற்றுக்கு 'அரியாறு' என்ற பெயரும் கூறப்படுகிறது.**

**1867ஆம் ஆண்டு பிரபவ ஆடி மாதம் திருவோண நட்சத்திரத்தன்று புரந்தர அண்ணாகா என்பவர் சிவராம் என்பவருக்கு ஆசிரம வாழ்க்கை அளித்ததாகவும், அவர் அன்றே மரணம் அடைந்தார் என்ற விவரமும் இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. இறக்குந் தறுவாயில் உள்ளவர்களை வீட்டிலிருந்து வெளியேற்றித் தங்க வைப்பதே ஆசிரம வாழ்க்கை தருதல் ஆகும். இது ஆபத்கால சந்நியாசம் என்றும் கூறப்படும்.**

### கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*சாலிவாகன சகாப்தம் 1789 பிரபவ ஆண்டு ஆடித் திங்கள் கிருட்டிண பக்கம் சிராவண நட்சத்திரத்தன்று புரந்தர அண்ணாகா என்பவர் மணிமுத்தாற்றங்கரையில் பராசரத் திருத்தலத்தில் சிவராம் அவர்களுக்கு ஆசிரம வாழ்க்கை அருளினார். அதனை ஏற்ற அதே நாளில் பிரதோஷ சமயத்தில் அவர் சமாதி ஆனார்.*

## 52. பிண்ட பலிபீடக் கல்வெட்டு :

**தஞ்சாவூர் வடவாற்றங்கரையின் தெற்கே உள்ள பராசரக் குளத்தின் தெற்கு எல்லையில் நிற்கும் ஒரு சிறு கல் தூணில் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.**

**தஞ்சாவூர் மராட்டிய மரபில் தோன்றிய நாராயணசாமி சிர்க்கே ராவ் சாயப்பு என்பவர் தன் மகள் சாரதாம்பாள் பாயி இறந்து விடவே தன் மகளுக்குப் பிண்டம் பலியிடும் பீடத்தைச் செய்தார் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.**

**'சிர்க்கே' என்பது மராட்டியர் மரபில் ஒரு பிரிவின் பெயராகும்.**

# கல்வெட்டு

உ
13—7—20 ஸ்ரீ நா
ராயண சா
மி சிர்க்கே
ராவ் சாய
ப்பு குமார
த்தி சாரதம்
பாள் பாயி
பரகதி அ
டைந்ததற்
கு பிண்ட
பலி பீடம்
உபயம்

# 53. மோர்கர் பாவா பள்ளிப்படைக் கல்வெட்டு

மராட்டிய மாநிலத்தில் விநாயகர் வழிபாடு மிகுதி. தமிழ் நாட்டில் முருகப் பெருமானுக்கு 'ஆறுபடை வீடுகள்' இருப்பதைப்போல மராட்டிய மாநிலத்தில் விநாயகப் பெருமானுடைய 'அட்ட விநாயகர் கோயில்கள்' என்ற பெயரில் எட்டு விநாயகர் கோயில்கள் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன.

அவற்றுள் தனிச் சிறப்பிடம் பெறுவதும் முதன்மையானதும் பூனா மாவட்டத்தில் உள்ள 'மோர்காவ்' என்னும் ஊரிலுள்ள விநாயகர் கோயில் ஆகும். மோர்காவ் என்றால் 'மயில் கிராமம்' என்று பொருள். அத்தலத்து விநாயகர் மோரேசுவர்' என்று அழைக்கப்படுவார். பார்வதி, விநாயகரைக் குறித்துத் தவம் செய்து அருள் பெற்ற தலம் என்பர். 'கணேசாய கயா' என்றும் அவ்வூர் அழைக்கப்படும்.

சிறந்து விளங்கும் விநாயகத் தலமான அந்த மோர்காவ் என்ற ஊரில் மராட்டிய அந்தணர் குடும்பத்தில் தோன்றியவர் இராமச்சந்திரர். கல்வி, கேள்விகளில் சிறந்து விளங்கிச் சமயத்துறையில் முற்றும் துறைபோகிய துறவுக்கோல முனிவராகத் திகழ்ந்த அவர் மோர்காவிலிருந்து தஞ்சை வந்து தங்கினார். அவரை மராட்டிய மன்னர்களும், மக்களும் ஆதரித்துப் போற்றினர்.

இராமச்சந்திரர் தஞ்சாவூர்ப் பகுதியில் பஜனைகளையும், சங்கீத நிகழ்ச்சிகளையும், அரிகதா காலட்சேபங்களையும் சிறப்பாக நடத்தினார். மக்களால் பாராட்டப்பட்ட இவருடைய சமயத் தொண்டும், பெருமையும் கருதி இவர் 'ஸ்ரீ பரமஹம்ச பரிவி ராஜகாசார்ய' என்ற பட்டம் அளித்துப் பாராட்டப்பட்டார். இவர் பக்தராமதாசருடன் ஒப்பிட்டுப் புகழப்பட்டார். இவரை மக்கள் விநாயகரின் அவதாரமாகவே கருதினர். இவரைப் பற்றிப் பல புகழ்ச்சிப் பாடல்களும் உள்ளன.

தஞ்சை வடக்கு வீதியில் 'மோர்கர்பாவா மடம்' உள்ளது. 1881இல் இவர் காலமானார். தஞ்சைக் கோட்டை வடக்கு வாயிலிலிருந்து இராசாகோரி செல்லும் வழியில் சிரேயசு சத்திரம் அருகே எதிரில் இவருடைய பள்ளிப்படை உள்ளது. சமாதிக் கோயிலில் விநாயகர் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளார். அடக்கம் செய்த

இடத்தில் பிருந்தாவனம் கட்டப்பட்டுள்ளது. நாள்தோறும் இச்சமாதிக் கோயிலுக்குப் பூசை நடைபெறுகிறது. இச்சமாதிக் கோயிலின் நுழைவாயிலில் தமிழிலும், மராத்தியிலும் இக்கல்வெட்டுக்கள் உள்ளன.

1881ஆம் ஆண்டின் நேர் விக்கிரம ஆண்டு மாசி மாதம் வளர்பிறையில் அவர் இறந்தார் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

*ஸ்ரீபரம ஹம்ச பரிவி ராஜகாசாரிய*
*ராமசந்திர*
*மஹாராஜ மோர்காம் கார்*
*சமாதி*
*கலி 4982 விக்கிரம மாக சுத்தம்*

# 54. சிதானந்தீசுவரர் கோயில் கல்வெட்டு

தஞ்சாவூருக்கு வடக்கே வடவாற்றின் தென்கரையில் சுடுகாடும் இடுகாடும் சூழ்ந்த பகுதியில் உள்ள சிவன் கோயில் சிதானந்தீசுவரர் கோயில்.

பிணத்தை வைத்துச் சுடும் இடத்திற்குச் 'சிதை' என்று பெயர். சிவபெருமான் மயானத்தில் இருந்தும் மகிழ்பவர். அதனால் இந்தச் 'சிதை' (மராத்தி மொழியில் 'சிதா') என்ற சொல்லின் அடிப்படையில் இக்கோயில் சிவபெருமான் 'சிதானந்தீசுவரர்' என்று பெயர் பெற்றார் என்பர் ஒருசாரார்.

ஆனால் இந்தக் கோயில் அர்ச்சகர் (சத்) சித் ஆனந்தம் - என்ற சொற்கள் அடிப்படையில் 'சிதானந்தீசுவரர்' என்று பெயர் ஏற்பட்டது என்று கூறுகிறார். இதுவே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

வடவாற்றின் வெள்ளப் பெருக்கினால் இச்சிதானந்தீசுவரர் கோயில் மிகவும் சிதைந்துள்ளது. இக்கோயிலின் திருச்சுற்று மிகவும் சிறியது. மேற்குத் திருச்சுற்றில் அமைந்துள்ள முருகப்பெருமான் சன்னிதியின்கீழ் நிலையில் 'தஞ்ச நகரம் அருமைப் பெருமாள் உபயம்' என்ற கல்வெட்டொன்று பொறிக்கப்பட்டுள்ளது.

கீழே அளிக்கப்பெறும் இக்கல்வெட்டு மகாமண்டப நிலைவாயில் அருகே பக்கச்சுவரில் பதிக்கப்பட்டுள்ளது. 1905ஆம் ஆண்டு யோகாம்பாள் கறாடே என்னும் அம்மையார் இக்கோயிலில் சிவன்ராத்திரி அன்று நான்கு கால பூசைகள் நடத்த இராசேந்திர வட்டம் ஆக்காடு என்னும் கிராமத்தில் 39 செண்டு நன்செய் நிலம் 100 ரூபாய்க்கு வாங்கி இக்கோயில் அறங்காவலர் பெயரால் அளித்துள்ள செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது. இவ்வறச் செயல் ஒழுங்காக நடைபெற வேண்டும் என்ற தன் விருப்பத்தையும் தெரிவித்துள்ளார்.

யோகாம்பாள் கறாடே மராட்டியப் பெண்மணி. சிவாசி மன்னரின் முதல் மனைவி சைதாம்பாள் பாயி சாகேப் அவர்களினால் சிறு வயதிலேயே அரண்மனைப் பணிக்கு அமர்த்தப்பட்டவர். சைதாம்பாள் பாயி சாகேப் இடமும், அவர் இறந்த பின் பிற அரசியரிடமும் பணிபுரிந்து சிவாசி மன்னரிடம் செய்தி கொண்டு செல்லும்

பெண்ணாகவும், அரசியரிடம் பணிபுரிந்த பெண்களாகிய 'அக்காமார்' கூட்டத்தில் ஒருவராகவும் நெடுங்காலம் பணிபுரிந்தவர்.

சிவாசி மன்னரின் இறுதி நாட்களில் அரசியர் உள்ள மாளிகைப் பகுதியின் சாவிகளை வைத்துள்ள பொறுப்பாளராகவும், சக்காராம் சாகிப் அவர்கள் தலைமையில் அண்ணாசாமி சர்கேல், சுவாமி ராவ் அப்பா, பெரிய அண்ணா, தேவாசி ராவ், வெங்கட் ராவ் ஆகியோர் அடங்கிய ' தர்பார் ' எனப்படும் குழுவின் செய்தியை அரசியர் இடத்தும், அரசியர் கூறும் செய்தியைத் தர்பாரிலும் அறிவிக்கும் 'தர்பார் அக்கா' என்ற பணியிலும் இருந்தார்.

1916 வரை இவர் வாழ்ந்ததற்கான குறிப்பு உள்ளது. அப்போது இவருக்கு வயது 86. கறாடே என்பது 96 வகையான மராட்டியப் பிரிவில் ஒன்றாகும். இவருக்கு மூன்று ஆண்மக்கள் இருந்தனர். ஆத்ம ராவ், காசி ராவ் என்ற ஆண் மக்கள் இருவர் பெயர் ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளன. யோகாம்பாள் அவர்களின் தந்தை பெயர் சுப்ப ராவ்.

## கல்வெட்டு

1 உ
2 1905 ஜூலை மீ 7 உ சௌ
3 யோகாம்பா பாயி கறா
4 டே அவர்களால் ஸ்ரீசிதா
5 நந்தேஸ்வர சுவாமிக்கி
6 சிவறாத்திரி நாலு கால பூ
7 ஜை நடத்த றாஜேந்திர வ
8 ட்டம் ஆக்காடு கிறாமத்தில்
9 திறப்பு நஞ்சை சற்வே
10 355 நீடி. பொன்னயுட
11 யான் கட்டளை செண்டு
12 5 எல் மேல்புரம் 39 செ
13 ண்டு நிலத்தை ரூ. 100க்கு
14 டி சுவாமியின் டிறஸ்
15 ட்டி தர்மலிங்கம் பிள்ளை
16 பேறால் சாசனம் வா
17 ங்கி விட்டிருப்பதில்
18 ஒளுங்காயி நடத்த தவ
19 றினால் அவற்கள் வாரி
20 சுகளும் விசாரிக்கலாம்

# 55 - 57. சுவார்ட்சு பாதிரியார் கல்வெட்டுக்கள்

பிரசியா நாட்டில் சோனேபர்க் எனப்படும் ஊரில் 1726 ஆம் ஆண்டு பிறந்தவர் கிறிஸ்டியன் ஃபிரடரிக் சுவார்ட்சு. 1749 இல் டேனிசு மிசனரிக் குழுவில் சேர்ந்து, கிழக்கிந்தியக் கம்பெனியின் கப்பலில் பயணம் செய்து 17—7—1750 இல் கடலூரில் வந்து இறங்கினார். பின்னர் 16 ஆண்டுகள் தரங்கம்பாடியில் வாழ்ந்தார்.

தமிழகம் வந்தவுடன் தமிழ் கற்று நான்கு மாதத்தில் தமிழில் உரையாற்றினார். தரங்கம்பாடியில் புதிய செருசலேம் தேவாலயத்தைக் கட்டினார். இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டப் பகுதிகளிலும் பணிபுரிந்தார்.

காவிரிக்குத் தெற்கேயுள்ள பள்ளிகள், தேவாலயங்கள் ஆகியவைகளை மேற்பார்வையிடும் பணியை ஏற்றார். பல இடங்களில் புதுப்பள்ளிகளை ஏற்படுத்தினார். 1754 இல் கடலூருக்கும், 1758 இல் நாகப்பட்டினத்துக்கும் சென்றார். 1760 இல் இலங்கை சென்றார். 1762 இல் கால்நடையாகவே திருச்சி, தஞ்சைப் பகுதிகளைச் சுற்றிப் பார்த்தார். தமிழ், போர்ச்சுகீசு, பாரசீகம், இந்துஸ்தானி, மராத்தி ஆகிய மொழிகளைக் கற்று வல்லவரானார். 1766 முதல் 1776 வரை திருச்சியைத் தலைமையிடமாகக் கொண்டு வாழ்ந்தார். பின்னர்த் தஞ்சையைத் தலைமையிடமாகக் கொண்டு இறுதிவரை தங்கினார்.

அப்போது தஞ்சை மராட்டிய மன்னராக இருந்த துளசாவிடம் (1763-1787) நட்புக் கொண்டார். 1784 இல் தஞ்சையில் ஆங்கிலப் பள்ளியை நிறுவினார். அதுவே இன்று தூய பேதுரு மேல்நிலைப்பள்ளி என்ற பெயருடன் விளங்குகிறது.

சுவார்ட்சு கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். கம்பெனியார் சார்பாக ஐதர், திப்புசுல்தான் ஆகியோரிடம் தூது சென்றார் 1787 இல் துளசா இரண்டாம் சரபோசியைத் தத்தாக எடுத்தார். துளசாவின் தம்பி அமர்சிங் அரசரானதால் இரண்டாம் சரபோசி சுவார்ட்சு பாதுகாப்பில் வளர்ந்தார்.

தஞ்சையில் வாழ்ந்த 22 ஆண்டுக்காலத்தில் மராட்டிய மன்னருடன் நெருங்கிய தொடர்பு கொண்டு மராட்டிய மன்னர் வரலாற்றில் சுவார்ட்சு மிக முக்கியமான இடத்தைப் பெற்றார்.

கிழக்கிந்தியக் கம்பெனியாருடன் வாதாடிப் பல முயற்சிகள் செய்து இறுதியில் 1798 இல் அமர்சிங்கிற்கு ஓய்வளிக்கச் செய்து சரபோசியை அரசராக்கியது சுவார்ட்சு பாதிரியாரே ஆவார். சரபோசிக்கு இளமையிலிருந்து ஆங்கிலக் கல்வியையும், பல கலைகளையும் கற்றுத்தரத் தக்க ஏற்பாடுகள் செய்தார். ஆனால் சரபோசி அரசு கட்டில் ஏறுவதற்குச் சிறிது காலம் முன்பாக 13—2—1798 இல் சுவார்ட்சு இறந்தார்.

சிவகங்கைக் குளம் அருகேயுள்ள தேவாலயத்தை 1778 இல் கட்டியவர் சுவார்ட்சு. இதனை அவ்வாலய முகப்பில் உள்ள அழகிய சலவைக்கல் கல்வெட்டால் அறியலாம்.

## 55. சுவார்ட்சு கல்லறைக் கல்வெட்டு :

தஞ்சை மகர்நோன்புச் சாவடியில் துளசா மகாராசா மூலம் இடம் பெற்றுக் கிறித்தவர்களைச்சுவார்ட்சு பாதிரியாரே குடியேற்றினார். அங்கு அவர் கட்டிய சிலுவை வடிவிலான மிகப் பழைய தேவாலயம் இன்றும் உள்ளது. அங்குள்ள தூய பேதுரு ஆலயத்தின் உள்ளே சுவார்ட்சு பாதிரியாரின் உடல் அடக்கம் செய்யப் பெற்ற இடத்தில் இக்கல்வெட்டு உள்ளது.

இக்கல்வெட்டில், சுவார்ட்சு பற்றிய நினைவுக் குறிப்பின் கீழ் சுவார்ட்சு பற்றிச் சரபோசி மன்னர் எழுதிய ஆங்கில இரங்கற்பாவும் பொறிக்கப்பட்டுள்ளது. அதன் இறுதியில் சரபோசி மன்னர் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. பெரிய எழுத்துக்களில் மலர் வேலைப்பாடமைந்த கட்டத்தினுள் இவ்வெழுத்துக்கள் பொறிக்கப் பெற்றுள்ளன.

### கல்வெட்டு

SACRED TO THE MEMORY OF
THE REV^D. CHRISTIAN FRED^K.
SWARTZ MISSIONARY TO
THE HON^BLE SOCIETY FOR
PROMOTING CHRIST^N. KNOW-
LEDGE IN LONDON WHO
DEPARTED THIS LIFE ON
THE 13^TH OF FEBRUARY, 1798,
AGED 71 YEARS AND 4 MONTHS.

FIRM WAS,[1] THOU, HUMBLE AND WISE,
HONEST, PURE, FREE FROM DISGUISE,
FATHER OF ORPHANS, THE WIDOW'S
SUPPORT,
COMFORT IN SORROW OF EVERY SORT.
TO THE BENIGHTED DISPENSER OF LIGHT,
DOING, AND POINTING TO, THAT WHICH
IS RIGHT.
BLESSING TO PRINCES, TO PEOPLE, TO ME;
MAY I, MY FATHER, BE WORTHY OF THEE!
WISHES[2] AND PRAYETH THY

SARABOJEE.

## 56. சுவார்ட்சு நினைவுக் கல்வெட்டு:

சிவகங்கைக் குளம் அருகே உள்ள தேவாலயத்தின் உள்ளே மேற்குச் சுவரில் கிழக்கு நோக்கிப் பதிக்கப்பட்டுள்ளது இக்கல்வெட்டு. அழகிய வெண்பளிங்குக்கல் சிற்பத்தின் கீழ் இக்கல்வெட்டு உள்ளது.

உடல்நலமின்றிப் படுத்த படுக்கையாக உள்ள சுவார்ட்சு பாதிரியாரைச் சரபோசி வந்து காணும் காட்சியும், சுவார்ட்சு பாதிரியாரின் படுக்கை அருகே கேரிக் பாதிரியார்[3] நிற்கும் காட்சியும் செதுக்கப்பட்டுள்ளது. சரபோசியுடன் வந்த அலுவலர்களும், கேரிக் பாதிரியாரின் பள்ளி மாணவர்கள் சிலரும் அச்சத்துடன் நிற்கும் காட்சியும் உடன் செதுக்கப்பட்டுள்ளது. நேரில் நிற்கும் மனிதர்களை நாம் காண்பதுபோலச் செதுக்கப்பட்டுள்ள இச்சிற்பம் 19ஆம் நூற்றாண்டுத் தொடக்க காலத்தின் சிற்பங்களில் மிகச் சிறந்த ஒன்று என்று கூறலாம்.

1801 இல் சரபோசி மன்னர் கேட்டுக்கொண்டபடி இங்கிலாந்தில் இலண்டன் மாநகரில் வாழ்ந்த சான் ஃபிளாக்சுமென்[4] என்னும் தலைசிறந்த சிற்பியால் இச்சிற்பம் உருவாக்கப்பட்டது. ஃபிளாக்சுமென் வாழ்க்கைக் குறிப்பில் இச்சிற்பம் 1807 ஆம் ஆண்டில் செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது.

இச்சிற்பம் இந்தத் தேவாலயத்தில் 1811 ஆம் ஆண்டு வைக்கப்பட்டது என்பது தஞ்சை வேதநாயக சாத்திரியார் குறிப்பொன்றில்

1. பியர்சன் பதிப்பில் WAST எனப் பதிப்பிக்கப் பட்டுள்ளது.
2. பியர்சன் பதிப்பில் WISHETH எனப் பதிப்பிக்கப் பட்டுள்ளது
3. REV. GERICKE
4. JOHN FLAXMAN

"என் குமாரத்தி ஞானதீபம் பிறந்த பிரசோற்பத்தி வருஷமாகிய 1811 சீர்மையிலிருந்து வந்த சங். தகப்பனார் சுவார்ச்சையருடைய சுரூபமும், சரபோசி மகாராசாவினுடைய சுரூபமுந் தீற்றப்பட்ட வெள்ளைக் கற்சிலை சின்னக் கோட்டையிலிருக்கும் பெரிய தேவாலயத்தில் ஸ்தாபிக்கப்பட்டது" என எழுதியிருப்பதால் நாம் அறியலாம்.

## கல்வெட்டு

TO THE MEMORY OF THE
REVEREND CHRISTIAN FREDERIC SWARTZ,
BORN AT SONNENBURG OF NEUMARK, IN THE KINGDOM OF PRUSSIA,
THE 26TH OF OCTOBER 1726,
AND DIED AT TANJORE THE 13TH OF FEBRUARY 1798,
IN THE 72D YEAR OF HIS AGE.
DEVOTED FROM HIS EARLY MANHOOD TO THE OFFICE OF
MISSIONARY IN THE EAST,
THE SIMILARITY OF HIS SITUATION TO THAT OF
THE FIRST PREACHERS OF THE GOSPEL,
PRODUCED IN HIM A PECULIAR RESEMBLANCE TO
THE SIMPLE SANCTITY OF THE
APOSTOLIC CHARACTER.
HIS NATURAL VIVACITY WON THE AFFECTION,
AS HIS UNSPOTTED PROBITY AND PURITY OF LIFE
ALIKE COMMANDED THE
REVERENCE OF THE
CHRISTIAN, MAHOMEDEN, AND HINDU,
FOR SOVEREIGN PRINCES, HINDU, AND MAHOMEDEN,
SELECTED THIS HUMBLE PASTOR
AS THE MEDIUM OF POLITICAL NEGOCIATION WITH
THE BRITISH GOVERNMENT,
AND THE VERY MARBLE THAT,[5] HERE RECORDS HIS VIRTUES
WAS RAISED BY
THE LIBERAL AFFECTION AND ESTEEM OF THE
RAJA OF TANJORE
MAHA RAJA SIRFOJEE.

5. பியர்சன் பதிப்பில் THAT என்பதற்குப் பதிலாக WHICH என உள்ளது.

## 57. சென்னை புனிதமேரி தேவாலயக் கல்வெட்டு :

கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்கள் சுவார்ட்சு பாதிரியாருக்குத் தங்கள் புகழஞ்சலியைத் தெரிவிக்கும்பொருட்டு 1807 ஆம் ஆண்டு சென்னைக் கோட்டைக்குள் அமைந்துள்ள தூய மேரி தேவாலயத்தில் ஒரு நினைவுக் கல் வெட்டைப் பதித்தனர். அதில் கீழ்வருமாறு ஆங்கில உரைநடையில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் சுவார்ட்சு பாதிரியாரின் வாழ்வுப் பணிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

### கல்வெட்டு

SACRED IN THE MEMORY OF
THE REV. CHRISTIAN FREDERIC SWARTZ,
WHOSE LIFE WAS ONE CONTINUED EFFORT TO IMITATE THE EXAMPLE OF
HIS BLESSED MASTER.
EMPLOYED AS A PROTESTANT MISSIONARY FROM THE
GOVERNMENT OF DENMARK,
AND IN THE SAME CHARACTER BY THE SOCIETY IN ENGLAND FOR
THE PROMOTION OF CHRISTIAN KNOWLEDGE,
HE DURING A PERIOD OF FIFTY YEARS, 'WENT ABOUT DOING GOOD'
MANIFESTING IN RESPECT TO HIMSELF, THE MOST ENTIRE
ABSTRACTION FROM TEMPORAL VIEWS,
BUT EMBRACING EVERY OPPORTUNITY OF PROMOTING BOTH THE
TEMPORAL AND ETERNAL WELFARE OF OTHERS.
IN HIS RELIGION APPEARED NOT WITH A GLOOMY
ASPECT, OR FORBIDDING MIEN,
BUT WITH A GRACEFUL FORM AND PLACID DIGNITY.
AMONG THE MANY FRUITS OF HIS INDEFATIGABLE LABOURS WAS THE
ERECTION OF THE CHURCH AT TANJORE.
THE SAVINGS FROM A SMALL SALARY WERE, FOR MANY
YEARS, DEVOTED TO THE PIOUS WORK,
AND THE REMAINDER OF THE EXPENSE SUPPLIED BY INDIVIDUALS
AT HIS SOLICITATION.
THE CHRISTIAN SEMINARIES AT RAMNADPORAM AND IN THE
TINNEVELLY PROVINCE WERE ESTABLISHED BY HIM.
BELOVED AND HONOURED BY EUROPEANS.
HE WAS IF POSSEBLE, HELD IN STILL DEEPER REVERENCE BY THE

NATIVES OF THIS COUNTRY, OF EVERY DEGREE AND EVERY SECT; AND
THEIR UNBOUNDED CONFIDENCE IN HIS INTEGRITY AND TRUTH,
WAS, MANY OCCASIONS,
RENDERED HIGHLY BENEFICIAL IN THE PUBLIC SERVICE.
THE POOR AND INJURED
LOOKED UP TO HIM AS AN UNFAILING FRIEND AND ADVOCATE;
THE GREAT AND POWERFUL
CONCURRED IN YIELDING HIM THE HIGHEST HOMAGE EVER PAID IN THIS
QUARTER OF THE GLOBE TO
EUROPEAN VIRTUE.
THE LATE HYDER ALLY CAWN,
IN THE MIDST OF A BLOODY AND VINDICTIVE WAR WITH THE CARNATIC,
SENT ORDERS TO HIS OFFICERS
"TO PERMIT THE VENERABLE FATHER SWARTZ
TO PASS UNMOLESTED, AND SHOW HIM RESPECT AND KINDNESS,
FOR HE IS A HOLY MAN, AND MEANS NO
HARM TO MY GOVERNMENT"
THE LATE TULJAJEE RAJA OF TANJORE,
WHEN ON HIS DEATH-BED DESIRED TO ENTRUST TO HIS PROTECTING CARE
HIS ADOPTED SON, SERFOJEE, THE PRESENT RAJA WITH THE
ADMINISTRATION OF ALL THE AFFAIRS OF HIS COUNTRY.
ON A SPOT OF GROUND, GRANTED TO HIM BY THE SAME PRINCE,
TWO MILES EAST OF TANJORE,
HE BUILT A HOUSE FOR HIS RESIDENCE, AND MADE IT
AN ORPHAN ASYLUM.
HERE THE LAST TWENTY YEARS OF HIS LIFE WERE
SPENT IN THE EDUCATION
AND RELIGIOUS INSTRUCTION OF CHILDREN,
PARTICULARLY THOSE OF INDIGENT PARENTS, WHOM HE
GRATUITOUSLY
MAINTAINED AND INSTRUCTED;
AND HERE 13TH OF FEBRUARY, 1798,
SURROUNDED BY HIS INFANT FLOCK, AND IN THE PRESENCE OF
SEVERAL OF HIS DISCONSOLATE BRETHREN,

ENTREATING THEM TO CONTINUE TO MAKE RELIGION
THE FIRST OBJECT OF THEIR CARE,
AND IMPLORING WITH HIS LAST BREATH THE DIVINE
BLESSING OF THEIR
LABOURS,
HE CLOSED HIS TRULY CHRISTIAN CAREER IN THE
72 ND YEAR OF HIS AGE
THE EAST INDIA COMPANY
ANXIOUS TO PERPETUATE THE MEMORY OF SUCH TRANSCENDENT WORTH
AND GRATEFULLY SENSIBLE OF THE PUBLIC BENEFITS WHICH
RESULTED FROM HIS INFLUENCE
CAUSED THIS MONUMENT TO BE ERECTED
ANN, DOM, 1807.

The monument was erected by
J. Bacon, Junior Sculptor, London, 1806.

# 58. பாக்கியநாத பிள்ளை கல்லறைக் கல்வெட்டு

எம். எஸ். பாக்கியநாத பிள்ளை (1777—1847) தஞ்சையில் சரபோசி காலத்திலும், சிவாசி காலத்திலும் நீதிபதியாக இருந்தார். 4-11-1847இல் இறந்தார். மகர்நோன்புச் சாவடியில் உள்ள தூய பேதுரு தேவாலயக் கல்லறைத் தோட்டத்தில் உள்ள குடும்பக் குழுக் கல்லறையில் இவரைப்பற்றிய செய்தி விருத்தப் பாடல் வடிவில் எழுதப்பெற்றுள்ளது.

இவர் தந்தை பெயர் மலைப்பெருமாள் பிள்ளை. திருச்சி மாவட்டம் விரையாச்சிலை என்ற ஊரிலிருந்து தஞ்சையில் குடியேறிய வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்தவர். ஆறு வயதில் திருமுழுக்குப் பெற்றுச் சுவார்ட்சு பாதிரியாரின் சீடராக விளங்கினார். தஞ்சை வேதநாயக சாத்திரியாரின் நெருங்கிய நண்பராக விளங்கி அவரது இசைப் பாடல்களின் இரசிகர் ஆனார். இவரது மனைவியின் பெயர் அன்னம்மாள்.

சரபோசி மன்னருக்கு நெருங்கிய நண்பராகவும் விளங்கினார். சரபோசி மன்னருக்கு ஆலோசனை கூறும் அமைச்சர் போல இருந்தார் என்பது இவர் இறந்த போது வேதநாயக சாத்திரியார் பாடிய பாடலால் தெரிகிறது. இவர் நீதிபதியாக இருந்த காரணத்தால் 'ஞாயத்துரை' 'நீதித்துரை' என்று அழைக்கப்பட்டார். இவர் ஏழைகளின்மீது மிகுந்த அன்பாக இருந்தாராம். தஞ்சையில் வாழ்ந்த காரணத்தால் 'தஞ்சைப் பாக்கியநாதர்' என்றே இவரைக் குறிப்பிடுவர். இவர் இறந்தபோது வேதநாயக சாத்திரியார் பாடிய ஒரு கழிநெடிலடிப் பாடல் சாத்திரி யாரின் குறிப்பேட்டிலுள்ளது முதல்முறையாக இங்குக் காட்டப்படுகிறது.[1]

---

1. ஸ்ரீ

முன்சீபு பாக்கியநாத பிள்ளையவர்கள் மரணத்தின் பேரிலே கழிநெடில்

(அ) யேசுநா யகனின் ஆயிரத் தெழுநூற்
றெழுபத்தே ழாண்டினில் பிறந்தே
இறுதியா யிரத்தெண் ணூற்றுநாற் பத்தேழ்
ஆண்டுகார்த் திகைசதுர்த் தேதி

# கல்வெட்டு

## விருத்தம்

*காராளன் மரபனாய் மலைப்பெரு மான்றனது*
*கருணைபெரு திருமகனுமாய்க்*
*கதிர்பரவு மாயிரத் தெழுநூற்றி யெழுபத்தே*
*ழாண்டினிற் றோன்றியுலகில்ச்*

---

ஆசற மரித்துத் தஞ்சையிற் கெஸ்தரும்
இயற்பவ ரையரும் அடக்க
அருமைமா தர்களும் மைந்தரும் சூழ்க
அன்னமாள் எனுங்குலஸ் திரியின்

நேசமாய்ப் புலம்பும் துயரமோ பெருக
நீடிய சபைகள்நின் றிரங்க
தேருடன் எழுப தாயுசு முடிந்து
நித்திய வளவினில் சென்றாய்

பாசமே மிகுந்த வேதநா யகன்தன்
பாடலுக் குரிமையின் தோழா
பரன்திரு உளத்துக் கென்செய்வோம் ஐயா
பாக்கிய நாதவிற் பனனே !

(ஆ) மலைப்பெரு மாளின் மைந்தனாய் சுவார்ச்சு
மாதவன் உரியசீ டனுமாய்
மன்னவன் சரபோ சேந்திரன் தனது
மந்திரி களிலொரு பிரபாய்

நிலத்தினில் ஞாயத் துரையுமாய்த் தரும
நீதிசாஸ்த் திரசிரோ மணியாய்
நித்திய சுவிசே டத்தின்விற் பனனாய்
நெடுகிலும் ஏழைகட் குறவாய்

கலைத்திற வேத நாயகன் பாடும்
கடவுளுக் கடியனாய் நடந்து
காலம்வந் தடுக்க மனத்தள ராமல்
களிப்புடன் கிறிஸ்துவில் மரித்து

வலப்புறத் தவரோ டிருப்பதற் காக
வானராச் சியம்தனை அடைந்தாய்
மானவா தஞ்சைப் பாக்கிய நாதா
வாழ்ந்திரு வாழ்ந்திரு ழியுமே !

- 1847

*சீராரு வயதினிற் றீட்சைபெற் றுச்சத்திய*
*தேசிகன் சுவார்ச்சுமுனியின்*
*சீடனாய் சரபேந் திரனன்ப னாய்நான்கு*
*சந்ததிகண்ட நீதிதுரையாய்*
*பாராதி யஞ்சல்புரி சர்வேச ரேசுவின்*
*பகஷ்சுவி சேடமலராய்ப்*
*பண்பொளிர யெழுபதாண் டிவ்வுலக வாசியாய்*
*பாரெளி யருக்குரவுமாய்*
*நேராய் விளங்கிநின் றத்தன்வல பாகமே*
*நீடூழி வாழிமனமும்*
*நித்தியமாய் வைத்தவிற் பனபாக்கிய நாதனே*
*நீடூழி வாழிவாழி !*

M. S. PAUKIANADA PILLAY
BORN ON THE 4th OCTr 1777. DIED ON THE 4th
NOVr 1847. BURIED NEXT DAY BY THE
REVD MESSRS J. GUEST & H. BOWER.

*" மனுஷன் தன்னுடைய நித்திய*
*வளவுக்குப் போகிறான் "*
*பிரசங்கி, 12 : 5.*

## 59. கோலாஃப் ஐயர் கல்லறைக் கல்வெட்டு

தஞ்சை நகரில் மகர்நோன்புச்சாவடியில் உள்ள தூய பேதுரு ஆலயத்தில் குருவாக விளங்கியவர் மறைத்திரு. சான் எலியாசு கோலாஃப் ஐயர். அவர் குருவாக விளங்கியபோது தஞ்சை மராட்டிய அரசராக விளங்கியவர் சிவாசி மன்னர் (1832-1855) ஆவார்.

கோலாஃப் ஐயர் 48 ஆண்டுகள் 10 மாதம் 26 நாட்கள் இவ்வுலகில் இறைவனுக்காக வாழ்ந்து இறைவனடியை அடைந்தார். அவர் இறந்தது 1849ஆம் ஆண்டு மே மாதம் 21ஆம் தேதி ஆகும்.

கோலாஃப் ஐயர் தஞ்சையில் இருந்தபோது சிவாசி மன்னரின் மிகச் சிறந்த நண்பராக விளங்கியிருக்க வேண்டும். கோலாஃப் ஐயர் இறந்தவுடன் அவருடன் தான் கொண்டிருந்த நட்பின் அடையாளமாகவும் அவருக்குச் செலுத்தும் மரியாதையின் பொருட்டும் நினைவுச் சின்னமாகவும் சிவாசி மன்னரே தம் பொருட் செலவில் கோலாஃப் ஐயர் சமாதியைக் கட்டிக் கீழ்வரும் ஆங்கிலக் கல்வெட்டுப் பொறித்த கல்லையும் இங்குப் பதித்தார்.

சிவாசி சைவ சமயத்தைச் சார்ந்தவராக இருப்பினும் கிறித்தவ சமய குருவுக்குக் கல்லறை கட்டிக் கொடுத்தது அவரது மதச் சகிப்புத்தன்மையை நமக்குக் காட்டுகிறது. தஞ்சை மராட்டியர் காலச் சமய வாழ்வின் பெருமையை எடுத்துக் காட்டும் சின்னமாக இக்கல்வெட்டு விளங்குகிறது. இக்கல்லறை மகர்நோன்புச் சாவடி தூய பேதுரு தேவாலயக் கல்லறைத் தோட்டத்தில் உள்ளது.

### கல்வெட்டு

SACRED

TO THE MEMORY OF

JOHN ELIAS KOHLHOFF ESQUIRE,

WHO DEPARTED THIS LIFE ON

MONDAY THE 21 ST MAY 1849.

AGED 48 YEARS 10 MONTHS AND 26 DAYS,

BELOVED AND REGRETTED BY ALL WHO KNEW HIM.

THIS STONE WAS ERECTED BY

HIS HIGHNESS SEVAJEE MAHA RAJAH, RAJAH OF TANJORE ;

IN TOKEN OF THE REGARD AND ESTEEM HE HAD FOR HIM.

" AS IN ADAM ALL DIE EVEN SO IN CHRIST SHALL ALL BE MADE ALIVE "

TRICHINOPOLY — J. F. MARTIN, SC.

---

இக்கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள கோலாஃப், சுவார்ட்சு காலத்தில் அவருடன் வாழ்ந்த சான் பால்தாசர் கோலாஃப் (1711 - 1790) அவர்களின் மகன் சான் சாசுபர் கோலாஃப் (1762 - 1844) அவர்களினும் வேறானவர்.

# 60. ஜே. எஃப். கீர்ன்சு கல்லறைக் கல்வெட்டு

இக்கல்வெட்டு தஞ்சை மகர்நோன்புச்சாவடி தூய பேதுரு தேவாலயக் கல்லறைத் தோட்டத்தில் உள்ளது.

மகர்நோன்புச்சாவடியில் உள்ள தூய பேதுரு தேவாலயத்தின் தலைமைக் குருவாகவும், தஞ்சையில் இருந்த ஆங்கிலப் பள்ளியின் ஆசிரியராகவும் விளங்கியவர் மறைத்திரு. ஜே. எஃப். கீர்ன்சு ஐயர் அவர்கள். எஸ். பி. ஜி. மிசனரியில் அவர் பணிபுரிந்தார்.

இவர் திருநெல்வேலியில் எட்டாண்டுகளும், தஞ்சையில் 20 ஆண்டுகளும் இறைபணி புரிந்தார்.

இவர் தன் 52ஆம் வயதில் 1877ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தின் இரண்டாவது ஞாயிற்றுக்கிழமையில் மறைந்தார்.

இவர் இறந்தபோது சிவாசி மன்னரின் மகளும் தஞ்சை இளவரசியுமான எஸ். சி. விசயமோகனமுக்தாம்பா பாயி அம்மணி ராசே சாகிப் அவர்கள் கீர்ன்சு ஐயருக்காகக் கல்லறை கட்டிக் கொடுத்தார். கீர்ன்சு, இளவரசிக்கு ஆங்கிலம் கற்றுக்கொடுத்த ஆசிரியராவார்.

இதனால் தஞ்சை மராட்டிய அரசர்கள் மட்டுமன்றி, அவர் குடும்பத்துப் பெண்களும் பிற சமயத்தின்மீதும், சமயத்தினர்மீதும் வெறுப்புக்கொள்ளாமல் சமயப் பொறையுடன் இருந்தனர் என்பது பெறப்படுகிறது.

## கல்வெட்டு

TO THE GLORY OF GOD

AND

IN MEMORY OF

THE REVEREND J. F. KEARNS, MISSIONARY

WHO LABORED IN THE S. P. G. MISSIONS
IN
TINNEVELLY AND TANJORE
FOR EIGHT AND TWENTY YEARS
HE DIED DECEMBER 9TH THE 2ND SUNDAY IN ADVENT 1877,
AGED 52 YEARS.
WHILE IN HIS MASTERS SERVICE FIGHTING ON
WITH FAILING STRENGTH - - - - WORN OUT
- - WITH YEARS OF TOIL
HIS SPIRIT PASSED AWAY.

'I heard a voice from heaven, saying into me, write. From hence forth Blessed are the dead which die in the Lord; even so saith the Spirit; for they rest from their labours.'

THIS TABLET AND THAT IN THE CEMETERY
WERE ERECTED BY HER HIGHNESS
S. C. VIJAYA MOHANA MUKTAMBA BAI AMMANI
RAJE SAHEB PRINCESS OF TANJORE.

# 61, 62. தாவீது மரபினர் கல்லறைக் கல்வெட்டுக்கள்

தஞ்சாவூரில் நாகப்பட்டினம் சாலையில் உள்ள லுத்தரன் மிசன் கல்லறைத் தோட்டத்தில் இந்த இரண்டு கல்வெட்டுக்களும் உள்ளன.

இரண்டாம் சரபோசி காலத்தில் தாவீது பிள்ளை என்பவர் உயர் அலுவலராக இருந்தார். Head Accountant - David Pillai என அவர் குறிக்கப் பெறுகின்றார்.

ஆங்கிலத்தில் பேசவும் எழுதவும் வல்லவரான தாவீது பிள்ளையைச் சரபோசி தன் காசி யாத்திரையின்போது உடன் அழைத்துச் சென்றார். கல்கத்தாவில் கவர்னர் செனரலைச் சரபோசி மன்னர் காணச் சென்றபோது தாவீது பிள்ளையும் உடன் சென்றார். காசிப் பயணத்தின்போது தஞ்சையிலுள்ள ரெசிடெண்ட்டுக்கு எழுதும் கடிதங்களை இவரே எழுதினார். அரண்மனைக்கு வேண்டும் பல பொருள்களைக் கல்கத்தாவில் வாங்கிக் கப்பலில் அனுப்பும் பொறுப்பையும் இவர் ஏற்றார்.

தஞ்சை அரண்மனையில் நடைபெறும் விசேடங்களில் ஆங்கிலேயர்களை வரவேற்று உபசரிக்கும் பொறுப்பு இவரிடம் ஒப்படைக்கப்பெற்றது. சரசுவதி மகாலில் ஆங்கிலப் புத்தகங்களை வாங்கும் பணியையும், ஆங்கிலப் புத்தகங்களைப் பழுதுபார்க்கும் பணியையும் இவரே செய்தார். இவர் திருநெல்வேலி மாவட்டத்தினர். இவரது மகன் டேவிட் சந்தியநாத பிள்ளை 1901ஆம் ஆண்டு தன் 84ஆம் வயதில் இறந்தார். இவரது பேத்தி ஞான வசந்த நீதிமணியம்மாள் 1937இல் காலமானார். இருவரது சமாதிகளிலும் தாவீது பிள்ளை பெயரும், அவர் தஞ்சை அரண்மனையில் மந்திரியாக இருந்த செய்தியும் குறிக்கப்படுகிறது.

## 61. சத்தியநாத பிள்ளை கல்லறைக் கல்வெட்டு :

### கல்வெட்டு

1 *தஞ்சாவூர் இராஜாவின் மந்திரி*
2 *தாவீது பிள்ளையவர்கள் குமாரரும்*
3 *சுவிசேட பஜனைப் பிரசங்கியுமான*
4 *கணம் டேவிட் சத்தியநாத பிள்ளை*
5 *வயது 84*
6 *கர்த்தருக்குள் நித்திரையடைந்தது*
7 *1901. ஞு ஜுன் மீ 21 தீ*
8 *குமாரத்தி சிரஞ்சீவி. சோமியம்மாளால்*
9 *வைக்கப்பட்டது.*

## 62. ஞானவசந்த நீதிமணி கல்லறைக் கல்வெட்டு :

### கல்வெட்டு

1 *தஞ்சாவூர் மந்திரி*
2 *மாஜி டேவிட் பிள்ளையின்*
3 *பௌத்திரியும் புதுக்கோட்டை*
4 G. *ஆசீர்வாதம் பிள்ளையின் மனைவியும்*
5 *எனது தாயாருமாகிய*
6 *ஞான வசந்த நீதிமணியம்மாள்*
7 *வயது 52*
8 *மரித்தது — 27—1—37*
9 *கிறிஸ்து எனக்கு ஜீவன், சாவு*
10 *எனக்கு ஆதாயம்*
11 A. DAVIS
12 KUMBAKONAM
13 N. D. & SONS.,

# 63. மகர்நோன்புச் சாவடிக் குளக் கல்வெட்டு

தஞ்சாவூர் மகர்நோன்புச் சாவடியில் உள்ள தூய பேதுரு தேவாலயத்தின் வடபுறம் கிழக்கு மேற்காக உள்ள சிறு செங்கல் சுவரில் பதிக்கப் பெற்றுள்ள கல்லில் இக்கல்வெட்டுக் காணப்படுகிறது. சிவாசி மன்னரின் உதவி பெற்றுத் தமிழறிஞர் ஜி. யு. போப் 1852இல் இவ்விடத்தில் குளம் ஒன்று வெட்டிய செய்தி இதில் காணப் பெறுகின்றது.

மறைத்திரு. ஜியார்ஜ் யுக்ளோ போப் 24—4—1820இல் பிறந்து தன் பத்தொன்பதாம் வயதில் தமிழ் நாடு வந்தார். 1851 முதல் 1858 வரை தஞ்சை மகர்நோன்புச் சாவடி தூய பேதுரு ஆலய குருவாகப் பணி புரிந்தார். தஞ்சையில் இருக்கும்போது வடக்கு வீதியில் உள்ள தூய பேதுரு மேல்நிலைப் பள்ளியை முதல் நிலைக் கல்லூரியாக உயர்த்தி அதன் முதல்வராகவும் சில ஆண்டுகள் போப் பணி யாற்றினார்.

தஞ்சை வேதநாயக சாத்திரியார் வீட்டுக் குறிப்புக்கள் இவரை 'சங். சீ. யு. போப்பையர்' என்று குறிக்கின்றன.

ஜி. யு. போப் காலத்தில், தஞ்சைக் கிறித்தவர்களிடையே சாதி வேறுபாடு மிகுந்து காணப்பட்டது கிறித்தவர்களாக மாறிய பின்னரும் 'காராள மரபு' 'கங்கை குலம்' 'வெள்ளாளன்' என எழுதித் தாங்கள் மேல் சாதிக் கிறித்தவர்கள் என்று சிலர் கூறிக் கொண்டனர்.

போப் சாதி வேறுபாட்டை எதிர்த்து எல்லோரையும் சமமாக நடத்தினார். இதனால் இங்கு 'சின்னக் கோட்டை[1] பெரிய தேவாலயத்தின் வழி வந்த பழைய கிறித்தவர்கட்கும்' 'போப்புடன் வந்த புது மிசியோனரிமாருக்கும்'[2] பகை வளர்ந்து திருவையாறு நீதிமன்றத்தில் சில வழக்குகளும் நடைபெற்றன. வேதநாயக சாத்

---

1. சின்னக்கோட்டை என்பது தஞ்சைப் பெருவுடையார் கோயிலைச் சுற்றியுள்ள கோட்டையாகும். தஞ்சை நகரம் அமைந்துள்ள கோட்டை பெரிய கோட்டை என்று அழைக்கப்பெறும்.
2. MISSIONARIES.

திரியார் 'போப்பையர் உபத்திரா உபத்திரவம்' என்று தனி நூலையே இயற்றினார். மன வெறுப்படைந்த ஜி. யு. போப் தம் குடும்பத்தாருடன் தஞ்சையை விட்டு வெளியேறி உதகமண்டலம் சென்றார்.

தஞ்சையில் போப் குருவாக இருந்தபோது சிவாசி மன்னருடன் நெருங்கிப் பழகினார். மகாவித்துவான் இராமாநுச கவிராயரிடமும், ஆரியங்காவுப் பிள்ளையிடமும் நன்கு தமிழ் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்த போப்பிற்குத் தஞ்சை சரசுவதி மகால் நன்கு உதவிற்று.

சிவாசி மன்னர் அளித்த பெரும் பொருள் உதவியால், 1852இல் மகர்நோன்புச் சாவடி தூய பேதுரு ஆலய வடபுறம் பெரிய குளம் ஒன்றைப் போப் வெட்டுவித்தார்.

சிதைந்த நிலையில் இருந்த அக்குளம் 1923இல் மறைத்திரு. சி. எச். லாம்ப் அவர்கள் தூய பேதுரு ஆலய குருவாக விளங்கிய காலத்தில் கல்லணைப் புதுக் கால்வாய் வெட்டிய மண்ணினால் மூடப்பட்டது. அக்குளத்தின் மீது இன்று மகர்நோன்புச் சாவடி பிளேக் மேல்நிலைப் பள்ளி விளையாட்டு மைதானம் உள்ளது. இன்று குளம் இல்லை; ஆனால் குளத்தின் தென்கரைச் சுவரில் இக்குளம் வெட்டப்பட்டதை அறிவிக்கும் இந்த ஆங்கிலமொழிக் கல்வெட்டு அழியாமல் உள்ளது.

போப் காலத்தில் ஜே. எஃப். பிசப் என்பவர் தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த செய்தியும், திருச்சிராப்பள்ளி ஜே. எஃப். மார்டின், எஸ்சி., என்பவர் இக்கல்லெழுத்துக்களைப் பொறித்தளித்த செய்தியும் இக்கல்வெட்டின் இறுதியில் உள்ளன.

## கல்வெட்டு

THIS TANK
WAS BUILT AT THE EXPENSE OF
HIS HIGHNESS
SEVAJEE
MAHA RAJA OF TANJORE.
A. D. 1852
J. F. BISHOP ESQ. COLLECTOR
REV$^{D}$. G. U. POPE MISSIONARY.

TRICHINOPOLY J. F. MARTIN, SC.

# 64 - 67. வெண்ணாற்றங்கரைக் கல்வெட்டுக்கள்

## தஞ்சபுரீசுவரர் கோயில் கல்வெட்டுக்கள்

தஞ்சாவூரின் வடக்கில் வெண்ணாற்றங்கரையில் உள்ள தொன்மையான கோயில் தஞ்சபுரீசுவரர்-ஆனந்தவல்லி அம்மன் கோயிலாகும். இவ்வூருக்குத் தஞ்சாவூர் என்று பெயர் பெற்றதை இக்கோயில் இறைவனோடு தொடர்பு படுத்துவர்.

இக்கோயிலில் இருந்த பழைய கல்வெட்டுக்கள் பின்னாளில் செய்யப் பெற்ற திருப்பணிகளின்போது சிதைவுற்றன. கோயில் திருச்சுற்றுச் சுவர்களில் ஆங்காங்கே சோழர், விசயநகர, நாயக்கர் காலக் கல்வெட்டுத் துண்டுகள் காணப்படுகின்றன.

தஞ்சை மராட்டிய மன்னர் சகசி (1684-1711) மீது பாடப்பெற்ற 'சாகேந்திர விலாசம்' என்னும் நூலில், அவர் தஞ்சபுரீசுவரர் ஆனந்தவல்லி அம்மனை வணங்கிய செய்தி கூறப்படுகிறது.

## 64. காமாட்சியம்பா பாயி கல்வெட்டு :

தஞ்சை மராட்டிய மன்னர் சிவாசியின் மனைவியருள் ஒருவராகிய காமாட்சியம்பா பாய் இக்கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளார்.

இக்கோயிலின் முன் மண்டபத்தில் உள்ள கொடிக்கம்பத்திற்கு அவர்கள் 1886ஆம் ஆண்டு மே மாதம் தாமிரத் தகடு போர்த்தியுள்ளார்.

பின்னரும் பல்வேறு திருப்பணிகளைச் செய்து 1889ஆம் ஆண்டு மே மாதம் இறுதியில் இக்கல்வெட்டைப் பொறித்துள்ளார்.

சுவாமி சன்னிதியில் மூன்றுநிலைக் கோபுரம் புதியதாகக் கட்டினார். வெள்ளைக் கல்லால் 18 அங்கணத்தில் 25 கஜ நீளமும் 11 கஜ அகலமும் உள்ள நர்த்தன மண்டபம் கட்டப்பட்டது. திருச்சுற்றில் செங்கல் தளவரிசை போட்டு அரைகுறையாக இருந்த திருச்சுற்று மதிள்கள் பூர்த்தி செய்யப்பட்டன. சுவாமி, அம்மன்

விமானங்கள் பழுது பார்க்கப்பட்டன. இப்பணிகள் அனைத்தும் செய்யப் பெற்றுக் குடமுழுக்கு விழாவும் செய்யப்பட்டது.

இக்கல்வெட்டில் தஞ்சபுரீசுவரர் கோயிலுக்குச் செய்த இத்திருப்பணிகளுடன் காமாட்சியம்பா பாயி வேறு இரு கோயில்களுக்குச் செய்த திருப்பணிகள் பற்றிய தகவலும் பொறிக்கப்பட்டுள்ளன. அவை :

1. தஞ்சாவூர்க் கோட்டைக்குள் உள்ள இராச கோபால சுவாமி கோயிலில் புதியதாக அர்த்த மண்டபம், மகா மண்டபம் கட்டி ஸ்ரீமத் பிரபாவ சிவேந்திர சுவாமி, சோடச புச சக்கரபாணி சுவாமி ஆகியவர்களை எழுந் தருளச்செய்து குடமுழுக்கு விழாவும் செய்யப்பட்டது.

2. தஞ்சாவூர்க் கோட்டை மேலவீதி மேல் சரகில் உள்ள காசி விசுவநாதர் கோயிலில் புதியதாக சபா மண்டபம் கட்டி விமானம், கோபுரம் இவை களைப் பழுது பார்த்து சுவாமியைப் பிரதிட்டை செய்து குடமுழுக்கு விழாவும் செய்யப்பட்டது.

இக்கல்வெட்டின் அருகிலேயே இதன் மராத்தி வடிவமும் ஒரு தூணில் பொறிக்கப்பட்டுள்ளது. மராத்தி மொழிக் கல்வெட்டில் தமிழ்க் கல்வெட்டை விடச் சில பகுதிகள் அதிகமாக உள்ளன. அவை புதிய தகவல்கள் அளிப்பதால் ஆங்காங்கே அடிக்குறிப்பில் இங்குக் காட்டப்பட்டுள்ளன.

## கல்வெட்டு

1 *தஞ்சாவூர் அரண்மனை இலா*
2 *கா தேவஸ்தானங்களின் ஆதீ*
3 *னஸ்தரும் விசாரணை கர்த்தரவ*
4 *ர்களும் ஹிஸ் ஹைனேஸ் ை*
5 *கலாஸவாஸி சீவாஜீ மகாறா*
6 *ஜா ஸாஹேபவர்களுடய ஜேஷ்*
7 *ட பத்னியவர்களுமான ஹர் ை*
8 *ஹனேஸ் மாதுஸ்ரீ காமாக்ஷிய*
9 *ம்பா பாய் ஸாஹேபவர்களுட*
10 *ய ஆஜ்ஞையின் பேரில் ஏஜண்டு*
11 *நாகறாஜ றாமாஜீ பண்டிதரவர்க*
12 *ளால் 1.தஞ்சாவூர் கோட்டைக்குள்*
13 *ஸ்ரீ இறாஜ கோபால ஸ்வாமீ கோ*
14 *விலில் நூதனமாக வெள்ளைக்க*
15 *ல்லால் அர்த்[த] மண்டபம் மகா ம*

16 ண்டபமும் கட்டி ஸ்ரீ ஸத் பிரபா
17 வ சிவேந்திர ஸ்வாமி ஸ்ரீ ஷோட
18 ச புஜ சக்கரபாணி ஸ்வாமியை
19 ய ஸ்தாபித்து[1] கும்பாபிஷேக
20 ம் செய்யப்பட்டது 2. [2]கோட்டை
21 டக்குள் மேலவீதி மேல் சரகில்
22 ஸ்ரீ காசி விசுவநாத ஸ்வாமி கோ
23 விலில் நூதனமாக ஸபா மண்டப
24 ம் கட்டி[3] கும்பாபிஷேகம் செய்
25 யப்பட்டது
26 3. [4]ஸ்ரீ ஆனந்த வ
27 ல்லியம்மன்
28 கோவிலில் ஸ்
29 வாமி ஸன்னி
30 தானத்தில் நூத
31 னமாக மூன்று
32 நிலத்தில் கோ
33 புரமும் வெள்
34 ளைக் கல்லால்
35 மட்டப்பாகு
36 முப்பத்தி 18 அ
37 ங்கணத்தில் அ
38 கலம் கிஜம் 11
39 நீளம் கிஜம் 25
40 விஸ்தீரணமு
41 ள்ள[5] நர்த்தன ம
42 ண்டபமும்[6] ப்
43 றாகாரத்தில் செ
44 ங்கல்லால் தள வ
45 ரிசையும் அமை

---

1. சாலிவாகன சகம் 1803 விஷு வருடம் கார்த்திகை கிருஷ்ண பட்ச பஞ்சமி வெள்ளிக்கிழமை
2. ஷை மேற்படி
3. விமானம் கோபுரம் இவைகளைப் பழுது பார்த்து சாலிவாகன சகம் 1804 சித்திரபானு வருடம் பங்குனி சுக்கில தசமி ஞாயிற்றுக்கிழமை பரிவாரம் ஷை சுவாமியைப் பிரதிட்டை செய்து
4. இந்த
5. புதியதாக
6. பிராகாரத்தில் சுவரை உயரமாகக் கட்டி

46 ர குரையா யிரு
47 ந்த ப்ராகாரத்தி
48 ன் மதளை பூர்த்தி
49 யாகவும் ஸ்வ
50 ரமி அம்மன் வி
51 மானங்களை ப
52 ளுது பார்த்து
53 ம் கலி 4983 சாலியவாகன சகாப்
54 தம் 1804 சித்திரபாநு ஹு மாசி மா
55 ஸம் 16ந் தேதிக்கு 1883 ஹு பிப்ப
56 ரவரி மாஸம் 26ந் தேதியில் ஆர
57 ம்பித்து 1889 ஹு மே மாஸம் 31
58 ம்ந் தேதியில் பூர்த்தி செய்து கும்
59 பாபிஷேகம் செய்யப்பட்டது

## 65. இரண்டாம் சரபோசி கல்வெட்டு :

இக்கோயிலில் அம்மன் சன்னிதிக்கு எதிரில் தெற்குப் பக்கம் நந்தி மண்டபம் ஒன்றுள்ளது. பழையதாகிய இம்மண்டபத்தைப் பழுதுபார்த்ததுடன் பல பகுதி களைப் புதியதாகவும் 1831ஆம் ஆண்டு இரண்டாம் சரபோசி (1798-1832) மன்னரால் கட்டப்பட்டது. இதைக் குறிக்கும் கீழ்வரும் மராத்தி மொழிக் கல்வெட்டு இம்மண்டபத்தில் செங்கல் சுவரில் கருங்கல்லில் பொறித்துப் பதிக்கப் பட்டுள்ளது.

### கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

ஸ்ரீ

*ஸ்ரீ தஞ்சபுரீசுவர சுவாமிக்கு ஸ்ரீ சாலிவாகன சகம் 1753 ஆயிரத்து எழுநூற்று ஐம்பத்து மூன்று கலியப்தம் 4932 நாலாயிரத்துத் தொளாயிரத்து முப்பத்து இரண்டு கர வருசம் நிஜ வைகாசி வளர்பிறை திரிதியை சனிக்கிழமை மிருகசீரிச நட்சத்திரம் வைகாசித் திங்கள் 2ஆம் தேதி இந்தச் சுபதினத்தில் ராசஸ்ரீ சரபோசி மகாராசா அவர்களால் செய்யப்பட்ட ஸ்ரீசிரபந்தி ஸ்ரீதேவி சன்னிதியில் நர்த்தன மண்டபம் தருமம்*

## 66. மேலசிங்கப் பெருமாள் கோயில் கல்வெட்டு :

வெண்ணாற்றங்கரை மேலசிங்கப் பெருமாள் கோயிலின் முன் மண்டப வலப்பக்க முகப்பில் இக்கல்வெட்டு மராத்தி மொழியில் உள்ளது. இரண்டாம்

சரபோசி மன்னர் 1831ஆம் ஆண்டு இக்கோயிலில் நர்த்தன மண்டபம் கட்டிய செய்தியை இக்கல்வெட்டு கூறுகிறது.

தஞ்சாவூரின் மேற்கே மேலவெளித் தோட்டம் என்ற பகுதியில் உள்ள சிங்கப்பெருமாள் குளத்தின் மேல்கரையில் இக்கோயில் முன்பு அமைந்திருந்தது.

தஞ்சாவூர் மராட்டிய மன்னர் துளசா (1763-1787) அவர்கள் காலத்தில் இக்கோயில் வெண்ணாற்றங்கரைக்கு மாற்றப்பட்டது.

பெருமாள் நரசிங்கப் பெருமாள்; தாயார் தஞ்சை நாயகி. இக்கோயிலில் தாயாருக்கும் ஆழ்வார்களுக்கும் தனி மண்டபங்கள் உள்ளன.

இக்கோயில் பூதத்தாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் மங்களா சாசனம் பெற்றது.[1]

இம் மேலசிங்கப் பெருமாள் கோயில் இருக்கும் பகுதிக்குத் '*தஞ்சையாளி நகர்*' என்ற பெயர் வழங்கப்பெறுகிறது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்ரீ*

*ஸ்ரீ மேல சிங்கப் பெருமாள் ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1753 ஆயிரத்து எழுநூற்று ஐம்பத்து மூன்று கலியுகாதி 4932 நடப்பு கர ஆண்டு நிஜ வைகாசி வளர்பிறை திரிதியை சனிக்கிழமை மிருகசீரிச நட்சத்திரம் வைகாசித் திங்கள் 2ஆம் தேதியாகிய இந்தச் சுபதினத்தில் ராசஸ்ரீ சரபோசி மகாராசாவால் தொடர்ந்து எப்பொழுதும் நடக்க வேண்டிய தர்மமாக சுவாமி சன்னிதியில் நர்த்தன மண்டபம் கட்டி வழங்கப்பட்டது.*

## 67. மாமணிக் கோயில் கல்வெட்டு :

வெண்ணாற்றங்கரை மாமணிக் கோயிலில் கட்டைக் கோபுரம் கடந்து கோயிலினுள் நுழையும் வாயிலின் இடப்புறச் சுவரில் இக்கல்வெட்டு உள்ளது.

தஞ்சாவூரின் வடமேற்கேயுள்ள களிமேடு என்ற கிராமத்தின் கீழ்ப்பகுதியில் இக்கோயில் முன்பு அமைந்திருந்தது என்பர். ஆனால் இக்கோயில் தஞ்சாவூர்

---

1. *இயற்பா, திருவந்தாதி* 2 : 70 (3353); *பெரிய திருமொழி* 7 : 3 : 9 (1576)

இராசாகோரி அருகே வம்புலாஞ்சோலை என்ற இடத்தில் இருந்தமைக்குச் சான்று உள்ளது. இக்கோயில் மணிகுன்றப் பெருமாள் கோயில் என்றும் அழைக்கப் பெறும்.

தஞ்சை மராட்டிய மன்னர் துளசா (1763-1787) அவர்கள் காலத்தில் வெண்ணாற்றங்கரைக்கு இக்கோயில் மாற்றப்பட்டது. இது ஆழ்வார்களால் மங்களா சாசனம் பெற்ற திருக்கோயில்.

1892ஆம் ஆண்டு சிவாசி மன்னரின் (1832-1855) மனைவி காமாட்சியம்பா பாயி அவர்கள் இம்மணிகுன்றப் பெருமாள் கோயிலுக்குப் புதியதாகக் கட்டைக் கோபுரத்தையும், அதற்குக் கதவுகளையும், மதிற்சுவர், திருச்சுற்றில் தளவரிசை, பலிபீடம், கருடன் கோயில் இவைகளை அமைத்தார் என்று இக்கல்வெட்டில் கூறப் பட்டுள்ளது. ஆழ்வார்களையும் எழுந்தருளச் செய்துள்ளார். இத்துடன் இக்கோயிலுக்கு வடக்கே திருவையாறு சாலையின் வடபுறம் கிழக்கு நோக்கி அமைந்துள்ள கல்யாண வெங்கடேசப் பெருமாள் கோயிலில் வடபுற மதிளையும், திருச்சுற்றுத் தளவரிசையையும் திருப்பணி செய்தார் என்ற விபரமும் கூறப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

1 தஞ்சாவூர் அ
2 றமணை தேவஸ்தா
3 னங்களின் ஆதீனஸ்தறான
4 மாதுஸ்ரீ காமாக்ஷியம்பா பாய்
5 ஸாகேப்பவர்களுடைய ஆஜ்ஞையி
6 ன் பேறில் ஏஜண்டு ஸ்ரீ நாகறாஜ றா
7 மாஜீ பண்டிதறவர்களால் இந்த
8 ஸ்ரீ மணிக்குன்ன பெருமாள் கோ
9 விலில் நூதனமாக கட்டை கோ
10 காபுறம் கதவுள்படவும் மத
11 ள்[1] செவர்[2] பிறாகாறம் தளவறி
12 சை பலிபீடம் கெருடன் கோவி
13 ல் இதுகளை ஸ்தாபித்து 1892ம் ௵
14 நவம்பர் ௴ 9 உ புதன் கிழமை
15 ம தனுர் லக்கணத்தில் ஷெ ஆழ்வா
16 ர்களுக்கு பிறிதிஷ்டையும் செய்ய

1. மதின்
2. சுவர்

17 பட்டூமிருப்பதுடன் ஸ்ரீ கல்
18 யாண வேங்கடேச பெருமா[ள்]
19 கோவில் வடபிறம்[3] மதள்
20 பிறாகாறம் தளவரிசையும்
21 புதிதாய் செய்யபட்டூமி
22 ருக்குறது

3. வடபுறம்

71-14

# 68-69. பாலங்களில் உள்ள கல்வெட்டுக்கள்

18ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் தஞ்சாவூர் மாவட்ட ஆறுகளுக்குப் பெரும்பாலும் பாலங்கள் இல்லை. திருமானூர், திருமழபாடி, திருவையாறு போன்ற பல இடங்களில் ஓடங்கள் மூலம் மக்கள் ஆறுகளைக் கடந்தனர்.

காவிரி போன்ற பெரிய ஆறுகளில் முக்கியமான இடங்களிலெல்லாம் படகுப் போக்குவரத்துக்கள் நடைபெற்றன. புதியதாகச் செய்யும் படகுகள் பூசை செய்து ஆற்றில் விடப்பெற்றன. 'கணேச புரவி' என்பது போலப் படகுகளுக்குப் பெயர்களும் வைக்கப்பட்டிருந்தன. அரசர்கள் பயணம் செய்யத் தனிப் படகுகள் இருந்தன.

1765இல் வடவாறு புதியதாக வெட்டப்பட்டுப் பாலங்களும் அமைக்கப்பட்டன. 1833இல் வடவாற்றின் பழைய பாலம் ஒன்று பழுது பார்க்கப்பட்டது என்று ஓர் ஆவணம் கூறுகிறது. 'பெருமாள் பத்து' போன்ற இடங்களில் மரப் பாலங்கள் இருந்தன. பாலங்கள் இல்லாத இடங்களில் ஆற்றில் யானைகளை நிறுத்திக் கடந்துள்ளனர்.

## 68. வெண்ணாற்றுப் பாலத்துக் கல்வெட்டு :

பள்ளி அக்கிரகாரம் அருகே வெண்ணாற்றின் குறுக்கே கட்டப்பட்ட பாலத்தின் வடகரையில் சிவாசி மன்னர் அளித்த பொருள் உதவியால் இப்பாலம் கட்டப்பட்டதைக் குறிக்கும் தமிழ், மராத்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் அமைந்த மும்மொழிக் கல்வெட்டு உள்ளது.

1836இல் இப்பாலம் கட்டி முடிக்கப்பட்டது. இப்பாலம் கட்டப்படும்போது ஒருமுறை 300 மூங்கில்கள் 100 பனைமரங்கள் கொண்டுவந்த செய்தியை ஆவணம் ஒன்று கூறுகிறது. வெண்ணாற்றுப் பாலம் கட்டும் பணியில் கம்பெனி ஆங்கிலேயப் பொறியாளர் ஒருவர் இறந்து விட்டதாக மகர்நோன்புச் சாவடியில் உள்ள தூய பேதுரு ஆலயக் கல்லறைத் தோட்டச் சமாதிக் கல்வெட்டொன்று கூறுகிறது.

லெப்டினன்ட் கர்னல் மக்ளீன் அவர்கள் தஞ்சாவூரில் ரெசிடென்ட் ஆக நிருவாகம் செலுத்தும் போது 'சிவாசி மகாராசா' அவர்களால் இப்பாலம் கட்டப்பெற்றதாக இக்கல்வெட்டு கூறுகிறது.

திருச்சினாப்பள்ளியைச் சேர்ந்த ஜே. எஃப். மார்டின், எஸ்சி என்பவர் இக்கல்வெட்டை வெட்டி அளித்தார் என்ற குறிப்பும் இறுதியில் உள்ளது.

## கல்வெட்டு

1 *வீர சிம்ம வரத்தினால் சோழதேசத்தின் சிம்மா*
2 *சனத்தில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிற க்ஷத்திரிய பூ*
3 *பாலராகிய இஸ் அயினெஸ் ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ சீவா*
4 *ஜீ மகா இராஜாச் சத்ரபதி சாய்பவர்களிந்தப்பா*
5 *லத்தை ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன 1758 துன்*
6 *முகி வருஷத்தில் லெப்டினான்று கர்னல் மக்கிளீன்*
7 *இரெசிடென்றா யிருக்கையில் கட்டிவைத்தார்கள்*

*Erected by His Highness*
STREE MUNT RAJA SREE SEEVAJEE MAHARAJAH CHATRAPADY SAHIB
RAJAH *of* TANJORE
A. D. 1836
*Lieut*. *Col*. MACLEAN *being* RESIDENT.

Trichinopoly J. F. Martin, Sc.

## 69. திருவையாறு காவிரிப் பாலத்துக் கல்வெட்டு :

திருவையாற்றிலுள்ள காவிரிப் பாலத்தின் நடுவில் கிழக்குச் சுவரில் இந்தக் கல்வெட்டு ஆங்கிலத்தில் வெட்டப்பட்டுள்ளது.

1846-47ஆம் ஆண்டு இப்பாலம் கட்டும் பணி முற்றுப்பெற்றதாக இதில் கூறப்படுகிறது. இப்பாலம் கட்டி முடிக்கப்பட்ட காலத்தில் எச். சி. மாண்ட் கோமரிபர்ட் அவர்களும், ஜே. எஃப். பிசப் அவர்களும் ரெசிடென்ட்டாக இருந்தனர் என்றும், கேப்டன் ஈ. லாஃபோர்டு கட்டுமானப் பொறியாளராக இருந்தார் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

சிவாசி மன்னர் தஞ்சை-திருவையாறு இடையில் பொதுமக்கள் நலத்திற்காக 4 பாலங்களைக் கட்டி முடித்தார் என்றும், மொத்தச் செலவு ரூபாய் 71000 என்றும் கூறப்பட்டுள்ளது. வெண்ணாறு, குடமுருட்டியாறு, வெட்டாறு, திருவையாறு (காவிரி) ஆகிய நான்கு இடங்களில் அப்பாலங்கள் அமைந்திருந்தன.

7-4-1847இல் எழுதப்பட்ட ஆவணம் ஒன்று திருவையாறு பாலம் கட்ட ரூபாய் 18850 'எஸ்டிமேட்' என்றும், ஆனால் இதுவரை ரூபாய் 19000 செலவிடப் பட்டதென்றும் கூறுகிறது. பின்னரும் இரண்டு மாதங்கள் வேலை நடைபெற்றுள்ளது. குடமுருட்டிப் பாலம் கட்ட 1844இல் 3000 சக்கரம் செலவிடப்பட்டதாக ஓர் ஆவணம் கூறுகிறது.

திருச்சினாப்பள்ளியைச் சேர்ந்த பி. கிரட்ச்பீல்டு, எஸ்சி., என்பவர் இந்தக் கல்லெழுத்துக் கல்லை வெட்டியளித்தார் என்ற செய்தியும் இறுதியில் பொறிக்கப் பட்டுள்ளது.

11-6-1847இல் பாலம் கட்டும் பணி முடிந்ததென்றும், சிவாசி மன்னர் இதனைத் திறந்து வைத்துப் பொதுமக்கள் பயன்படுத்துமாறு செய்ய அதிகாரிகள் விரும்பினர் என்றும் ஓர் ஆவணம் கூறுகிறது.[1]

முதலில் இந்தப் பாலம் இருபக்கக் கைப்பிடிச் சுவர் இல்லாமல் இருந்துள்ளது. பாலம் கட்டி முடிக்கப்பட்டு இரண்டாண்டுகள் கழித்து 1849இல் சிவாசி மன்னர் அளித்த 5705-7-0 ரூபாயைக் கொண்டு இப்பாலத்தின் கைப்பிடிச் சுவர்கள் கட்டப் பட்டன.[2]

---

1. 'திருவையாறில் காவேரி நதிக்குப் பாலங்கட்டுகிற வேலை முடிந்து மேல் மெல்லிய சுண்ணாம்பினால் மணியாசியும் ஆய்விட்டது. காவேரியில் ஜலம் வந்துவிட்டதனால் ஜனங்கள் படகு மூலம் போக்குவரத்து நடத்துகிறார்களாகையால் ஜனங்களுக்கு முன் போலவே சிரமமும் தாமசமும் ஏற்படுவதால் பாலத்தின் மேல் நடப்பதற்குள்ள தடையை நீக்குவதற்கு வைகாசி மாதம் 31 வ சனிக்கிழமை கன்யா லக்னத்தில் நல்ல முகூர்த்தமாயிருப்பதால் ரா. மகாராசா சாயேப் அவர்கள் அநேக திரவியஞ் செலவழித்துச் செய்த தருமம் பூர்த்தியடைந்ததினால் மனமூர்ந்து நம்முடன் ரா. மகாராசா சாயேப் அவர்களும் சவாரி விஜயம் செய்து உத்திரவு கொடுத்து நடத்தினால் அழகு ஒரு வேளை நிர்பந்தமிருக்கும். ஆனால் அதற்காக அப்படி வரமுடியாமலோ அல்லது தாங்களும், டிபுடி சர்கேல் முதலியவர்களுடன் வந்து நடத்தினால் உத்தமமாகயிருக்குமாகையால் அப்படி வருகிற சங்கதிகளுக்கோ எனக்கு முன்னால் தெரிவித்தால் வருகிற காரியத்தைச் சித்தம் செய்துகொள்வேனாகையால் அந்த விபரத்தைக் கண்டு முன்னால் எழுதி அனுப்புகிற தயவை செய்ய வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.'

   1847 ஜூன் 11 வ  முத்துசாமி தாசீல்

   *மோடித் தமிழாக்கம்*—சரசுவதி மகால், மூட்டை எண் 104 சி-எண் 89; தொகுதி I பக். 13-14.
   *மோடித் தமிழாக்கம்*—தமிழ்ப் பல்கலைக் கழகம், தொகுதி I பக். 22-23.

2. 'இம்மாதம் 5 வ யின் ஜூன் மாதத்தின் கடிதத்தைப் பார்க்க எனக்கு மிகவும் சந்தோஷமேற் பட்டது. இன்னும் திருவையாருக்குப் போகும் ரஸ்தாவில் மகாராசா சாகேப் அவர்கள் கட்டின பாலத்திற்கு தற்போது சுவர் போடும் சிலவை அவர்களே செய்வதாக ஒப்புக் கொண்டதில் அவர்கள் காட்டிய உதாரத் தன்மை விஷயத்தில் என்னுடைய அறுமோதனத்தை தயவுசெய்து தாங்கள மகாராசா சாஹேப் அவர்களுக்குத் தெரியப்படுத்த வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

## கல்வெட்டு

THIS BRIDGE
was erected at the expence of
HIS HIGHNESS MAHARAJAH SIVAJEE
RAJAH of TANJORE
A. D. 1846 - 47
SIR H. C. MONTGOMERY BART
and
J. F. BISHOP ESQ.
officiating Residents
CAPTAIN E. LAWFORD
civil Engineer.
His Highness has thus, by four Bridges, completed
the communication between
TANJORE and TRIVIAR
for the public good
at an expence of 71,000 Rupees.

B. Crutchfield, Sc. Trichinopoly.

---

மேற்கண்ட பாலத்தின் வேலையை அடுத்த வருஷாரம்பத்தில் ஆரம்பிக்கும்படி துகை ரு. 5705-7-0யையும் நீங்கள் என்னுடைய பங்களாவிற்கு அனுப்பினால் நான் தங்களுக்கு நன்றியுள்ளவனாயிருப்பேன்.'

முகாம் : வல்லம்
1848 டிசம்பர் 14 உ

ஜே. பேர்டு
ACT COLLECTOR

*மோடித் தமிழாக்கம்*—சரசுவதிமகால், மூட்டை எண் 167 சி. எண்-2; தொகுதி II பக். 4.
*மோடித் தமிழாக்கம்*—தமிழ்ப் பல்கலைக் கழகம், தொகுதி I பக். 226-227.

# 70-74. திருவையாற்று கல்வெட்டுக்கள்

## 70. காவிரிப் படித்துறைக் கல்வெட்டு :

**திருவையாறு சிந்தாமணி அக்கிரகாரத்தின் படித்துறையின் மேல்புறம் மராத்தி மொழியில் இந்தக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.**

**சிந்தாமணிகர் பீமராவ் என்பவரின் மகன் சாமராவ் 1837இல் திருவையாற்றின் மேற்குப் பகுதியான சிந்தாமணிகர் பீமராயர் புரம் என்ற அக்கிரகாரத்து அந்தணர்களுக்கென்று இந்த அக்கிரகாரத்தின் தெற்கே காவிரியின் வடகரையில் பெரிய படித்துறையும் மண்டபமும் கட்டினார் என்று இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.**

**ஏற்கெனவே இருந்த இரண்டு படித்துறைகள் கிழக்கு மேற்கு எல்லைகளாகச் சுட்டப்படுகின்றன. நாள் 6—9—1837.**

### கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்ரீராம பிரசன்ன ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகம் 1759 கலியப்தம் 4938 ஏவிளம்பி வருசம் ஆவணி மாதம் வளர்பிறை சதுர்த்தி புதன்கிழமை பூச நட்சத்திரம் துருவ யோகம் பவகர்ணம் இந்த நன்னாளில் திருவையாறு தலத்தில் மேற்குத் திக்கில் கோதண்டராமர் க்ஷேத்திரத்தில் சிந்தாமணிகர் பீமராயர்புரம் அக்கிரகாரத்திற்குத் தென்புறம் வெங்கடாசல நாயக்கர் படித்துறைக்குக் கிழக்கு விசுவபதி தீட்சிதர் ஸ்நான கட்டத்திற்கு மேற்கு கிழக்கு முகமாக ஓடிக்கொண்டிருக்கும் காவேரிக்கு வடக்கு அரசமரத்திற்குத் தெற்கு இந்த நான்கு எல்லைக்குட்பட்ட சுவருக்கு வெளியே அழகுடன் கட்டப்பட்ட மண்டபங்களுடன் மாடிப் படியுடன் கிழக்கு மேற்கு கம்பெனி அடிக்கணக்கு 48 இந்த மாடிப்படித் தலத்தில் இந்த அக்கிரகாரத்தில உள்ள எல்லா அந்தணர்களும் குளிப்பதற்கும், சந்தியா வந்தனம், நல்ல கர்மானுட்டானங்கள் செய்வதற்காக வேண்டி சிந்தாமணிகர் பீமராவ் அவர்களுடைய மகன் சாமராயர் மூலமாக இந்த அறப்பணி நடைபெற வேண்டியது.*

## 71. காவிரிப் படித்துறைக் கல்வெட்டு :

திருவையாற்றில் உள்ள அனுசம்பா பாயி சத்திரம் அருகே காவிரியின் வட கரைப் படித்துறை ஒன்றில் இக்கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது. 1847 ஆம் ஆண்டு சிவாசி மன்னர் திருவையாற்றில் காவிரியாற்றில் பாலம் கட்டுவதற்கு முன்பு படகின் மூலமே திருவையாற்றுக்குப் போக்குவரத்து நடைபெற்று வந்தது. அதற்காகப் பல படித்துறைகள் திருவையாற்றில் கட்டப்பட்டிருந்தன.

படகுத் துறைக்காகவும் வேறு சமய, சடங்கு நிகழ்ச்சிகளுக்காகவும் பொது மக்கள் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் தஞ்சாவூர் மராட்டிய அரசர்களின் நெருங்கிய உறவினர்களான இரகோசி மாடிக்கராவ் சாயப் அவர்களின் மனைவியார் சீதாபாயி அம்மா அவர்கள் 1842 ஆம் ஆண்டு இந்தப் படித்துறையைத் தன் சொந்தச் செலவில் கட்டுவித்தார்கள்.

இரகோசி மாடிக்கராவ் சாயப் 'வஜராத்துமாபு' என்று கல்வெட்டில் அடைமொழியுடன் குறிக்கப்பெறுகின்றார். இது 'VAJARAT-MA-AUB' என்ற பாரசீகச் சொல் ஆகும். இச்சொல் 'நெருங்கியிருப்பவர்கள்' என்று பொருள் தரும்.

இம் மாடிக்கராவ் மரபினர் இன்றும் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தின் நெருங்கிய உறவினர்களாகத் தஞ்சை, திருவையாற்றில் வாழ்ந்து வருகின்றனர்

### கல்வெட்டு

1 உ
2 சுப ஸ்ரீமந் சாலிவாகந
3 சகம் 1763 கலியுகம் 49
4 42 பிலவ ஸ்ரீ மாசி மீ சுக்கில
5 பக்ஷத்தில் சத்தமி புதன் கிழமை
6 அசுபதி நக்ஷத்திரம் இந்த சுபதிநத்தில்
7 பஞ்சநத க்ஷேத்திரத்தில் வஜராத்துமா
8 பு ஸ்ரீ ரகோஜீ மாடிக்கராவு சாயபு அ
9 வர்களுடைய பத்திநி சீதாபாயி யம்மா
10 ளுடைய தருமம் இந்தப் படித்துறை சக
11 ல நற்கருமாநுட்டாநங்களுக்கு சௌக்கி
12 யார்த்தமாய்ச் செய்யலாச்சுது .:

## 72. செவ்வாய்க் கிழமைப் படித்துறைச் சத்திரக் கல்வெட்டு :

திருவையாறு செவ்வாய்க் கிழமைப் படித்துறைச் சத்திரத்தின் முகப்பில் இடப்புறச் சுவரில் தமிழ், மராத்தி ஆகிய இருமொழிகளிலும் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

சோழநாட்டுக் காவிரி வடகரைத் தலங்களுள் ஒன்றும், மூவர் தேவாரப் பதிகங்களும் பெற்ற தலமும் ஆகிய திருவையாற்றில் பல சத்திரங்கள் உள்ளன. அவற்றுட் சில தஞ்சை மராட்டியர் காலத்தில் ஏற்படுத்தப்பெற்றவை.

18—7—1852இல் மன்னர் சிவாசியால் மணந்து கொள்ளப்பெற்ற 17 மனைவியருள் ஒருவரான கௌரம்பா பாயி என்பவர் தன் தாயார் துர்க்கா பாயி அம்மணி அவர்கள் பெயரால் திருவையாற்றில் இந்தச் சத்திரத்தைக் கட்டினார் என்றும் அச்சத்திரத்தில் நாள்தோறும் பிராமணர்களுக்கு உணவளிக்கத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்ததாகவும் இக்கல்வெட்டு அறிவிக்கிறது. நாள் 17—7—1876.

துர்க்காபாயி அம்மணியின் கணவர் பலவந்த ராவ் சூர்வே. இவர்கள் வழியினர் இன்னும் திருவையாற்றில் வாழ்ந்து இச்சத்திர நிர்வாகத்தைக் கவனித்து வருகின்றனர்.

## கல்வெட்டு

1 *உ*
2 *சாலிவாஹன சகாப்தம் 1798*
3 *தாது ஸ்ரீ ஆடி மீ 3 உ திங்கள் கிழ*
4 *மை ஸ்ரீ பஞ்சனத க்ஷேத்திரத்தில் வ*
5 *ஸ்ரீ பலவந்த றாவ் சூர்வேயவர்கள்*
6 *பாரியை துர்காபாயி அம்மணீயேன்*
7 *பரலோக சாதனார்த்தம் ஆசந்திரார்க்க*
8 *ம் தினந்தோரும் பிறாம்மண போஜன த*
9 *ர்மம் நடக்க வேண்டியதர்க்காக இ*
10 *ந்த அன்ன சத்திரமும் இதற்கு பரிமித தி*
11 *ரவியமும் தேவ பிறாமண சாக்ஷியாய்*
12 *உதக தாறை பூர்வமாய் விட்டிருக்கி*
13 *றேன்.*

## 73. கல்யாண மகால் கல்வெட்டு :

கல்யாணமகால் மாளிகையின் தெற்கு எல்லையில் காவிரிப் படித்துறையின் மேற்புறம் இக்கல்வெட்டு உள்ளது.

இரண்டாம் சரபோசி மன்னரால் (1798—1832) 1824இல் கட்டப்பட்ட மாளிகை திருவையாறு கல்யாண மகால். திருவையாற்றில் காவிரியின் வடகரையில் இம்மாளிகை மிகப்பெரிய அளவில் கட்டப்பட்டுள்ளது.

இம்மாளிகையில் சரபோசி மன்னரின் வைப்பு மகளிர் தங்கியிருந்தனர். இதன் காரணமாகச் சரபோசியின் வைப்பு மகளிருக்குக் 'கல்யாண மகால் மகளிர்' என்றே பெயர் ஏற்பட்டது. பிற்காலத்தில் இம்மகளிர் தஞ்சை அரண்மனையின் ஒரு பகுதியில் தங்கியபோதும்கூடக் 'கல்யாண மகால் மகளிர்' என்றே பெயர் பெற்றனர்.

1832இல் சரபோசி மன்னர் இறந்தபோது இக்கல்யாண மகால் மாளிகையில் 24 பேர் இருந்தனர். இவர்களுக்கென்று பணிப் பெண்களும், அக்காமார்களும் இருந்தனர்.

இன்று கல்யாண மகால் மாளிகையில் அரசர் தமிழ்க் கல்லூரி, வடமொழிக் கல்லூரி, இசைக் கல்லூரி, மாணவியர் தங்கும் விடுதி ஆகியவை இயங்கி வருகின்றன. இக்கல்வெட்டில் மகால் 'மால்' என்று குறிக்கப்பெற்றுள்ளது.

### கல்வெட்டு

*1 கல்யாண*
*2 மால்*

## 74. ஐயாறப்பர் கோயில் கல்வெட்டு :

திருவையாறு ஐயாறப்பர் (பஞ்ச நதீசுவரர்) கோயிலில் உள்ள லட்சுமி சுரசுவதி சன்னிதியில் இக்கல்வெட்டு உள்ளது.

சிவாசி மன்னரின் (1832—1855) அந்தப்புர மாளிகையாகிய மங்கள விலாச மாதருள் ஒருவராகிய மீனா பாயி அம்மாள் 1860ஆம் ஆண்டு திருவையாறு கோயிலில் உள்ள மகாலட்சுமிக்கு நகைகள் சில அளித்த விபரம் இக்கல்வெட்டில் குறிக்கப் படுகிறது. நாள் 19—10—1860.

### கல்வெட்டு

*1 உ*
*2 ரவுத்திறி ஹு அர்ப்பி*
*3 சி ஸீ 5 உ திருவாதி*
*4 ஸ்ரீ பஞ்ச நதீசுவற சுவா*
*5 மி கோவில் மூலஸ்தான*
*6 ம் மகாலெட்சுமி அம்ம*
*7 னுக்காக தஞ்ச நகறம்*
*8 மங்கள விலாசம் மீனா*
*9 பாயி அம்மாளால் குடுக்க ப*

10 ட்ட நகைகளின் விபறம்
11 கல்விழச்ச கிள்ளட்டிகை
12 । பொன் ஒட்டியாணம் ।
13 பொன் வங்கி சோடு । சுன்
14 னடி மணி ।½ கோர்
15 வை ।।½ பொன் பொன
16 ஞ்சு சோடு கட்டு வே
17 லை சந்திற முருகு சோ
18 டு । வைற மூக்[கு]த்தி
19 । மூணு வயிறம்
20 யேழு.....................

# 75. திருப்பூந்துருத்திக் கல்வெட்டு

தஞ்சாவூர் வட்டத்தில் கண்டியூருக்கு 3 கி. மீ. மேற்கில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற திருத்தலம் திருப்பூந்துருத்தி. அங்குக் குடமுருட்டி பழைய ஆற்றைச் சேர்ந்த நடுப்படுகை என்னும் இடத்தில் ஒரு கல்லில் இக்கல்வெட்டுப் பொறிக்கப் பட்டிருந்தது. இன்று இந்த இடத்தில் கல் இல்லை. ஆனால் மெக்கன்சி காலத் தில் இக்கல்வெட்டு பார்வைப்படி எடுக்கப்பட்டு தி. நா. சுப்பிரமணியம் அவர் களால் பதிப்பிக்கப்பட்ட தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் இரண்டாம் தொகுதி யில் அச்சிடப்பெற்றுள்ளது.[1]

சென்னையிலுள்ள கீழ்த்திசை மொழிகளின் சுவடிச் சாலையில் ஓலைச் சுவடி யில் உள்ள நகல் இங்கு வெளியிடப்பெறுகிறது.

திருப்பூந்துருத்தி தஞ்சை மராட்டிய மன்னர்களோடு தொடர்பு கொண்ட ஊர். மன்னர் துளசா காலத்தில் (1785) திருப்பூந்துருத்தியில் 1963 குழி நிலத்தில் மரம் செடி கொடிகள் வைக்கப்பட்டன. வைத்தியநாதம்பேட்டை திருப்பூந்துருத்தியில் பாளம்பட் என்பவருக்குக் கொடை நிலங்கள் விடப்பெற்றிருந்தன.

இல்லேக்கசு என்னும் பக்கீர் ஒருவருக்கும், சதாசிவ பாண்ட்யா என்பவ ருக்கும், கிருட்டிண பாகவதருக்கும் திருப்பூந்துருத்தியில் கொடை நிலங்கள் மராட்டிய மன்னர்களால் தரப்பட்டன. தஞ்சை இராசகோபால சுவாமி கோயிலில் எழுந்தருளி யிருக்கும் சிவேந்திர சுவாமிக்கும் மிகுதியான கொடைகள் திருப்பூந்துருத்தியில் கொடுக்கப்பட்டிருந்தன. மங்கள விலாச மாதுஸ்ரீ கோவிந்தா பாயி அம்மாள் அவர்கள் கீழவாயில் கோதண்டராமர் ஆலயத்துக்கு இவ்வூரில் நிலம் விட்டிருந்தார்.

17—4—1771ஆம் ஆண்டு மன்னர் துளசா திருப்பூந்துருத்தியில் இருந்த குடமுருட்டியாறு மேடிட்டு வேளாண்மைக்குப் பயன்படாத காரணத்தால் அப்பகுதி

---

1. தி. நா. சுப்பிரமணியம், *தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்* தொகுதி 2, எண் 1071, பக். 998.

யில் எளிமையாகப் பாசனவசதி பெறவேண்டிக் குடமுருட்டி ஆற்றைப் புது இடத்தில் வெட்டினார் என்ற அரிய செய்தி இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

10 கட்டு நிலத்தில் குடமுருட்டி ஆறு வெட்டப்பட்டது. கீழத்தெரு அம்பலக் காரர் நிலத்தில் ஆறு வெட்டப்பட்டதால் அவருக்கு ஈடாக 160 பொன் அளிக்கப் பட்டது.

பழைய ஆறு ஓடிய நிலம் முழுவதும் திருப்பூந்துருத்தி புட்பவனநாதருக்குக் கொடையாக அளிக்கப்பட்டது. 18 அடிக் கோலால் அளக்கப்பட்டு பழைய ஆற்றுப் பகுதியில் 4800 குழி நிலம் கொடையாகத் தரப்பட்டது. கொடை அளிக்கப்பட்ட நிலத்துக்கு நாற்பாங்கு எல்லையும் கூறப்பெற்றுள்ளன.

இக்கல்வெட்டில் தஞ்சை மராட்டிய மன்னர்கள் கவுசிக கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் என்ற குறிப்பு காணப்படுகிறது.

## கல்வெட்டின் ஓலை நகல்

1 *திருப்பூந்துருத்தி வட்டத்தை சேர்ந்த*
2 *குடமுரட்டி வடகரை பழையாரு*
3 *நடுப் படுகையில் னாட்டு*
4 *கல்லில் யெழுதி இருக்குர*
5 *சிலா சாசனம் பேத்து[2] யெழுதி*
6 *கொண்ட வயனம் யெளு[து]வது*
7 *ஸ்வஸ்திஸ்ரீ சாலீவாகன சகாப்தம் 1693*
8 *கலி அப்தம் 4872 யிதின் மேல் செல்லாநி*
9 *ன்றக் கற ஷூ சித்திரை மீ 22 உ புதவாரம் தி*
10 *ரதிகை னாழிகை 43 பூச னட்சத்திரம் னாழிகை*
11 *15 யிந்த சுபதினத்தில் ராசமான்னிய — ரா — போ*
12 *சல வம்சம் கவுசிக கோத்திரம் ராசஸ்ரீ பிரதாப சிம்ம மகாராசா சாயப்பு அவ*
13 *ர்கள் குமாரர்—ரா—துளசா மகாராசா சாயப்பு அவர்கள் திருப்பூந் துருத்தி ஸ்ரீ பு*
14 *ஷ்பவநேசுவர சுவாமி அவர்களுக்கு புது ஆத்துக்கு சாசனம் பண்ணி குடு*
15 *த்தபடி சாதனமாவது திருப்பூந்துருத்தி கொடமுறட்டி ஆறு*
16 *புது ஆரு வெட்டினத்துக்கு பத்து கட்டு னிலத்திலே வெட்டினத்துக்கு*

---

2. பெயர்த்து

17 கீளத் தெருவு அம்பலகாரருக்கு பத்து கட்டு பணத்தில் தள்ளி குடுத்தது

18 அலாதி உள்பட பொன் 160 யிந்த னூத்தி அருவது பொன்னும் தள்ளி குடுத்த

19 படியினாலே முன் பளைய ஆறு நெலம் கலியாணபுரம் வாக்காலுக்கு

20 தெற்க்கு மேல்படியூர் யெல்லைக்கி கிழக்கு வடகரைக்கு மேற்கு திருந்பூந்து

21 ர்த்தி புஞ்சை னிலத்துக்கு வடக்கு பளய ஆத்தில் உள்ள நிலம் பதினெ

22 ட்டு அடி கோலால் குழி 4800 யிந்த னிலம் புஷ்பவனேசுவர சுவாமிக்கி

23 உதக தாராதத்தமாக நாம் தத்தம் பண்ணின படியினாலே அந்த நிலத்தில்

24 உள்ள நிதி நிட்ஷேப சல தரு பாஷானம் அஷ்சினி ஆகாமி சித்தி சாத்திய

25 அஷ்ட்ட போக தசவித சுவாமியங்களும் சுபாதாய காஷ்த்திதமாய்

26 சுகமே அனுபவித்துக் கொள்ளுவாராகவும் யிந்த சாசனத்துக்கு யாதா

27 மொருத்தர் விகாதம் பண்ணுர பேர்கள் கெங்கெ ஆத்தில் காராம் பசுவெ கொ

28 ன்ன தோஷத்தில் போவர்கள் ௨ தானபாலநயோர் மத்யே தாநாஸ்ர

29 யோனு பாலநம் தானாத் ஸொர்க்கமவாப்நோதி பாலனாதச்சுதம் ப

30 தம் ௨ ஸ்வதத்தாதி குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரதாப காரேண

31 ஸ்வஸிதம் நிஷ்பலம் பவேது ௨

# 76. செந்தலைக் கல்வெட்டு

தஞ்சாவூர் மாவட்டம் செந்தலையின் வடபுறம் உள்ள தோப்பினுள் காவிரித் தென்கரையில் இக்கல்வெட்டெழுத்துப் பொறித்த கல் முன்பு இருந்தது. காவிரி யாற்றின் வெள்ளப் பெருக்கில் இக்கல் எங்கோ இடம் பெயர்ந்து சென்றுவிட்டது.

மையத் தொல்பொருள் துறையின் கல்வெட்டுத்துறை அலுவலகத்திலிருந்து பெற்ற ஒளிப்படத்தைக் கொண்டு[1] இக்கல்வெட்டு இங்குப் பதிப்பிக்கப்படுகிறது.

'ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பிரமதேயம் சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம்' என்று சோழர் நாளிலும், 'சந்திர றேகை' என்று விசயநகர மன்னர் காலத்திலும், இக்கல்வெட்டிலும் அழைக்கப்பெற்ற இவ்வூர் இன்று 'செந்தலை' என வழங்கப் படுகிறது.

1714ஆம் ஆண்டு முதலாம் சரபோசி மன்னர் காலத்தில் செந்தலை சொக்க நாதர் மீனாட்சி அம்மன் உச்சிக்காலக் கட்டளையின்போது விளக்குகள் எரிக்க இலுப்பைத் தோப்பு கொடையாக அளிக்கப்பெற்ற செய்தி இக்கல்வெட்டில் கூறப் படுகிறது.

அக்காலத்தில் செந்தலைப் பகுதியின் சுபேதார் சுவாமிநாத பிள்ளை என்பவர் குறிக்கப்படுகின்றார். சுந்தரேசுவரர் என இன்று அழைக்கப்படும் சிவபெருமான் இக்கல்வெட்டில் சொக்கநாதர் என்று குறிக்கப்பட்டுள்ளார்.

## கல்வெட்டு

முதல் பக்கம்

1 *ஸ்வஸ்தி ஸ்ரீ*
2 *செயஷு ஆடி மீ*
3 *சந்திரரேகை செ*
4 *சாக்கனாத சுவா*

---

1. *A.R.E.* No. 215 of 1925-26.

5 மி மீனாட்சி அம்
6 மனுக்குச் சரபே
7 ாசி மகராசா
8 சாயுபு ராச்சி
9 யம் பண்[ணுக]
10 யில் சுவாமி
11 னாத பிலை[2]யவு
12 ர்கள் சுபையி
13 ல் உச்சிக் கால
14 கட்டளைக்கு திரு
15 விளக்கு இலு
16 ப்பை தோப்பு வ
17 ச்சு சேத்தது இ
18 ந்தத் தற்மம் பரி
19 பால[ன]ம் பண்ணி
20 ன பேர் கயிலா
21 ச பதவியிலே
22 சந்திராதித்தாள்

**இரண்டாம் பக்கம்**

23 உள்ள மட்டும்
24 இருப்பார்கள்
25 இந்த தற்மத்துக்கு
26 விகாதம் பண்
27 ணினபேர் கெ
28 ங்கை கரை
29 ரயில் காரா
30 ம் பசுவை கெ
31 ாண்ண தோ
32 ஷத்திலே போ
33 வான் சந்திரா
34 தித்தாள் உள்ள
35 மட்டும் எழுவா
36 தி நரகத்திலே கி
37 டப்பானாகவு
38 ம்

---

2. பிள்ளை

# 77. பூதலூர்க் கல்வெட்டு

தஞ்சாவூர் வட்டத்தில் உள்ள பூதலூரின் வடக்கே 2 கி. மீ. தொலைவில் உள்ள அய்யநார் கோயில் அருகே திருக்காட்டுப்பள்ளி செல்லும் சாலையின் மேல்புறம் உள்ள சிறு வாய்க்காலுக்குள் சூலம் பொறிக்கப்பட்ட இக்கல் கிடந்தது. இக்கல் இப்போது தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் அருங்காட்சியகத்தில் உள்ளது.

ஊருக்குள் உள்ள ஆபத்சகாய ஈசுவரர் கோயிலுக்கெதிரில் குளத்தின் அருகில் நடப்பட்டிருந்த இக்கல் வாய்க்கால் தண்ணீரைத் தேக்கும் பொருட்டு இவ்வாய்க்காலுக்குள் கொண்டுவந்து போடப்பட்டுள்ளது.

சென்னையிலுள்ள அரசினர் சுவடிச் சாலையில் உள்ள மெக்கன்சி தொகுப்பில் இக்கல்வெட்டின் படி ஒன்று காணப்படுகிறது.[1]

'தஞ்சாவூர்ச் சீமை திருக்காட்டுப்பள்ளி பூதலூர் சந்தலை என்கிற கிராமங்களின் சிலா சாசனம் 10 தாம்பிற சாசனம் 1' என்ற தலைப்பிட்ட ஓலைச்சுவடியில் 24ஆம் எண் கல்வெட்டாக இக்கல்வெட்டின் நகல் காணப்படுகிறது. தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் என்னும் நூலில் இக்கல்வெட்டு அச்சாகியுள்ளது.[2]

முதலாம் சரபோசி மன்னர் மன்மத ஆண்டு தை மாதம் 28ஆம் தேதி (26—1—1715) பூதலூர் ஆபத்சகாய ஈசுவரருக்கு அபிஷேகக் கட்டளைக்காகக் கார் நெல் விளையும் நிலத்தில் அரை வேலியும், சம்பா நெல் விளையும் நிலத்தில் அரை வேலியும் ஆக ஒரு வேலி நிலம் கொடையாக அளித்த செய்தி இக்கல்வெட்டில் காணப்படுகிறது. இந்நிலம் 10 அடிக்கோலால் அளக்கப்பெற்றது. இக்கல்வெட்டின் தொடக்கத்தில் முத்தலைச் சூலம் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது.

---

1. எண். டி 2739-19.
2. தி. நா. சுப்பிரமணியம், *தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்*, தொகுதி 2, எண்-630 ; பக். 608.

# கல்வெட்டு

1 மன்மத ௵
2 தை ௴ 2
3 8 ௳ பூதலூ
4 ர் ஆபற்சக
5 ாய சுவா
6 மிக்கு ராச
7 ஸ்ரீ சரபே
8 ாசி ராசா
9 அவர்கள்
10 அபிஷேக க
11 ட்டளைக்கு வி
12 ட்ட நிலம்
13 10 அடி கோ
14 லால் கா
15 ரில் வேலி
16 அரை பி
17 சாணத்தி
18 ல்[3] வேலி
19 அரை

---

3. பசானத்தில்

# 78-79. சூரக்கோட்டைக் கல்வெட்டுக்கள்

## 78. சந்தான ராசகோபால சுவாமி கோயில் கல்வெட்டு :

இரண்டாம் சரபோசி மன்னரின் இரண்டாம் மனைவி அகல்யா பாயி சாகேப் அவர்கட்கு சுலக்சணா பாயி, இராசகுமாரா பாயி, பாயம்மா பாயி, சக்வார் பாயி என்ற நான்கு பெண்களும், கடைசியாக சிவாசியும் பிறந்தனர். இராசகுமாரா பாயி தன் தம்பி சிவாசி மன்னரின் ஆட்சிக்காலத்தில், 1833 ஆம் ஆண்டு விசய வருடம் ஆனி மாதம் தேய் பிறைச் சதுர்த்தி வெள்ளிக்கிழமையன்று சூரக்கோட்டையின் வடக்கே பட்டுக்கோட்டை செல்லும் சாலையாகிய சேது வழியின் மேற்குப் பக்கம் கிழக்கு நோக்கிப் பெருமாள் கோயில் ஒன்றைக் கட்டுவித்தார். நாள் 9—8—1833.

பூதேவி சீதேவி உடன் சந்தான ராசகோபால சுவாமியை மூலவராக எழுந்தருளச் செய்தார்.

இப்போது மூலவர் இராதா உருக்குமணியுடன் அமைக்கப்பட்டு வேணு கோபால சுவாமி என்று அழைக்கப் பெறுகின்றார். இக்கோயிலில் 'பாசி மகேசுவரர்' என்று சிவபெருமான் சிற்பம் எழுந்தருளுவிக்கப்பட்டுள்ளது. அதனால் பெருமாள் கோயிலாக இருந்தும் வைணவர் பூசை செய்யாமல் சைவ சமயம் சார்ந்த அந்தணரே பூசை செய்கின்றார்.

கருவறையின் வாயிலில் வலப்பக்கம் உயர்ந்த பீடம் ஒன்றில் இக்கோயிலைக் கட்டித் தெய்வப் படிமங்களையும் எழுந்தருளுவித்த இராசகுமாரா பாயி அவர்களின் திருவுருவச் சிலை 50 செ. மீ. உயரத்தில் இறைவனைக் கைகூப்பி வணங்கிய நிலையில் அழகுடன் நிறுவப்பட்டுள்ளது.

இக்கோயிலின் வடக்குப் பக்கம் அருகிலேயே இராசகுமாரா பாயி சத்திரம் கட்டப்பெற்றுள்ளது. சத்திரம் முழுவதும் இன்று அழிந்துவிட்டது ; அடிப்பகுதிகளே எஞ்சியுள்ளன.

இக்கோயிலின் முகப்புச் சுவரில் வாயிலின் இடப்பக்கம் செங்கல் சுவரில் இந்த மராத்திமொழிக் கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட கல் பதிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகம் 1755 கலியுகாப்தம் 4934 விசய வருடம் ஆனி மாதம் தேய்பிறை சதுர்த்தி வெள்ளிக்கிழமை சோழ நாட்டு அதிபரான ஸ்ரீமந் சிவாசி மகாராசா அவர்களுடைய அக்கா சௌபாக்கியவதி இராசகுமரா பாயி அம்மணீ ராசே அவர்கள் இராமேசுவரம் செல்லும் வழியில் ஸ்ரீராச இராசகுமாரர் கம்பீர ராசகுமாரர் ஸ்ரீ விசயா விபர்த்தக ஸ்ரீ சந்தான ராசகோபாலரையும் நாகரையும் பட்டாபி ராமரையும் சரசுவதி தேவியையும் எழுந்தருளுவித்து அன்ன சத்திரம் கட்டிப் பாரதத்தில் எப்போதும் செய்யக் கூடிய தருமத்தை நிலை நிறுத்தினார்.*

## 79. சுத்த ரத்தினேசுவரர் கோயில் கல்வெட்டு :

மராத்தியில் உள்ள இக்கல்வெட்டு பொறிக்கப்பட்ட கல் சுத்த ரத்தினேசுவரர் கோயிலின் நுழைவாயிலின் வடபுறம் கிழக்கு நோக்கிப் பதிக்கப் பட்டுள்ளது.

இரண்டாம் சரபோசி மன்னரின் மூத்த மகள் சுலக்சணா பாயி அவர்கள் சூரக் கோட்டைக் கிராம வடக்கு எல்லையில் நிலம் வாங்கிச் சுகுந்த குந்தளாம்பிகை உடனமர் சுத்த ரத்தினேசுவரர் என்ற பெயரில் சிவாலயம் ஒன்றைக் கட்டி, அன்ன சத்திரம், வீடுகள் ஏற்படுத்திக் குளம் வெட்டிப் படித்துறையும் கட்டின செய்தி இதில் குறிக்கப்படுகிறது. பணிதொடங்கிய நாள் 8—5—1848.

மேற்கண்ட அறப்பணிகள் அனைத்தும் 1858ஆம் ஆண்டு செய்து முடிக்கப் பெற்றன. பின் அப்பகுதி முழுவதற்கும் 'சுலக்சணாம்பாள் புரம்' என்று பெயரிடப் பெற்றது. நாள் 13—9—1858.

நிரந்தரமாக மேற்கண்ட சிவாலயத்தில் பூசை நடைபெறவும், சத்திரத்தில் அந்தணர்கட்கு உணவளிக்கவும், தெய்வத் திருமேனிகட்கு அணிகலன்கள், சத்திரத் திற்குப் பாத்திரங்கள் முதலியவை வாங்குவதற்கும் 24 அடிக்கோலால் அளந்து 20,000 குழி நன்செய் நிலம் நன்கொடையாக அளிக்கப்பெற்றது. இச்செயல் அப்போதைய அரசரும் சுலக்சணா பாயின் சகோதரருமாகிய சிவாசி காலத்தில் நடைபெற்றது.

கோயிலின் உள் மகாமண்டபத்தில் நந்தியின் இருபுறமும் சுலக்சணா பாயும், அவரது கணவர் மேஸ்தி யஷ்வந்த் ராவ் மொகிதே அவர்களும் இறைவனை வணங்கும் கோலத்தில் முறையே 45 செ. மீ., 60 செ. மீ. உயரத்தில் கற்சிலை களாகச் செய்து வைக்கப்பட்டுள்ளனர். அருகே கிளியின் உருவம் ஒன்றும் வைக்கப் பட்டுள்ளது.

# கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகம் 1780 கலியுக ஆண்டு 4959 காளயுக்தி ஆண்டு ஆவணித் திங்கள் வளர்பிறை சதுர்த்தசி திங்கட்கிழமை அன்று சோழநாட்டை ஆட்சி புரிந்த ஸ்ரீமந்த் சத்திரபதி ராசஸ்ரீ சரபோசி மகாராசா சாகிப் அவர்களுடைய ஸ்ரீமந்த புத்திரி ராசஸ்ரீ மேஸ்தி[1] யஷ்வந்தராவ் மொகிதே அவர்களுடைய மனைவியார் மாதுஸ்ரீ சுலக்சணா பாயி அம்மணி ராசே அவர்கள் தஞ்சாவூரிலிருந்து இராமேசுவரம் செல்லும் வழியில் சூரக்கோட்டை கிராமத்தின் எல்லையில் விலை கொடுத்து வாங்கிய நிலத்தில் கோயில், அன்ன சத்திர வீடுகள் வகையறாக்கள் கட்டி, குளம் வெட்டி, படித்துறை கட்டித் தற்போது சாலிவாகன சகம் 1770 கீலக வருசம் சித்திரை மாதம் வளர்பிறை சதுர்த்தசி திங்கட்கிழமை அன்று அத்த நட்சத்திரம் கூடிய பகல் 8 நாழிகைக்குப் பிறகு மிதுன இலக்கனத்தில் சிவபெருமானைப் பிரதிட்டை செய்தார். சிவ பெருமானின் பெயர் சுத்த ரத்தினேசுவர சுவாமி. தேவியின் பெயர் சுகுந்த குந்தளாம்பிகை. சத்திரமும் வீடுகள் முதலியவைகளைக் கட்டிச் 'சுலக்சணாம் பாள் புரம்' என்று பெயரிட்டார்.*

*நிரந்தரமாகப் பூசை, படையல், அந்தணர்கட்கு உணவளித்தல், சிவ பெருமானுக்குத் திருவிழாக்கள் முதலியவைகளைச் செய்யும் செலவுகளுக்காக ஏற்பாடுகள் செய்து அணிகலன்கள், பாத்திரங்கள் முதலியன பட்டியல் தயார் செய்து, அறத்தைச் செய்தவரின் இளைய சகோதரர் சத்திரபதி சிவாசி மகாராசா அவர்கள் மூலமாக மேலே குறிக்கப்பட்ட சூரக்கோட்டை கிராமத்தில் கருநாடக அடி 24 அடிக்கோலால் நஞ்சை புஞ்சை குழி 20000 இருபதாயிரம் குழி சர்வமானியம் சிகா முத்திரைப் பட்டா வழங்கினார். மேற்படி அறமானது மேற்குறித்த சர்வமானிய வருவாயிலிருந்து நிரந்தரமாக நடத்த வேண்டும். இந்த எண்ணத்தில் இன்று இந்தக் கல்வெட்டு எழுதப்பட்டு நிறுவப்பட்டுள்ளது.*

*அறம் செய்தல், பிறர் செய்த அறத்தைப் பேணுதல் ஆகிய இவ்விரண்டில் பிறர் செய்த அறத்தைப் பேணுவதே சிறந்தது. அறம் செய்தால் தேவருலகு மட்டுமே கிடைக்கிறது. ஆனால் அறத்தைப் பாதுகாப்பதால், காப்பவன் விட்டுணுவின் பதத்தையே அடைகின்றான்'.[2]*

1. இச்சொல் 'மேஸஜி' என்றும் எழுதப் பெறுகிறது.
2. இப்பகுதி வடமொழிச் சுலோக வடிவில் உள்ளது.

# 80-81. மாரியம்மன் கோயில் கல்வெட்டுக்கள்

தஞ்சாவூர்—திருவாரூர் சாலையில் தஞ்சாவூரிலிருந்து 8 கி. மீ. தொலைவில் உள்ளது மாரியம்மன் கோயில். அக்கோயிலின் முன்மண்டபத்தின் முதல் இரு தூண்களில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

மாரியம்மன் கோயில் அமைந்துள்ள ஊருக்குப் 'புன்னைநல்லூர்' என்பது பெயர். இன்று புன்னைநல்லூர் என்ற ஊர்ப்பெயர் மாறி, மாரியம்மன் கோயில் பெயரே ஊருக்கும் அமைந்து விட்டது.

'சோழேந்திர விஜயம்' என்ற வடமொழி நூலில் இவ்வூர் குறிக்கப் பெறுவதாலும், இக்கோயிலின் இனாம் கிராமம் ஒன்றுக்கு 'அருண்மொழிப் பேட்டை' என்று பெயர் உள்ளதாலும் இக்கோயில் சோழர் காலத்திலேயே இருந்தது என்பர்.

துளசா (1763—1787) இரண்டாம் சரபோசி (1798—1832) காலங்களில் இவ்வூருக்கு 'மாரியம்மாள் புரம்' என்ற பெயர் வழங்கி வந்துள்ளது.

முதலாம் ஏகோசி இராமேசுவரம் யாத்திரைக்குத் தமிழகம் வரும்போது ஒரு முறை சமயபுரத்தில் வழிபாடியற்றித் தங்கியதாகவும், அவர் கனவில் புன்னை நல்லூர் மாரியம்மன் தோன்றிப் புன்னை நல்லூரில் தனது ஆலயம் கட்ட வேண்டும் என்றும், தஞ்சையில் அரசினைத் தொடங்கி நடத்த வாய்ப்பு வரும் என்றும், அவர் வழியினருக்கெல்லாம் தான் அருள் பாலிப்பேன் என்றும் கூறியதாக ஒரு செவி வழிச் செய்தி வழங்கப் பெறுகிறது. இதனால் இக்கோயில் முதல் ஏகோசி கட்டியதாகவும் கூறப்படுகிறது.

மற்றுமொரு செவிவழிச் செய்தி கூறப்படுகிறது. துக்கோசி (1729—1735) காலத்தில் இங்குப் பெரியபுற்று மட்டும் இருந்து அதை மக்கள் வணங்கி வந்ததாகவும் ஒருநாள் பகலில் அந்தணச் சிறுமி வடிவில் இம்மாரியம்மன் துக்கோசி முன் தோன்றித் தான் புன்னைநல்லூர் மாரியம்மன் என்றும், தான் மராட்டிய அரச குடும்பத்துக்கு நன்மை செய்வதாகவும் அரசரின் மகள் கண் பார்வை மங்கி வருவதை நீக்குவதாகவும் கூறி மறைந்தாள் என்பர். அரசரின் மகள் மாரியம்மனை வணங்கவே

கண்பார்வை கிடைக்கப் பெற்றாள் ; அரசர் துக்கோசி இக்கோயிலுக்குப் பல திருப்பணிகளைச் செய்தார் என்றும் கூறுவர். மராட்டிய அரசர்களால் நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன. இக்கோயிலில் ஆதிசைவக் குருக்கள் பூசை செய்கின்றனர்.

சதாசிவப் பிரம்மம் என்னும் ஞானியார் மாரியம்மனைப் புதியதாக ஸ்ரீ சக்கர யந்திரப் பிரதிட்டையாகச் செய்வித்தார்.

## 80. காமாட்சியம்பா பாயி கல்வெட்டு :

இக்கோயிலிலும் அருகில் உள்ள கோதண்டராமர் கோயிலிலும் சிவாசி (1832—1855) மன்னரின் மனைவியார் காமாட்சியம்பா பாயி சாகேப் அவர்கள் 1892இல் செய்த பல திருப்பணிகளை இக்கல்வெட்டு விவரிக்கிறது. இத்திருப் பணிகளை அரசியாரின் சார்பில் ஏஜண்டு நாகராச ராமாசி ராவ் அவர்கள் செய்த தாகக் கல்வெட்டுக் கூறுகிறது.

### திருப்பணி விவரம்

1 மாரியம்மன் கோயில் வெளிக் கோபுர வாயிலில் 36 சதுர கெஜம் பரப் பளவில் வெள்ளைக்கல் மண்டபம் கட்டியது.

2 வடக்கு மதிள் கோபுரம் கட்டியது.

3 வடக்கு மதிள் ஓரம் அந்தணர்கள் தங்க மாடிக் கட்டிடம் 2 கட்டியது.

4 மடப்பள்ளி மண்டபம் புதுப்பித்தது.

5 யமுனாம்பாள் புரம் கோதண்டராமர் கோயிலுக்கு மேற்கே அந்தணர் உணவுண்ணும் கட்டிடம், வாகனம் வைக்கும் கட்டிடம், மடப்பள்ளி ஆகியவைகளைப் பழுது பார்த்தது.

6 கோபுர வாசல் தென்புறம் மேற்குப் பார்த்து 5 வீடுகள் கொண்ட அக்கிர காரம் ஏற்படுத்தியது.

7 கிணறு வெட்டியது.

8 தட்டி மால் கட்டிடம் கட்டியது.

9 வடவாற்றில் தீர்த்தப் படித்துறை கட்டியது.

10 அங்குக் கிணறு வெட்டியது.

இக்கல்வெட்டு வெட்டப்பட்ட காலத்தில் 27—1—1892ஆம் ஆண்டு இக் கொடைகளைச் செய்த காமாட்சியம்பா பாயி மரணமடைந்ததால் இக்கல்வெட்டில் மாதம் தேதி உள்ள பகுதிகள் பூர்த்தி செய்யப்படவில்லை.

## கல்வெட்டு

1 உ
2 கலி 4993 சகம்
3 1814 கர ஷு....மீ ....
4 உ க்கு இங்கிலீஷ்
5 1892ம் ஷு பிப்பர
6 வரி மீ ........ உ யோடு
7 தஞ்சாவூர் அரண்
8 மனை ஹிஸ் லேட்
9 ஹைநெ
10 நஸ் ஸ்ரீ
11 சிவாஜி
12 மகாறா
13 ஜா ஸா
14 கேப் அ
15 வர்களு
16 டைய
17 ஜியேஷ்
18 ட பத்ரி
19 யும் ஷெ
20 இலாகா
21 தேவஸ்
22 தானங்களின் ஆதீ
23 னஸ்தரும் விசார
24 ணைக் கர்த்தரவர்க
25 ளுமான ஹர் ஹைநே
26 நஸ் மாதுஸ்ரீ காமா
27 க்ஷியம்பா பாயி சா
28 கேபவர்கள் ஆஜ்ஞை
29 ருயின் பேரில் ஏஜெ
30 ஜண்டு நாகராஜ ராம
31 ராஜி பண்டிதரவர்கள்
32 அடியில் கண்ட கோ
33 வில்களில் திருப்ப
34 ணி வேலைகளை நட
35 த்திய விபரம் । ஸ்ரீ

36 மாரியம்மன் கோவில்
37 வெளி கே
38 ாபுர வா
39 சலில் 3
40 6 சதுர கி
41 ஜம் வெ
42 ள்ளைக் க
43 ல்லு முப்
44 பத்தி மட்
45 டபாகு ே
46 வலை செ
47 ய்த இந்த
48 மண்டப
49 ம் | வடக்
50 கு மதிளி
51 ல் கோபு
52 ரம் |ம் ஷி
53 மதிளோ
54 ரமாய் கீ
55 ழ்க் கோ
56 டியிலிருந்து உத்ஸ
57 வம் முதலான புண்
58 ணிய தினங்களில் பி
59 ராமண போஜனம் செ
60 ய்யவும் பிரார்த்தனை
61 க்கு வரும் பிராமண
62 ஜனங்கள் தங்கவும்
63 மச்சு கட்டடம் 2 ஆ
64 க 4 ம் நூதனமாய் ஸ்
65 தாபித்தும் மடப் ப
66 ள்ளி மண்டபம் முதலா
67 ன கட்டடங்களை ஜீ
68 ர்ணோத்தாரணம் செய்
69 யப்பட்டுமிருக்கிறது
70 2 எ[1] ஸ்ரீ கோதண்ட ரா

---

1. எ என்பது எமுனாம்பாள்புரம் என்பதன் சுருக்கமாகும்.

71 மஸ்வாமி கோவில்
72 மேல்புறம் திருமாலை
73 ப் பத்தியில் பிராம
74 ண போஜனக் கட்ட
75 டம் । வாகனம்
76 வைக்கக் கட்டடம்
77 ।
78 மடப் பள்ளி । ஆக
79 3ம் ரிபேர் செய்தும்
80 ஷி கோபுர வாசல்
81 தென் புறத்தில் கோ
82 வில் ஊழியம் செய்
83 யும் பிராமணர்கள்
84 வாசம் செய்ய மே
85 ற்க்குப் பார்த்த 5 ம
86 ச்சு வீடுகள் அடங்
87 கிய அக்கிரகாரம் । கி
88 ணறு । தட்டிமால் க
89 ட்டடம் । வடவாற்
90 றில் சுவாமிகள் தீர்
91 த்தம் கொடுப்பதர்க்
92 காக வெள்ளைக் கல்
93 லினால் கட்டப் பட்
94 ட படித்துரை । கிண
95 று । ஆக 9 கட்டடமு
96 ம் நூதனமாய் ஸ்தா
97 பிக்கப்பட்டுமிரு
98 க்கிறது

## 81. இரண்டாம் சரபோசி கல்வெட்டு :

இரண்டாம் சரபோசி மன்னர் (1798-1832) இப்புன்னை நல்லூர் மாரியம்மன் கோயிலில் நர்த்தன மண்டபம் எனப்படும் முன் மண்டபம் ஒன்றைக் கருங்கல்லால் புதியதாகக் கட்டினார். இம்மண்டபத்தின் முகப்பில் வலப்புறத் தூண் ஒன்றில் மராத்தி மொழியில் இத்திருப்பணி பற்றிய கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. நாள் 5—1—1831.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

ஸ்ரீ

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1752 ஆயிரத்து எழுநூற்று ஐம்பத்து இரண்டு கலியுக ஆண்டு 4931 நாலாயிரத்துத் தொளாயிரத்து முப்பத்தொன்று நடப்பு விக்குருதி ஆண்டு மார்கழி மாதம் 23ஆம் தேதி புதன்கிழமை தேய்பிறை சப்தமியன்று பரணி நட்சத்திரம் கூடிய இந்த நன்னாளில் ராசஸ்ரீ சரபோசி மகாராசா நெடுங் காலம் நிலைக்க வேண்டிச் செய்த நர்த்தன மண்டப தருமம்.*

# 82-88. ஒரத்தநாடு முத்தம்மாள்புரம் சத்திரக் கல்வெட்டுக்கள்

தஞ்சை மராட்டிய மன்னர்கள் நிலையாகச் செய்த அறக்கொடைகளுள் பெரியவை அவர்கள் கட்டிய பல சத்திரங்களாகும். சோழவள நாட்டிலிருந்து இராமேசுவரம் செல்லும் முக்கியமான சாலைகளில் எல்லாம் அவர்கள் காலத்தில் பல சத்திரங்கள் கட்டப்பெற்றன. இவற்றுள் 1743 முதல் 1837 வரை ஆட்சி புரிந்த தஞ்சை மராட்டிய அரசர்களால் உருவாக்கப்பெற்ற பெரிய சத்திரங்கள் 20 என்று கணக்கிட்டுள்ளனர்.[1]

---

1. 1 முத்தம்மாள் சத்திரம் - ஒரத்தநாடு
2 இலட்சுமிராசபுரம் சத்திரம் - வெண்ணாற்றங்கரை
3 சிரேயஸ் சத்திரம் - தஞ்சாவூர்
4 காஞ்சி வீடு - தஞ்சாவூர்
5 இராஜசாம்பாள்புரம் சத்திரம் - தாராசுரம்
6 சக்வாரம்பாள்புரம் சத்திரம் - அம்மாசத்திரம்
7 யமுனாம்பாள்புரம் சத்திரம் - நீடாமங்கலம்
8 சைதாம்பாள்புரம் சத்திரம் - சூரக்கோட்டை
9 இராசகுமராபாயி சத்திரம் - சூரக்கோட்டை
10 உமாபாயி சாகேப் சத்திரம் - மகாதேவப்பட்டணம்
11 மல்லியம் சத்திரம் - மல்லியம்
12 காசாங்குளம் சத்திரம் - பட்டுக்கோட்டை
13 மோகனாம்பாள்புரம் சத்திரம் - இராசாமடம்
14 சுலக்சணாம்பாள்புரம் சத்திரம் - அம்மணி சத்திரம்
15 திரௌபதாம்பாள்புரம் சத்திரம் - மணமேல்குடி
16 இராசகுமராம்பாள்புரம் சத்திரம் - மீமிசல்
17 பஞ்சநத மோகனாம்பாள் சத்திரம் - திருவையாறு
18 நடார் சத்திரம் - நடார்
19 இராமேசுவரம் சத்திரம் - இராமேசுவரம்
26 சேதுக்கரை சத்திரம் - தனுஷ்கோடி

இவ்விருபது சத்திரங்களுக்கும் 16 இனாம் கிராமங்களும், 11 சுரோத்திரியக் கிராமங்களும், 31 ஊர்களில் பல்வேறு இடங்களில் நிலங்களும் மானியமாக அளிக்கப் பெற்றிருந்தன. இவைகளின் மொத்தப் பரப்பு சுமார் 40,000 ஏக்கர்கள் ஆகும்.

கிழக்கிந்தியக் கம்பெனியினர் 1855இல் சோழநாடு முழுமையையும் தங்கள் பொறுப்பில் எடுத்துக்கொண்டபின் சிவாசி மன்னரின் மனைவியாகிய காமாட்சி யம்பா பாயிடம் அரண்மனை, அரண்மனையைச் சார்ந்த நிலங்கள், நகைகள், சரசுவதி மகால் நூலகம், கோயில்கள் இவைகளை ஒப்படைத்தபோது இந்தச் சத்திரங்களின் நிருவாகத்தை மட்டும் ஒப்படைக்கவில்லை. இவைகளின் பெரும் பரப்புக் கருதி ஆங்கில அரசு தன் பொறுப்பில் எடுத்துக்கொண்டது. பின்னர் இவை மாவட்டக் கழகப் பொறுப்பில் வந்தன. மாவட்டக் கழகம் கலைக்கப்பட்ட பின்னர்த் தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவரின் கீழ் இவை வந்து இப்போது அவரின்கீழ்த் தனி நிருவாக அமைப்பாக இயங்குகிறது.

இந்தச் சத்திரங்களில் மிகப் பெரியதும் சிறப்பு மிக்கதும் முத்தம்மாள்புரச் சத்திரம் ஆகும். இது தஞ்சையின் தெற்கே பட்டுக்கோட்டை செல்லும் பெருவழியில் 22 கி. மீ. தொலைவில் ஒரத்தநாட்டில் அமைந்துள்ளது.

சத்திரத்தின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள கருங்கல் சிற்பமும் உள்ளே அமைந்துள்ள செங்கல் சிற்பங்களும் மாடியில் அமைந்துள்ள மரச்சிற்பங்களும் அரிய நுட்பமான வேலைப்பாடுகளைக் கொண்டுள்ளன.[2]

இரண்டாம் சரபோசி மன்னர் (1798-1832) தம் அன்புநாயகி முத்தம்மாளின் நினைவாக 1800இல் கட்டிய சத்திரமே இதுவாகும். முத்தம்மாள் எனத் தமிழ்க் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்ட இப்பெயர் 'முக்தாம்பாள்' என மராத்தி, மோடி ஆவணங்களில் காணப்படுகிறது.

இச்சத்திரத்தின் தோற்றம் பற்றித் தஞ்சைப் பெரிய கோயிலில் பொறிக்கப் பட்டுள்ள கல்வெட்டில் பின்வருமாறு காணப்படுகிறது.[3]

> 'சரபோசி மகாராசா தனக்கு விவாகமாவதற்கு முன் எல்லாக் குணங்களும் பொருந்திய ஒரு ஸ்திரியை எடுத்துக்கொண்டு இருந்தார். அவளும் மகா ராஜாவின் மனத்திற்கிணங்க நடந்து வந்தாள். அவள் இரண்டு தடவை கர்ப்பந்தரித்துப் பிரசவித்து இரு குழந்தைகளும் இறந்து போயின. இரண்

---

2. காணற்கரிய சிற்ப, கட்டிடக் கலைக் களஞ்சியமான இந்தச் சத்திரத்தில் அரசு ஆண்கள் மேல்நிலைப் பள்ளி, அரசு பெண்கள் மேல்நிலைப் பள்ளி, மாணவர் தங்கும் விடுதி, கூட்டுறவு அங்காடி, சில தனியார் நிறுவனங்கள், பால்பண்ணை ஆகியன இன்று இயங்கி வருகின்றன.

3. *போன்ஸ்லே வம்ச சரித்திரம்*, ப. 136.

டாவது பிரசவ சமயத்தில் அந்த அம்மாளும் இறந்தபடியால் நற்குணங்களோடு கூடிய அவள் மரணம் அரசரின் சோகத்துக்குக் காரணமாயிற்று. ஆனால் அந்த அம்மாள் இறக்கும் தருவாயில் தன் பெயரால் ஒரு அன்ன சத்திரம் ஏற்படுத்த வேண்டுமென்று மகாராஜாவைக் கேட்டுக் கொண்டாள். மகாராஜாவும் அதற்கு இசைந்து சேதுவுக்குப் போகும் வழியில் உத்தமமானதும், யாத்திரீகர்களுக்கு மிகவும் உபயோகமுள்ளதுமான ஒரு சத்திரத்தையும், பக்கத்தில் ஒரு அக்கிரகாரத்தையும், ஒரு கோயிலையும், ஒரு சிங்காரவனம், குளம் இவைகளையும் கட்ட ஏற்பாடு செய்து அவ்விடத்திற்கு முக்தாம்பாள் புரம் என்று பெயரிட்டு அதை நன்றாய் நடத்துவதற்கான ஏற்பாடுகளையும் செய்து வைத்தார். இவைகளெல்லாம் அந்த அம்மாளின் சாசுவதமான ஞாபகச் சின்னங்களாக இருக்கின்றன.'

ஆனால் முத்தம்மாளைப் பற்றி ஆதாரமற்ற வேறு சில செய்திகளும் கூறப்படுகின்றன. மன்னர் சரபோசி முத்தம்மாளைத் திருமணம் செய்துகொள்ளாததால் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்துகொண்டார் என்றும், பெரும் புதையலை எடுக்க மன்னர் சரபோசியே முத்தம்மாளைப் பலி கொடுத்தார் என்றும் மக்கள் கூறும் செய்திகட்கு எவ்வித ஆதாரமும் இல்லை.

முத்தம்மாளுக்கு இரண்டாவது மகப்பேற்றில் குழந்தை இறந்தே பிறந்தது. அதனால் உடல் நலிவுற்ற அவர் ஒரு திங்கள் கழித்து இறந்தார். இறக்கும் தருவாயில் முத்தம்மாள் கருவுற்ற மகளிரையும், சிறு கைக் குழந்தைகளையும் தனிக் கவனத்துடன் தன் சத்திரத்தில் கவனிக்கச் சிறப்புடன் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சரபோசியைக் கேட்டுக்கொண்டாராம். அதற்கேற்ப 28—1—1801இல் இரண்டாம் சரபோசி ஆங்கிலேயரின் ஆட்சிப் பிரதிநிதிக்கு (ரெசிடெண்ட்) எழுதிய கடிதத்தில் கூறியுள்ளார்.[4] இவ்வாறே இதில் குறிப்பிட்ட கொடைகள் முத்தம்மாள் சத்திரத்தில் நடைபெற்று வந்தன.

சரபோசி மன்னர் 8—10—1805இல் ஆங்கில அரசு அனுமதியுடன் தென்னமநாடு, புதூர், கண்ணந்தங்குடி கிழக்கு, வன்னிப்பட்டு ஆகிய நான்கு கிராமங்களை முத்தம்மாள்புரம் சத்திரத்திற்குக் கொடையாக அளித்தார்.

இந்த நான்கு ஊர்கள் இல்லாமல் புதூர் கஸ்பா, மேலையூர், நெய்வாசல், தென்பாதி, உமையாள்புரம், குணாஞ்சேரி, நத்தமுடையான்சேரி, அளகுமலை,

4. 'Milk is provided for infants, pregnant women are entertained with kindness and if they happen to be delivered at the Chattaram, their expenses are defrayed. Medicines are given to them and they are permitted to remain in the Chattaram three months after their delivery'

நாடியம்மாள்புரம், பட்டுக்கோட்டை, ரங்கோசியப்பா தோட்டம், மகாராசா சமுத்திரம் ஆகிய இடங்களில் உள்ள சில நிலங்களும் இச்சத்திரத்திற்குக் கொடையாக அளிக்கப்பட்டன. முத்தம்மாள் சத்திரத்திற்கு மொத்தம் 8,875 ஏக்கர் 63 சென்ட் கொடையாக அளிக்கப்பட்டது. 1883இல் சத்திரத்திற்குக் கிடைத்த நிகர வருமானம் ரூபாய் 32,800 என்று கணக்கிடப்பட்டுள்ளது.

இச்சத்திரத்தில் அனைத்துவிதப் பயணிகட்கும் தங்குவதற்கேற்ற தனித்தனி அறைகள் இருந்தன. பூங்காவின் நடுவே ஐரோப்பியர்க்கெனத் தனி விடுதி கட்டப்பட்டிருந்தது. இராமேசுவரம் அல்லது சாளுவநாயக்கன் பட்டினம் செல்லும் அரசரும், அவர் குடும்பத்தினரும், அலுவலர்களும் இங்கே தங்கினர்.

கீழத்தோட்டம், மேலத்தோட்டம் என்பன அரசருக்குரிய சிங்கார வனங்களாகத் திகழ்ந்தன. 'சவுக்கண்டி' எனப்படும் வேலைப்பாடு மிகுந்த மண்டபம் இன்றும் மேலத் தோட்டத்தில் உள்ளது.

1—11—1869ஆம் நாளிட்ட ஆங்கில ஆட்சியினர் ஆணை 8121இன்படி இச்சத்திரத்தில் ஒரு மருத்துவமனையும், ஒரு பள்ளிக்கூடமும் நிறுவப்பெற்றன. பள்ளியோடு இணைந்த தங்கும் விடுதியில் 120 மாணவர்கள் தங்கியிருந்தனர்.

மாணவர்கட்குத் தினமும் இருவேளை உணவு வழங்கப்பட்டது. ஒரு மாணவனுக்கு ஒரு வேளைக்கு அளிக்கப்பட்ட உணவு விவரம் :

| | | |
|---|---|---|
| அரிசி | — | ½ படி |
| பருப்பு | — | 1/32 படி |
| மிளகாய் | — | 1/64 சேர் |
| புளி | — | 3/64 சேர் |
| உளுந்து | — | 1/320 படி |
| கொத்தமல்லி | — | 1/64 சேர் |
| மிளகு | — | 1/640 சேர் |
| கடுகு | — | 1/160 சேர் |
| வெந்தயம் | — | 1/800 சேர் |
| உப்பு | — | 1/64 படி |
| நெய் | — | 3/64 சேர் |
| நல்லெண்ணெய் | — | 1/64 சேர் |
| மஞ்சள் | — | 3/6400 சேர் |
| சுக்கு | — | 1/3200 சேர் |
| மோர் | — | 3/8 படி |
| விறகு | — | 2½ சேர் |

விடுதி மாணவர்கள் வாரம் இரண்டுமுறை நல்லெண்ணெய் தேய்த்துக் குளித்துக் கொள்ள வேண்டும். ஒரு குளியலுக்கு 3/16 சேர் நல்லெண்ணெயும் ½ பைசா அரப்பும் செலவிடப்பட்டது. பண்டிகை நாட்களில் பாயசம், புளி சாதம், வடை ஆகியன அளிக்கப்பட்டன.

இச்சத்திரத்தில் வழிப்பயணிகட்கும் தல யாத்ரீகாகளுக்கும் அவரவர் மரபுக் கேற்றபடி உணவு சமைத்தோ அல்லது பொருள்களாகவோ வழங்கப்பெற்றன. அவர் களும் ஒரு நாளைக்கு இரு வேளை உணவே பெற்றனர். ஒரு பயணிக்கு ஒரு வேளைக்கு அளிக்கப்பட்ட உணவுப் பொருள் விபரம் :

| | | |
|---|---|---|
| அரிசி | — | ¼ படி |
| பருப்பு | — | 1/32 படி |
| மிளகாய் | — | 1/64 சேர் |
| புளி | — | 3/64 சேர் |
| உளுந்து | — | 1/320 படி |
| கொத்தமல்லி | — | 1/640 சேர் |
| மிளகு | — | 1/640 சேர் |
| கடுகு | — | 1/640 சேர் |
| வெந்தயம் | — | 1/800 சேர் |
| உப்பு | — | 1/64 படி |
| நெய் | — | 3/128 சேர் |
| நல்லெண்ணெய் | — | 1/64 சேர் |
| மஞ்சள் | — | 3/3200 சேர் |
| சீரகம் | — | 3/6400 சேர் |
| சுக்கு | — | 1/3200 சேர் |
| பெருங்காயம் | — | 3/6400 சேர் |
| விறகு | — | 2½ சேர் |
| மோர் | — | ¼ படி |
| காய்கறி, இலை | — | 3 பைசா |
| வெற்றிலை | — | 4 |
| பாக்கு | — | ½ |

வடக்கேயிருந்து வரும் சமயத் துறவிகளான பைராகிகளுக்கு வழங்கப்பட்ட ஒருவேளை உணவுத் திட்டம் சற்றே மாறுபட்டிருந்தது. அவர்களுக்கு ஒரு வேளைக்கு அளிக்கப்பட்ட உணவுப் பொருள் விபரம் :

| | | |
|---|---|---|
| அசிரி | — | 3/8 படி |
| பருப்பு | — | 3/64 படி |
| மிளகாய் | — | 1/64 சேர் |

| | | |
|---|---|---|
| புளி | — | 1/16 சேர் |
| உப்பு | — | 3/128 படி |
| நெய் | — | 1/32 சேர் |
| நல்லெண்ணெய் | — | 1/64 சேர் |
| விறகு | — | 2½ சேர் |
| மோர் | — | ¼ படி |
| காய்கறி, இலை | — | 3 பைசா |

பைராகிகளுக்கு அரிசி நீங்கலாக ஒரு வேளை உணவு ஒருவருக்கு ஒரு அணாவிற்கு மேல் (ஆறு புதுக்காசுகள்) செலவாக்கக்கூடாது என விதிக்கப்பட்டிருந்தது. அப்போதைய பொருளாதார நிலையை இதன்மூலம் தெரிந்துகொள்ளலாம்.

முத்தம்மாள் சத்திரத்தில் காலை 9 மணிக்கு மேல் உணவுப் பொருளும், பகல் 12 மணிக்கு மணி அடிக்கப்பட்டு அன்னதானமும், அதன்பின் நடமாட இயலாதவர்களுக்கு வீதிதோறும் உணவு எடுத்துச்சென்றும் வழங்கப்பட்டு வந்தது.

முத்தம்மாள் சத்திர வருவாயிலிருந்து ஒரத்தநாடு காசி விசுவநாதர் கோயில் பூசையும், அய்யனார் கோயில், பிடாரி கோயில், சரசுவதிதேவி கோயில் ஆகிய கோயில்களின் பூசைகள் சிறப்புடன் நடைபெற்றன. காசி விசுவநாதர் கோயில் 5ஆம் நாள் திருவிழாவும் தேரோட்டமும் சத்திர வருவாயின் மூலம் செய்யப் பெற்றன. இக்காசி விசுவநாதர் கோயிலும் சரபோசி மன்னரால்தான் கட்டப் பட்டது.

இவை இல்லாமல் சத்திரத்தில் பல விழாக்களும், சிறப்பு நாட்களில் பூசைகளும் நடைபெற்றன. தேவ பூசை, களஞ்சியப் பிரவேசம், புத்தாண்டு விழா, அட்சயத் திரிதியை, விநாயக சதுர்த்தி, சரசுவதி பூசை, தீபாவளி, பிருந்தாவன பூசை, மார்கழி பூசை, சங்கராந்தி, பொங்கல், காமன் பண்டிகை, துவாதசி, ஏகாதசி, கார்த்திகை, பூசம், அமாவாசை, புராணங்கள் படித்தல் இவைகளுடன் முத்தம்மாள் நினைவு நாளும் இச்சத்திரத்தில் நடைபெற்றது.

முத்தம்மாள் சத்திரத்தில் ஊரில் உள்ள முதியோர்கள் உதவித் தொகை பெற்றனர். ஊர் ஏழைகட்கு உணவிடப்பட்டது. தகுதியுடைய ஆண்களும் பெண்களும் மானியம் பெற்றனர். இவை அரிசியாகவும் நெல்லாகவும் அளிக்கப் பெற்றது. 'உலுப்பை' அளித்தல் என்று இச்சொல் பெயர் பெற்றது. இவை பெரும்பாலும் அந்தணர்களுக்கே அளிக்கப்பெற்றன. மேலும் செலவுகட்காகப் பணமும் அளிக்கப்பட்டது.

கண்ணந்தகுடியில் நடைபெற்ற கிறித்தவப் பாதிரியார்களின் பள்ளி மாணவ, மாணவிகட்கும் இச்சத்திரத்திலிருந்து உணவு அளிக்கப்பட்டது. வழிப்

போக்கர்களுக்குச் சாதி மத வேறுபாடு இன்றி உணவு (அல்லது உணவுப் பொருள்) அளிக்கப்பட்டது. தேவையானவர்கட்கு உடுத்த உடையும் தரப்பட்டது.

அந்தணச் சிறுவர்கட்கு வேதம் கற்றுக்கொடுக்கப்பட்டது. அவர்கட்கு உபநயனம் செய்விக்கப்பெற்றது. திருமணம், திதி போன்ற சம்பவங்கட்கும் நிதி உதவி வழங்கப்பெற்றது.

தஞ்சையை ஆட்சிபுரிந்த நாயக்க மன்னர்களின் காலத்தில் இங்கு வந்த பல நாயக்கர் குடும்பத்தினர் மராட்டியர் ஆட்சிக் காலத்திலும் தொடர்ந்து உயர் பதவியில் இருந்தனர். அப்படிப்பட்ட தொன்மையான ஒரு கவர நாயுடு குடும்பத்தைச் சேர்ந்த சின்னண்ணா, பெரியண்ணா என்னும் இரு சகோதரர்கள் இரண்டாம் சரபோசி (1798-1832), சிவாசி (1832-1855) இருவர் காலத்திலும் அரண்மனையில் உயர்பதவி வகித்தனர். இவர்கள் சகோதரியே மேற்கூறிய முத்தம்மாள். இச் சகோதரர்கள் இருவரின் ஓவியங்கள் தஞ்சை நகரம் மானோசியப்பா தெருவில் உள்ள அண்ணா கல்யாண மண்டபத்தில் உள்ளன. முத்தம்மாள் ஓவியம் தஞ்சை அரண்மனையிலும் முத்தம்மாள் சத்திரத்திலும் உள்ளன.

இறக்கும் தருவாயில் முத்தம்மாள் சரபோசியிடம் 'நான் எப்பொழுதும் உங்கள் பரம்பரையை நலமுடன் காப்பாற்றுவேன்' என்று கூறினாராம். அதற்கேற்ப தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தினர் அனைவரும் தங்கள் வழிபடு கடவுளருள் ஒருவராகவே முத்தம்மாள் அவர்களை இன்றும் வழிபட்டு வருகின்றனர். எவருக்கேனும் உடல்நலக் குறைவு ஏற்பட்டால் முத்தம்மாளை வணங்கித் திருநீறு இட்டு நலம் பெறுவதாகக் கூறுகின்றனர்.

## 82. முத்தம்மாள் சத்திரக் கல்வெட்டு :

சாலிய வாகன சகம் 1747 (கி. பி. 1825) பார்த்திப ஆண்டு சவுபாக்கியவதி முத்தம்மாள்புரம் அன்னச் சத்திரம் தர்மத்துக்குக் கொடுத்த கொடையைக் குறிக்கும் கல்வெட்டு. கல்லின் கீழ்ப்பகுதி உடைந்துள்ளது.

முத்தம்மாள் சத்திரத்தில் உள்ள மாணவர் விடுதியின் பின்பக்கம் உள்ள அறையில் இத்துண்டுக்கல் கிடந்தது. இப்போது இக்கல்வெட்டு தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் வைக்கப்பட்டுள்ளது. இக்கல்லின் மறுபுறம் மராத்திமொழிக் கல்வெட்டு உள்ளது.

### கல்வெட்டு

1 *சாலிய வாக*
2 *ன செகம் 17*
3 *47 பாற்த்தி*

4 ப னாம ஸ[ம்]வ
5 ச்சரம் சவு
6 பாக்கியவதி மு
7 த்தம்மாள் பு
8 ரம் அன்ன ச
9 த்திரம் தற்மத்....

## 83. வன்னிப்பட்டு தெற்கு எல்லைக் கல்வெட்டு :

ஒரத்த நாட்டின் கிழக்கே உள்ள ஒக்கநாடு கீழையூரின் அருகேயுள்ள வன்னிப் பட்டு என்ற ஊர் முழுதும் 1805ஆம் ஆண்டு முத்தம்மாள் சத்திரத்திற்குக் கொடை யாக அளிக்கச் சரபோசிக்கு அனுமதி அளித்துள்ளமைக்கு ஆவணச் சான்று உள்ளது. ஆனால் இவ்வூர் 1825இல்தான் சரபோசியால் கொடையாக அளிக்கப் பெற்றதாக ஒக்கநாடு கீழையூர் அருகேயுள்ள இந்த வன்னிப்பட்டுத் தெற்கு எல்லைக் கல்வெட்டு மூலம் அறிகின்றோம். ஒக்கநாடு கீழையூரின் தெற்கே 2 கி. மீ. தொலைவில் தென் வடலாகச் செல்லும் சாலையின் மேற்புறம் நடப்பட்டுள்ள குத்துக் கல்லில் இக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. இதன் மறுபுறம் இதன் நகலாக மராத்திமொழிக் கல்வெட்டும் உள்ளது.

### கல்வெட்டு

1 சாலிய வா
2 கன செகம் 1
3 747 பா
4 ர்த்திவ னாம ஸ
5 வ்வச்சரம் ச
6 வுபாக்கியவ
7 தி முத்தம்மாள்
8 புரம் அன்ன ச
9 த்திரம் தற்மத்து
10 சேந்த சறுவ ம
11 ானியம் வன்னி
12 பட்டு தென்பா
13 ர்க்கு யெல்லை

## 84. வன்னிப்பட்டு வடக்கு எல்லைக் கல்வெட்டு :

ஒக்கநாடு கீழையூரில் அம்பலவாண சுவாமி கோயிலில் அம்மன் கோயில் கரு வறையினுள் தரையில் பாவுகல்லில் இக்கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது.

முத்தம்மாள் சத்திரக் கொடை ஊரான வன்னிப்பட்டு வடக்கு எல்லையைக் குறிக்கும் இக்கல்வெட்டு எப்படியோ இங்கு வந்துவிட்டது.

### கல்வெட்டு

1 சாலிய வா
2 கன செகம் 1
3 747 பா
4 த்திப னாம
5 ஸம்வச்சர
6 ம் சவுபாக்கி
7 யவதி முத்தம்
8 மாள்புரம் அ
9 ன்ன சத்திரம்
10 தற்மத்து சேந்
11 த சறுவமானி
12 யம் வன்னி
13 பட்டு வட
14 பாற்க்கு யெ
15 ல்லை

## 85. முத்தம்மாள் சத்திர மரப் பொறிப்பு :

முத்தம்மாள் சத்திரத்தில் அரசினர் ஆண்கள் மேல்நிலைப்பள்ளி இயங்கும் பகுதியில் மேல் மாடியின் வடமேற்குப் பகுதியில் தலைமையாசிரியர் அறையின் மேற் புறம் உள்ள மர உத்தரம் ஒன்றில் இப்பொறிப்புக்கள் உள்ளன.

1872ஆம் ஆண்டு அப்பகுதியான இராமசாமி மகால் பழுது பார்க்கப்பட்ட செய்தி இம்மரத்தில் செதுக்கப்பட்டுள்ளது.

தஞ்சைக் கலெக்டர் கேட்டல்துரை அவர்கள் உத்தரவுப்படி பழுது பார்க்கப் பட்டதாகவும், சத்திரம் இலாக்கா சூப்பரின்டென்ட் சீத்தாராம பிள்ளை, மேனேஜர் மாதவ ராவ், அக்கவுண்டென்ட் ரகுநாத ராவ், மேஸ்திரி தர்மலிங்கம் பிள்ளை ஆகிய அனைவரும் சேர்ந்து இப்பணியை முடித்ததாகவும் கூறப்பட்டுள்ளது. சத்திரம் மேல் மாடியைப் பழுது பார்த்தவர் அப்பாவு ஆசாரி என்றும் அம்மரத்தில் செதுக்கப் பட்டுள்ளது.

மேலே கண்ட சரபோசி காலத்துக் கல்வெட்டுக்கள் ஒரு சில பிழைகளுடன் மட்டுமே காணப்பட்டன. ஆனால் வழக்கத்துக்கு மாறாகக் கல்லில் இல்லாமல்

மரத்தில் பழக்கமில்லாதவர் இந்தச் செய்தியைச் செதுக்கிய காரணத்தால் வழக்குச் சொற்கள் கலந்து பிழைகளும் மிகுதியாக உள்ளன.

### கல்வெட்டு

*1 1872 ஆ அகுட்டோபர் மீ 3 உ முத்தாம்பாள்புறம் சத்திரம் மேல் மா*

*2 டி வடபிறம் றாமசுவாமீ மால் றீபோறாகி முடிந்து மகா ஸ்ரீ ஸ்ரீ கலேக்ட்டர் கேட்டல் துறை அவர்கள் உத்தறவு*

*3 படி சத்திறம் யிலாக்கா சுப்பிறண்டாண்டு மகா ஸ்ரீ சீத்தாறாம பிள்ளை அவாளுமிருந்து உத்திறவு கோடுத்தபடி மானேஜர் மாதவ றாயர்*

*4 நீ மு அக்கவுண்டாண்டு றேகுநாத றாவும் சத்தி[ர] யிலாக்கா மேஸ்த்திறி தற்மலிங்க பிள்ளை யிவாளிருந்து அப்பாவு ஆசாறியை வயிகோண்டு வேலை முடிக்கப்பட்[ட]து.*

## 86. சரபோசி மராத்திக் கல்வெட்டு :

சிறப்பு மிக்க இச்சத்திரத்தின் நுழைவாயிலின் மேல் விதான முகப்பில் மராத்தி மொழியில் நீண்ட மூன்று வரிகளாக இரண்டாம் சரபோசி மன்னரின் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

1801இல் இச்சத்திரம் கட்டி முடிக்கப்பட்டதாகவும், இங்குச் சிவன்கோயில், விட்டுனுக்கோயில் ஆகியவைகளையும் இவர் கட்டினார் என்ற செய்தியும் இக் கல்வெட்டில் கூறப்படுகிறது. நாள் 16—1—1802.

சத்திரத்தைச் 'சரபோசி ராசா சாயப் அவர்கள் தன்னுடைய நாயகி சௌபாக்கியவதி முக்தாபாய் அம்மாள் அவர்களுடைய பெயரினால்' கட்டினார் என்று எழுதப்பெற்றுள்ளது. முத்தம்மாள் என்ற பெயர் 'முக்தாபாய்' என்று மராத்திச் சாயலில் எழுதப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டின் மூலம் சரபோசி தனக்கென்று சில புகழ் மொழிகளை மெய்க் கீர்த்தி போல அமைக்க விரும்பினார் என்று தெரிகிறது. இவரின் தொடக்ககால மோடி ஆவணங்களிலும் இதுபோன்ற புகழ் மொழிகள் காணப்படுகின்றன என்று பேராசிரியர் கே. எம். வேங்கடராமையா அவர்கள் கருதுகிறார்கள். பின் காலப் போக்கில் நாடு முழுவதும் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கு அளிக்கப்பட்டு சரபோசி 'கோட்டைசூழ் மன்னர்' ஆனபின் இப்புகழ்மொழியாகிய பட்டம் கை விடப்பட்டது போலும்.

---

1. பேராசிரியர் ஆர். ராமசேஷன், *'ஒரத்தநாடு அரசினர் கல்வியியல் கல்லூரி மலர்'* (1977 - 78) பக். 17.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*1 ஸ்ரீமத் போசள வம்சத்தில் மிகவும் சிறப்புப் பொருந்தியவரும், இந்து அரசர்களில் மிகவும் உயர்ந்தவரும், ஸ்ரீமத் சிவபெருமானின் அருளால் பிறந்த மகாவீர புருஷராகியவரும், டில்லி பாதுஷாவுக்கு நாலில் ஒரு பங்கு கப்பம் கட்டியவரும், சுதந்திரமான எதிரியே இல்லாத டில்லி ஏகாதிபத்தியச் சக்கரவர்த்தி சார்வபூம பூபாலகனான அரசர் குலங்களுக்கெல்லாம் மேற்பட்டவரும், சோழவள நாட்டு அரசருமாகிய தஞ்சாவூர் அரசரான ஸ்ரீமந்த மகாராசா சத்திரபதி*

*2 சரபோசி ராசா சாயப் அவர்கள் தன்னுடைய நாயகி சௌபாக்கியவதி முக்தாபாய் அம்மாள் அவர்களுடைய பெயரினால் இராமேசுவரம் செல்லும் வழியில் தஞ்சாவூரைச் சேர்ந்த பட்டுக்கோட்டை முதலிய பல இடங்களில் அன்ன சத்திரங்களையும் மேலும் அக்கிரகாரங்களையும் சிவன்கோயில்*

*3 விட்டுணு கோயில் முதலியவைகள் அடங்கிய தருமங்களை மிகுதியாக நிறுவினார். சாலிவாகன சகம் 1723ஆம் ஆண்டு துன்மதி வருடம் புஷ்ய வளர்பிறை திரயோதசி சனிக்கிழமை தைத்திங்கள் 5ஆம் தேதி இப்பணி நிறைவேறியது.*

## 87. யாகசாலைக் கல்வெட்டு - அ :

தஞ்சை மாவட்டம் ஒரத்தநாட்டில் உள்ள நடைக்குளத்தின் மேல் கரையில் அனுமார் கோயில் அருகே வயலில் இக்கல்வெட்டு இருந்ததாகக் கூறப்படுகிறது. ஆனால் இன்று கல்வெட்டு பொறித்த கல் காணப்படவில்லை. மைய அரசினர் எடுத்த படியைக் கொண்டும், ஒரத்தநாடு முத்தம்மாள் சத்திரத்தில் வைத்துள்ள மொழிபெயர்ப்பைக் கொண்டும் இக்கல்வெட்டு இங்கு வெளியிடப் பெறுகிறது.

சரபோசி மன்னர் 1809ஆம் ஆண்டு ஒரத்தநாட்டில் ஊரின் கிழக்கிலும் மேற்கிலும் உள்ள குளத்தின் கரைகளில் இரண்டு யாகங்கள் செய்தார்.

ஊருக்கு மேற்கே அரசினர் பெண்கள் மேல்நிலைப்பள்ளி எல்லைக்குள் யாகத்தின்போது கட்டப்பெற்ற 'கருட வியூகம்' என்ற கட்டிட அமைப்பு அப்படியே இன்னும் அழியாமல் உள்ளது. ஆனால் கல்வெட்டு உள்ள கல் காணப்படவில்லை.

ஊருக்குக் கிழக்கேயுள்ள குளத்தின் வடகரையில் கட்டப்பட்ட யாகக் கட்டிடம் இடிக்கப்பட்டு அருகில் இருந்த கல்வெட்டுக் கல்லும் அப்புறப்படுத்தப்பட்டு ஒரு சாக்கடையினுள் கிடந்தது. அந்த மராத்திமொழிக் கல்வெட்டு உள்ள கல் தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்கு எடுத்து வரப்பெற்றது.

மேற்கண்ட யாகத்துக்கான பணிகள் சுக்கில ஆண்டு மாசி மாதம் 14ஆம் நாள் முதல், பங்குனி 14ஆம் நாள் முடிய ஒரு மாதம் நடைபெற்றுள்ளது.

அக்னிஷ்டோம யாகம், அதிராத்ர யாகம் ஆகிய யாகங்கள் முறையே சாம வேதி அப்பாசாமி தீட்சிதர், இருக்குவேதி சுப்பிரமணிய தீட்சிதர் ஆகியோரைக் கொண்டு செய்யப்பட்டன.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்ரீசரபோசி மகாராசா இந்த இடத்தில் அப்பாசுவாமி அத்வாரி என்பவர் சோம யாகத்தையும், சுப்பிரமணிய அத்வாரி என்பவர் அதிராத்ர யாகத்தைச் சயன பூர்வத்துடனும் செய்யும்படி உதவி புரிந்தார்கள்.*

*ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1731ல் சுக்கில வருடம் மாசி மாதம் 14ஆம் தேதி திங்கட்கிழமை முதல் பங்குனி மாதம் வளர்பிறை 14ஆம் தேதி திங்கட்கிழமை முடிய ஸ்ரீமான் சத்திரபதி ராசஸ்ரீ சரபோசி மகாராசா அவர்கள் முக்தாம்பாள்புரம் கிராமத்தில் ஒரு யாகசாலைக் கட்டிடம் கட்டும்படி செய்தார்கள். மேற்படி இடத்துக்குச் சாமவேதி அப்பாசுவாமி தீட்சிதர் வந்து அக்னிஷ்டோம யாகத்தை அதனபூர்வத்துடன் அவருடைய யாகசாலையில் செய்துவிட்டு இருக்குவேதி சுப்பிரமணிய சடா வல்லபரை முக்கியமான யாகம் நடத்தப்பட வேண்டிய இடத்தில் கற்கள் சேகரித்து ஒரு கட்டிடம் கட்டிக் கொண்டு பிரதிபாதி அதிராத்ர யாகத்தை அதனபூர்வத்துடனும் சயன பூர்வத்துடனும் செய்யும்படி செய்வித்தார். மேற்படி யாகம் மேற்கண்ட விதமாக நடந்தேறியது.*

## 88. யாகசாலைக் கல்வெட்டு - கல்வெட்டின் மொழிபெயர்ப்பு ஆ :

*சரபோசி மன்னர் ஆணைப்படி முக்தாம்பாள்புரத்தில் சித்தப்பா தீட்சிதரால் சோம யாகமும் சேச சடாவல்லபரால் அதே இடத்தில் சோம யாகமும் வேங்கடேச மகி என்பவரால் அக்னிசயன பூர்வமான அதிராத்திரமும் செய்யப்பட்டது.*

*ஸ்வஸ்திஸ்ரீ நிருப சாலிவாகன சகம் 1731 சுக்கில வருடம் மாசிமாதம் கிருட்டிண பட்சம் 14ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமையிலிருந்து பங்குனி மாதம் சுக்கில பட்சம் 14ஆம் தேதி திங்கட்கிழமை வரையில் ஸ்ரீமான் சத்திரபதி ராசஸ்ரீ சரபோசி மகாராசா அவர்கள் முக்தாம்பாள்புரத்தில் யாகசாலை கட்டிச் சித்தப்பா தீட்சிதர் அவர்கள் மூலமாக சங்கல்பம் செய்து ஆதான பூர்வமாக அக்னிஷ்டோமம் என்கிற யாகத்தைச் செய்து அதே சாலையில் சேச சடா*

வல்லப யஜுர்வேதி அவர்கள் மூலமாக சங்கல்பம் செய்து கொண்டபடி அக்னிஷ்டோம யாகத்தைச் செய்து அதே சாலையில் மிருத்தியுஞ்ஜய யாகத்தையும் வாஜபேயன் அவர்களுடைய மகன் வேங்கடேச தீட்சிதர் மூலமாக சயனபூர்வமாக முதல் இரவிலிருந்து யாகம் செய்வித்தார்.[1]

1. *A. R. E.* No. 166, 167, of 1911.

# 89. பட்டுக்கோட்டைக் கல்வெட்டு

பட்டுக்கோட்டைத்தாலூக்காஅலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ள ஒரு கல்லில் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.[1]

மதுரை நாயக்க மன்னர் மூன்றாம் முத்து வீரப்ப நாயக்கருக்கு (1682-1689) எதிர்ப்பாகத் தஞ்சை மராட்டிய மன்னர் ஏகோசியுடன் (1676-1684) இராமநாத புரம் மன்னர் இரண்டாம் இரகுநாதத் தேவர் என்னும் கிழவன் சேதுபதி (1674-1710) கூட்டு ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டிருந்தார்.

அந்த ஒப்பந்தத்தை ஏகோசியின் பின் ஆட்சிக்கு வந்த தஞ்சையின் இரண்டாம் மராட்டிய அரசர் சாசியும் (1684-1711) மதித்து நடந்துகொண்டார். அதனால் மதுரை நாயக்க மன்னர் சேதுபதிமீது எடுத்த படையெடுப்பில் சேதுபதிக்கு ஆதர வாகச் சாசியின் படை சென்று போரிட்டது ; வெற்றியும் பெற்றது.

தஞ்சை மராட்டியப் படையின் இந்த வெற்றியையும், இந்த வெற்றியின் பொருட்டுச் செய்துகொண்ட ஒப்பந்தப்படி பாம்பாற்றுக்கும் பட்டுக்கோட்டைக்கும் இடைப்பட்ட பகுதிகள் முழுவதும் தஞ்சை மராட்டியருக்குக் கிடைத்த அரிய செய்தி யும், மராட்டியப் படைத்தளபதி கங்காதர பண்டிதர் மகன் பாவாசி பண்டிதர் என்பவர் பட்டுக்கோட்டையில் கல்லினால் கோட்டை கட்டித் தன் வெற்றிச் சிறப்பை 18—7—1685 அன்று வெளிப்படுத்திக் காட்டியமையும் இந்தக் கல்வெட் டில் காணப்படுகின்றன.

கங்காதர பண்டிதர், சாசி மன்னரின் 'காரியத்துக்குக் கர்த்தர்' என்று குறிக்கப் படுகின்றார். இந்தக் கங்காதர பண்டிதர் பெயர் கோயில்வெண்ணிக்கு இடப்பட்டு, அவ்வூர் 'பாவாசி கங்காதரபுரம்' என்று அழைக்கப்பட்டதாகத் தீபாம்பாள்புரச் செப்பேடு கூறுகிறது.

---

1. *A. R. E.* No. 341 of 1925.

## கல்வெட்டு

1 உ சொஸ்திஸ்ரீ சாலிவாகன சகாத்தம் 1606 இதன் மேல்ச்
2 செல்லாநின்ற குறோதன ௵ ஆடி மாதம் 18உ சாசி
3 மகாராசா சாயபூ அவர்கள் காரியத்துக்குக்
4 கத்தரான ராயஸ்ரீ கெங்காதர பண்டிதரய்ய
5 னவர்கள் குமாரராய ஸ்ரீவாவாசி பண்டிதரய்யன
6 வர்கள் பட்டுகோட்டை சீர்மை கள்ளபதது தெற்கு பாம்
7 பனாறு எல்லை மட்டும் திருபுனவாசல் அறந்தாங்கி கடை
8 நிலைக் கோட்டை இது முதலான தலமெல்லாம் செயம் ப
9 ண்ணீ கொண்டு பட்டுக்கோட்டையை தலமென்று குறித்து
10 கல்க்கோட்டை கட்டி கீர்த்தி பெத்தார் இந்த சிலா லிகித
11 மான கீர்த்தி சகல செனங்களும் அறியவும் உ

# 90. சாளுவ நாயக்கன்பட்டினம் மனோராக் கல்வெட்டு

சோழநாட்டுத் துறைமுக நகர்களுள் சாளுவ நாயக்கன் பட்டினமும் ஒன்று. விசயநகரப் பேரரசர் கிருட்டிண தேவராயரின்கீழ்த் தமிழ் நாட்டில் அரசப் பிரதிநிதி யாக இருந்த 'சாளுவ நாயக்கர்' என்பவர் பெயரால் இவ்வூர்க்குப் பெயர் ஏற் பட்டது. இங்கு இயற்கையாகவே கடல் சற்றுக் கரையில் உள்வளைந்து பிள்ளை யாரின் வயிறு போலக் காட்சி அளிப்பதால் இப்பகுதிக் கடலுக்குப் 'பிள்ளையார் குடா' என்று பெயர் வழங்குகிறது.

மராட்டிய அரசர்கள் காலத்தில் சாளுவ நாயக்கன் பட்டினம் மிகச் சிறப்புடன் முக்கியம் வாய்ந்ததோர் இடமாக விளங்கிற்று. அப்பகுதியில் மரங்களும் கயிறும் எளிமையாகக் கிடைத்ததால் பெரிய பாய்மரக் கப்பல்களும், சிறிய கப்பல்களும், படகுகளும் அங்குக் கட்டப்பெற்றன ; பழைய கப்பல்களும் பழுது பார்க்கப்பட்டன. சாளுவ நாயக்கன் பட்டினத்திலிருந்து கடற்கரையோரத்தில் உள்ள நாகை, மீமிசல், கோடிக்கரை போன்ற துறைமுக நகர்களுக்கும், இலங்கை, மலேசியா உட்பட அண்மையில் உள்ள வெளிநாடுகட்கும் கப்பல்கள் அடிக்கடி சென்று வந்தன. இலங்கைக்கு இங்கிருந்து நெல்லும் அரிசியும் ஏற்றுமதியாயின.

மராட்டிய அரசுக்குச் சொந்தமான கப்பல்களுடன் தனியார் கப்பல்களும் அங்கு வந்து சென்றன. மராட்டிய அரசுக்குச் சொந்தமான இரு பெரிய பாய்மரக் கப்பல்கள் 'பிரகதீசுவர பிரசாத்', 'திருவருள் பிரசாத்' என்று பெயர் பெற்று விளங் கின. அக்கப்பல்கள் 'பலமானதாகவும் லட்சணமுள்ளதாகவும்' இருந்தன.

1838இல் பிரகதீசுவர பிரசாத் என்ற பெரிய பாய்மரக் கப்பலை ஜேம்ஸ் ரோஸ் என்ற ஆங்கிலேயர் ஆண்டுக்கு 6000 ரூபாய் பத்தா கூலியாக (வாடகையாக) 7 ஆண்டுகள் பெற்றார்.

சாளுவ நாயக்கன் பட்டினத்தில் மராட்டிய அரசர்களின் நிருவாக அலுவலகம் இருந்தது. கில்லேதார், மத்தியஸ்தர், காரியஸ்தர், பவுசுதார் போன்ற அதிகாரிகள் பலர் அங்கு இருந்தனர்.

சாளுவ நாயக்கன் பட்டினப் பகுதி நீர்வளம், நில்வளம் மிக்கது. பாப்பான் கண்ணியாறு என்ற சிற்றாறு அங்குக் கடலில் கலக்கிறது. சின்ன ஏரி, பெரிய ஏரி, வண்ணான் குளம், குளம்பரச்சேரிக் குளம், பிள்ளையார் குளம், ஆவுடையான் குளம், சம்பன் குளம், மாரியம்மன் குளம் என்பவை அங்குள்ள நீர் நிலைகளாகும்.

பிரதாபசிங் காலம்முதல் (1739-1763) மராட்டியர் ஆங்கிலேயருடன் நெருங்கிய நட்புக் கொண்டிருந்ததால் பிரெஞ்சுக்காரரைப் பகைத்துக் கொண்டனர். ஆகவே ஐரோப்பியப் போரில் நெப்போலியன் போனபார்ட் தோற்கடிக்கப்பட்டது மராட்டியருக்குப் பெருமகிழ்ச்சியைக் கொடுத்தது. 15–8–1769இல் கார்சிகா தீவில் ஒரு நடுத்தரக் குடும்பத்தில் பிறந்து, அஞ்சா நெஞ்சத்தாலும் 'ஆற்றல்மிகு துணிவாலும் வீரத்தின் விளைநிலமாகத் திகழ்ந்து, படை வீரராக, படைத் தலைவராக, முதல் அமைச்சராக உயர்ந்து 1804ஆம் ஆண்டு பிரான்சு நாட்டின் மன்னராக முடி சூடியவர் நெப்போலியன் போனபார்ட்.

தன் படை வலிமையால் ஐரோப்பாவையே கலங்க வைத்த நெப்போலியன் மீது உருசியா, பிரசியா, ஆஸ்திரியா ஆகிய நாடுகளும், இங்கிலாந்தும் எதிர்த்துப் போர் புரிந்தன. வெற்றிப் படிகளிலே விரைந்தேறிய நெப்போலியன் 1813இல் நடைபெற்ற சில போர் முனைகளில் பெரிய தோல்வியை அடைந்தார். 1814 தொடக்கத்தில் பாரிசு நகரையும் இழந்தார். 1815இல் இறுதியாக வாட்டர்லூ என்னுமிடத்தில் தோல்வியைத் தழுவினார். ஆங்கிலேயரின் இந்த வெற்றியை ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியினர் இந்தியாவிலும் கொண்டாடினர்.

ஆங்கிலேயருடைய வெற்றியையும், நெப்போலியனின் தோல்வியையும் கண்டு மகிழ்ந்தார் ஆங்கிலேயரின் நண்பரான மன்னர் இரண்டாம் சரபோசி. இந்த வரலாற்று நிகழ்ச்சிக்கு ஒரு நிரந்தரமான நினைவுச் சின்னம் ஒன்றைச் சாளுவ நாயக்கன் பட்டினத்தில் சரபோசி உருவாக்கினார். அதுவே 'மனோரா' எனப்படும் உப்பரிகைக் கட்டிடம். 'மினாரட்' என்ற சொல்லிலிருந்து இச்சொல் பிறந்தது.

வட்ட வடிவமான அகழியின்உள் கற்கோட்டையும், அதற்குச் செல்ல இரு வழிகளும், மேற்கு நோக்கிய ஒரு வாயிலும் மனோராவில் உள்ளன. வாயிலில் கோட்டையின் உள்ளிருந்து இயக்கக்கூடிய வகையில் கனமான பெரிய பாலம் முன்பு இருந்தது. கோட்டையின் உட்பக்கம் துப்பாக்கி வைக்கும் தளங்கள், போர்க்கருவி, வெடிமருந்து சேமிக்கும் இடங்கள், வீரர்கள் காவலின் பொருட்டுத் தங்கும் இடங்கள் ஆகியவையும் உள்ளன.

கோட்டையின் நடுவே எட்டுப் பட்டை கொண்ட உப்பரிகை ஒன்று ஓங்கி உயர்ந்து திகழ்கிறது. அதன்கீழ் அரச குடும்பத்தினர் தங்கும் பாதுகாப்பான மாளிகை உள்ளது. உப்பரிகையின் மேல் செல்லக் கிழக்கு, தெற்குப் பக்கமிருந்து அகன்ற படிக்கட்டுக்கள் இரண்டாம் தளம்வரை உள்ளன. அங்கிருந்து சிறிது மர ஏணியில் ஏறிப் பின்னர் வளைந்து செல்லும் குறுகிய படிகள் மூலம் உச்சியை அடையலாம். உப்பரிகை, ஏணிப்படிவரை 11 மீட்டரும், அதற்குமேல் உச்சிவரை 27 மீட்டரும் உயரம் உள்ளது. மொகலாயக் கலைப்பாணியில் அமைந்த இந்த உப்பரிகை சரபோசி மன்னரின் புகழ் பாடி வானை நோக்கி உயர்ந்துள்ளது. நீலக் கடல் ஓரம் நீண்டு நிற்கும் இந்த உப்பரிகை தஞ்சை மராட்டியரின் கலைச் சின்னமாக இன்றும் கம்பீரமாகக் காட்சியளிக்கிறது. சிலகாலம் முன்வரை இந்த உப்பரிகை கலங்கரை விளக்காகவும் பயன்பட்டுள்ளது.

மராட்டியர் ஆட்சிக்காலத்தில் இங்கு இராணுவப் பயிற்சி நடைபெற்றுள்ளது. 1958ஆம் ஆண்டு இங்கு வெட்டப்பட்ட குழி ஒன்றில் சுமார் 2000 இரும்புக் குண்டுகள் கிடைத்தன.

மனோராக் கோட்டையும் உப்பரிகையும் கட்டப்பட்ட பின்னர் சாளுவ நாயக்கன் பட்டினம் சரபோசி பெயரால் சரபேந்திரராசன் பட்டணம் என்று அழைக்கப்பட்டது. சில ஆவணங்களில் சரபேந்திரராச புரம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இப்பொழுது மனோரா தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் பாதுகாப்பில் உள்ளது.

1814இல் சரபோசி மன்னர் இதைக் கட்டிய செய்தியை விளக்கி தமிழ், ஆங்கிலம், மராத்தி, தெலுங்கு, உருது ஆகிய ஐந்து மொழிகளில் கல்வெட்டுக்கள் வெட்டிச் சுவரில் வெவ்வேறு இடங்களில் பதித்துள்ளார்.[1]

### கல்வெட்டு - அ :

1 இங்கிலீசு சாதியார் தங்கள் ஆயுதங்களி
2 னாலடைந்த செய சந்தோஷங்களை
3 யும் போனபாற்தேயின் தாழ்த்தப் படு
4 தலையும் நினைவு கூரத் தக்கதாக இங்கி
5 லீசு துரைத்தனத்தின் சினேகிதரும் படை
6 த் துணைவருமாகிய தஞ்சாவூர் சீர்மை
7 மகாராசா சத்திரபதி சரபோசி மகாரா
8 சா அவர்கள் இந்த உப்பரிகையைக்
9 கட்டி வைத்தார்கள் சகம் 1736

1. *A.R.E.* No. 343 a-e of 1925;
நடன காசி நாதன், *மனோரா*, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, 53. சென்னை (1979). பக் 7.

கல்வெட்டு - ஆ:

HIS HIGHNESS
MAHARAJAH SIRFOJEE RAJAH OF TANJORE
THE FRIEND AND ALLY OF THE BRITISH
GOVERNMENT
TO COMMEMORATE THE TRIUMPHS
ERECTED THIS COLUMN
OF BRITISH ARMS
AND THE DOWNFALL OF
BONAPARTE
1814.

# 91. கீழ்க்கோயில்பட்டு பூலோகநாதர் கோயில் கல்வெட்டு

இக்கல்வெட்டு இறைவன் சன்னிதி மகாமண்டப நிலையில் பொறிக்கப் பட்டுள்ளது.[1] இதே கல்வெட்டின் நகல் அம்மன் கோயில் நிலையிலும் பொறிக்கப் பட்டுள்ளது. அது மிகவும் சிதைந்து காணப்படுகிறது.

தஞ்சாவூர் மாவட்டம், வலங்கைமான் வட்டம் அம்மாப்பேட்டையின் வட மேற்கில் - தீபாம்பாள்புரம் செல்லும் வழியில் உள்ள சிற்றூர் கீழ்க்கோயில்பட்டு. அவ்வூர்க் குளத்தின் வடபால் மேற்கு நோக்கிய சன்னிதியாக உள்ள சிவாலயம் பூலோகநாதர் கோயில்.

இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், திருச்சுற்றுக் கோபுரம் ஆகியவைகளைப் புதிதாகக் கட்டிப் பரிவார தெய்வங்களையும் எழுந்தருளச் செய்தவர் தலைக்குடை மகாரிசி கோத்திரத்தைச் சேர்ந்த குருநாத செட்டியார் மகன் செவத்து செட்டியார் என்று இக்கல்வெட்டுக் குறிக்கிறது.

இத்திருப்பணி நடைபெற்ற காலம் தஞ்சை மராட்டிய மன்னர் துக்கோசியின் (1729-1735) ஆட்சிக் காலம் ஆகிய 1734ஆம் ஆண்டாகும். நாள் ஆகஸ்டு 30.

## கல்வெட்டு

1 *ஸ்வஸ்திஸ்ரீ*
2 *சாலிவா*
3 *கந சகாப்த*
4 *ம் 16*
5 *56*

1. *A. R. E.* No. 310 of 1965-66.

6 கலி ஆப்
7 த்தம் 4
8 835
9 இதுமேற்
10 செல்லா
11 நின்ற ஆ
12 னந்த ஸு
13 ஆவணி
14 மீ 29 உ
15 பூற்வ பக்ஷ
16 துவாதசி [யும்]
17 சுக்குற வ
18 ாரமும் கூடி
19 டின சிங்க
20 லெக்கினத்
21 திலெ துக்
22 கோசி ம
23 காராச சாயபு
24 அவர்கள் ரா
25 ச்சிய பாரம் ப
26 ண்ணுகுற
27 னாளையில் த
28 லைக் குடை
29 மகாரிஷி
30 கோத்திறத்தி
31 ல் குருனாத
32 செட்டியார்
33 குமாரன்
34 செவத்து
35 செட்டியார்
36 அவர்கள்
37 ஸ்ரீபூமிபுர
38 த்தில் ஸ்ரீபூமி
39 னாதருக்கும்
40 பூலோக னா
41 யகி அம்ம
42 னுக்கும் இ

43 வர்களுக்கு தி
44 ருப்பணி கெ
45 ற்பக் கிறகம் அ
46 ர்த்த மண்டபம்
47 மகா மண்பம்
48 நிர்த்த மண்டப
49 ம் பிறாகார ே
50 காபுரம் பரிவ
51 ார தேவதை
52 யள் சகலமும் உ
53 ண்டு பண்ணி பிற
54 திஷ்டை உள்பட
55 பண்ணின தர்ம
56 ம்

# 92, 93. பட்டிக்குடிக் கல்வெட்டுக்கள்

## 92 காளிகோயில் கல்வெட்டு :

தஞ்சை மாவட்டம் பாபநாசம் வட்டம் பட்டிக்குடி காளி கோயிலில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

தஞ்சை மராட்டிய மன்னர் முதலாம் சரபோசி (1711-1729) காலத்தில் இங்குள்ள காளி கோவிலுக்குக் கொடையாக நிலம் அளிக்கப்பட்ட செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது நாள் 10—1—1727.

இக்கல்வெட்டின் பெரும் பகுதி அழிந்துவிட்டதால் கொடை பற்றிய விவரங்கள் ஒன்றும் தெரியவில்லை.

### கல்வெட்டு

1 பறாபவ ஸுடு தை மாதம்
2 12 உ ராயஷ்த்திறி சற
3 போசி மகாராசா ... ராயி
4 சீதாபு ரா அய்............குமார
5 ன்முத....... ........................
6 பட்டிகுடி ..................செ
7 த்தெ............. ............எல்
8 லன்................. ..........
9 முன்.............................
10 னிட்ட......................பம்
11 ளருத.........................
12 தம்ப......................கெ

---

1. *A. R. E.* No. 230 of 1973-74.

13 ங்கை[க்கரையில்].......
14 காராம்ப[சுவை கொண்]ண
15 தோச[த்தில் போகக் க]டவா
16 ளாக....................................உ

## 93. குமரன்கோயில் கல்வெட்டு :

தஞ்சை மாவட்டம், பாபநாசம் வட்டம் பட்டிக்குடியை அடுத்துள்ள கோவிந்த நாட்டுச்சேரி என்னும் பகுதியில் உள்ள முருகன் கோயிலுக்கு அருகே நடப்பட்டுள்ள கல்லில் இக்கல்வெட்டு உள்ளது.[2] இக்கல்வெட்டில் காலம் தவறாக உள்ளது.

தஞ்சை மராட்டிய மன்னர் சாசி (1684-1711) ஆட்சிக்காலத்தில் அவருடைய அலுவலர் ஒருவர் பட்டிக்குடி முருகன் கோயிலுக்குப் பூசையின் பொருட்டு 12 அடிக் கோலால் அளந்து 500 குழி நிலம் கொடையாக அளித்த செய்தி இக்கல்வெட்டின் மூலம் பெறப்படுகிறது. இந்த நிலத்துடன் ஒரு தோப்பும் அளிக்கப்பட்டது.

### கல்வெட்டு

1 உ சகாத்தம்
2 1626 க்கு
3 மேல் செல்லா
4 நின்ற கொல்லம்
5 விரோதி ஷு ஆனி மாத
6 ம் 12 உ ராயஸ்ரீ சாசி மகாராசர்
7 சாயபு அவர்களுக்கு காரியத்து கற்த்தறா
8 ன கீதா........... .. ...... கு ஆபாலுதார்க்கு
9 தன்மம் ஆடுதுறை மாகாண
10 த்தில் சேந்த பட்டிகுடி கும
11 ரருக்கு பூதானம் பூசை ந
12 டத்தறத்துக்கு விட்ட
13 து குமர கோவில்...ா
14 தானம்
15 12 அடி கோலால்
16 குழி 500ம் தோ
17 ப்பு உள்[ப்பட]கந்த

---

2. *A. R. E.* No. 229 of 1973-74.

18 ணானா சாரியரு
19 ரது சேவை
20 [சந்திராதித்தவ]ரைத் தினம்
21 தோறு நடக்க தந்ததாக கட்டளை பி
22 றப்பிச்சோம்
23 இத்தன்மத்துக்கு
24 அகிதம்[பண்ணினவர்]
25 கள் கெங்கை கரையில்
26 [காராம் பசுவை கொண்ண]
27 [தோஷத்தில் போவார்கள் வ]

# 94-95. நீடாமங்கலம் சத்திரக் கல்வெட்டுக்கள்

தஞ்சை மாவட்டம் நீடாமங்கலம் யமுனாம்பாள் சத்திரத்தில் இக் கல்வெட்டுக்கள் வெட்டப்பட்டுள்ளன.

நீராட்டுமங்கலம் அல்லது நீடாழிமங்கலம் என்ற பெயரே மருவி நீடாமங்கலம் ஆயிற்று என்பர். இவ்வூரின் அருகே தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் (1739 - 1763) தன் மனைவி யமுனாம்பாள் பெயரில் ஓர் ஊருண்டாக்கி அங்கு அரண்மனையும் சத்திரமும் கட்டினார். இக்கல்வெட்டு மூலம் நீடாமங்கலத்திற்குப் பிரதாபசிங் காலத்தில் யமுனாம்பாள்புரம் என்று பெயர் மாற்றப்பட்டதை அறிகின்றோம்.

யமுனாம்பாள் பெயரில் ஒரு கோயில் உள்ளது. இக்கோயில் யமுனாம்பாள் அடக்கம் செய்யப்பட்ட இடம் என்று கூறுவர். எனவே இது பள்ளிப்படைக் கோயிலாக இருக்கலாம். அங்கு யமுனாம்பாள் இன்று மாமரமாக மாறி அடியார்கட்கு அருள் செய்வதாக நீடாமங்கலம் மக்கள் நம்புகின்றனர். ஆண்டுதோறும் யமுனாம்பாள் நினைவு நாளில் மாமரத்திற்கு வழிபாடு செய்கின்றனர். நீடாமங்கலத்தில் உள்ள யமுனாம்பாள் சத்திரத்தில் பல கண்கவர் ஓவியங்களும் அழகிய சுதைச் சிற்பங்களும் இன்றும் அழியாமல் உள்ளன.

யமுனாம்பாள்புரம் என்றழைக்கப்பட்ட பகுதி இப்போது பழைய நீடாமங்கலம் என்றழைக்கப்பட்டு வருகிறது. இரண்டு கல்வெட்டுக்கள் அங்கு உள்ளன. அவற்றின் மூலம் சீனிவாச பிள்ளை அன்னதானம் செய்தமையும் 1880 இல் மாவட்ட ஆட்சித் தலைவர் வெப்ஸ்டர் ஆணையால் சத்திரம் பழுது பார்க்கப்பட்டதும் தெரிகின்றன.

## 94. கல்வெட்டு

1 உ

2 *ஸ்ரீ எமுநாம்பாள் புரமென்னும்*

3 இந் நீடாமங்கலம் றாம பிள்ளை கு

4 மாறர் றாசீ. சீனிவாச பிள்ளை அன்

5 ன சத்திரம் ஏவிளம்பி ௵ ஆவணீ

6 ௴ 25 தீ

## 95. கல்வெட்டு

BUILT BY ORDER

OF

E. F. WEBSTER ESQ

COLLECTOR OF TANJORE

1880

T. GOVINDA ROW

SUP. OF CHATTRAMS.

# 96. கும்பகோணம் சங்கர மடத்துக் கல்வெட்டு

கும்பகோணம் சங்கர மடத்திலுள்ள சந்திர மௌலீசுவரர் கோயிலின் நுழை வாயில் வலப்புறச் சுவரில் இக்கல்வெட்டு உள்ளது.

சங்கரர் நிறுவியதாகக் கூறப்படும் ஐந்து மடங்களில் காஞ்சிபுரம் காமகோடி பீட மடமும் ஒன்று. கி. பி. 18ஆம் நூற்றாண்டின் இடையில் இடைவிடாமல் நடை பெற்ற கருநாடகப் போர்களின் விளைவாகக் காஞ்சிபுரம் மூன்றாம் மகாதேவேந்திர சரசுவதி சுவாமிகளான சங்கராச்சாரிய சுவாமிகள் (1704—1746) தென்திசைப் பயணம் மேற்கொண்டு உடையார்பாளையத்தில் தங்கியிருந்தார்.

அப்போது தஞ்சாவூரை ஆண்டு கொண்டிருந்த பிரதாபசிங் (1739—1763) சங்கராச்சாரியாரைத் தஞ்சாவூரில் நிலையாக வந்து தங்குமாறு அழைத்தார்.

ஆனால் சங்கராச்சாரியார் காவிரி ஆற்றின் கரையில் தங்கியிருக்க விரும்பவே அவருடைய விருப்பப்படிக் கும்பகோணத்தில் காவிரியின் தென்கரையில் டபீர் அக்கிரகாரத்தில் சங்கராச்சாரியாருக்கு மடம் கட்டிப் பல கொடைகளையும் பிரதாபசிங் அளித்தார்.

அது முதற்கொண்டு கும்பகோணம் சங்கர மடத்திற்கும் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்துக்கும் தொடர்பு பெருகியது. நிரந்தரமான வருவாய் உடைய பல்வேறு கொடைகளுடன், அவ்வப்போது பெரும் செல்வமும் சங்கர மடத்திற்குக் கொடையாக அளிக்கப்பட்டன.

பலமுறை சங்கராச்சாரியார்கள் தஞ்சாவூர் அரண்மனைக்கு வருகை புரிந்தனர். சங்கர மடத்தின் சிறப்புப் பூசையான வியாச பூசைக்கு மராட்டிய மன்னர் சிறப்பு அன்பளிப்புக்களுடன் தனிப் பிரதிநிதியையும் அனுப்புவது வழக்கம். இவ் வழக்கம் இன்றும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

காஞ்சிபுரம் சங்கராச்சாரியார்களின் வழிபடு கடவுள் சந்திர மௌலீசுவர சுவாமி. கும்பகோணம் சங்கர மடத்தில் இச்சந்திர மௌலீசுவரருக்குத் தனிக்

கோவிலை இரண்டாம் சரபோசி மன்னர் (1798—1832) 1822 இல் கட்டினார் என்பதை இம் மராத்திமொழிக் கல்வெட்டுக் கூறுகிறது. நாள் 10— 2 — 1822.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

ஸ்ரீ

*ஸ்ரீ சந்திர மௌலீசுவர சுவாமி எப்பொழுதும் நிலையாகத் தங்கும் பொருட்டு ராசஸ்ரீ சத்திரபதி செரபோசி மகாராசாவினால் சாலிவாகன ஆண்டு 1743 விருஷ ஆண்டு மாசி மாதம் சுக்கில பஞ்சமி ஞாயிற்றுக்கிழமை இக் கோயில் பிரதிட்டை செய்யப்பட்டது.*

# 97. திருவாரூர்த் தியாகராாசர் கோயில் கல்வெட்டு

திருவாரூரில் தியாகராசர் கோயில் முதல் பிரகாரத்தில் கருவறையின் மேற்குப் பக்கம் தரையில் பதிக்கப்பட்ட கற்பலகையொன்றில் இக்கல்வெட்டு காணப் படுகிறது.[1]

சோழ நாட்டை ஆட்சிபுரிந்த பிற மன்னர்கள் போலவே தஞ்சை மராட்டிய மன்னர்களும் திருவாரூர்மீது மிகுந்த பற்றுக் கொண்டிருந்தனர். இரண்டாவது மராட்டிய மன்னர் சகசி பாடிய 'சங்கர பல்லகி சேவா பிரபந்தம்' என்னும் இசை நாடகம் திருவாரூரில் நடிக்கப்பட்டது. சகசி மன்னர் தஞ்சாவூர் மகர்நோன்புச் சாவடியில் விசயமண்டபம் என்ற பெயரில் மண்டபம் ஒன்றமைத்து அதில் திரு வாரூர்த் தியாகராசப் பெருமானை எழுந்தருளச் செய்தார்.

தஞ்சைப் பெரிய கோயில் தேர்த் திருவிழா, நாள் வழிபாடு, இறைவன் திரு வீதி உலாப்போதல் முதலியவை முழுவதும் திருவாரூர் போலவே சோழர் நாளில் நடந்து வந்தது. இடைக்காலத்தில் இவ்வழக்கம் நின்று விட்டது. இதைக் கேள்விப்பட்ட மராட்டிய மன்னர் ஒருவர் திருவாரூர் சென்று வழிபாட்டு முறைகள் முழுவதையும் அறிந்து அவைகளை அப்படியே தஞ்சையில் பின்பற்றச் செய்தார்.

12—4—1717ஆம் ஆண்டு முதலாம் சரபோசி மன்னர் (1711—1729) திரு வாரூர்த் தியாகேசர் ஆலயத்தில் செய்த திருப்பணியை இக்கல்வெட்டு கூறுகிறது.

கல்லாலான திருமேனிகளை வழிபாட்டுக்கு நாட்ட அட்டபந்தனம் என்னும் மருந்தைப் பயன்படுத்துவர். அவ்வட்டபந்தனம் அனைத்தும் விடுபட்டு, கோயில் முழுவதும் சிதைந்து கிடந்ததைச் சரபோசி மன்னர் திருப்பணி செய்தார் என்ற செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது.

சரபோசிக்கு முன்னர் ஆட்சிபுரிந்த சகசியும் முதலாம் ஏகோசியும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளனர்.

---

1. *South Indian Inscriptions* Vol XVII No. 580; *A.R.E.* No. 535 of 1904.

## கல்வெட்டு

1 கலியுக ஆதியான ந
2 ாள் முதல் சென்ற ஞ 4
3 818 சாலியவாக
4 ன ஸஹாத்தம் 163
5 6 இதன் மேல் செல்லா நி
6 ன்ற ஏவிளம்பி௵ சித்
7 திரை மீ 15உபூறுவ பட்ச
8 ம் திறையோதெசியும் அ
9 ஸ்த நட்சத்திரமும் சுக்கிற
10 வாரமும் ஸ்ரீமற் தியாக ரா
11 ச சுவாமியார் வன்மீக னா
12 த சுவாமியார் ஆலை[ய]த்திலு
13 ள்பட்ட மகா சிவலிங்கம்
14 திருக்கோவில் அட்ட ெ
15 பந்தனம் மு[த]ல்லாக க
16 ல்பமுத லிறந்து போ
17 னத்தை பண்ணிவித்
18 த பலன் மகாமண்ட
19 லேசுவ(ர்)ரன் ராசமா
20 னிய ராச ஸ்ரீ ஏகோ
21 சி மகராசா சாயபு சக
22 சி மகராசா சரபோ
23 சி மகராசா தற்மம்
24 உ

# 98, 99. கோட்டூர்க் கல்வெட்டுக்கள்

## 98. பிரதாபசிங் கொடைக் கல்வெட்டு :

தஞ்சை மாவட்டம், மன்னார்குடி வட்டம் கோட்டூர்க் கொழுந்தீசுவரர் கோயில் அருகே வயலில் நடப்பட்டுள்ள கல்லில் இக்கல்வெட்டு உள்ளது.

24—12—1761 அன்று தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் கோட்டூர்க் கொழுந்தீசுவர சுவாமி அபிடேகக் கட்டளைக்குத் தோட்ட நிலம் கொடையாக அளித்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது.[1]

### கல்வெட்டு

1 உ விஷு ஸ்ரீ மார்கழி
2 மீ 13உ கோட்டு
3 ர் கொழுந்தீசுவர
4 சுவாமி அபிஷே
5 க கட்டளைக்கு மகா
6 ராசா சாயபு அவர்க
7 ள் தன்மமாக விட்ட
8 [குரதன] பயிரிட்ட
9 தோட்டம் யீசன்
10 குடி வாய்க்காலு
11 க்கு மேற்கு முள்ளி
12 யாத்துக்கு வடக்கு
13 குடியிருப்பு நத்த
14 த்துக்குக் கிழக்கு வய

1. *A. R. E.* NO. 462 of 1912

15 லுக்கு தெற்கு
16 யிந்த நான்
17 கெல்லை உள்
18 பட்ட மாவடை மரவடையு
19 முள்ப்பட தன்ம
20 மாக விட்ட படியினா
21 லே சந்திராதித்தவ
22 ரை அனுபவிக்க க
23 டவராகவும் யிதற்கு வி
24 காதம் பண்ணினவ
25 ன் கெங்கைக் கரையி
26 லே காராம் பசுவைக்
27 கொன்ற பர்வத்திலே
28 போவான் வ

## 99. உவரிச்சேரியார் கொடைக் கல்வெட்டு :

தஞ்சை மாவட்டம், மன்னார்குடி வட்டம் கோட்டூர் கொழுந்தீசுவர சுவாமி கோயிலில் இக்கல்வெட்டு உள்ளது.[2]

ஆனந்தராய மகி என்பவர் கற்றறிந்த ஒரு மராட்டிய குலப் பெரியவர். புலவர்களை ஆதரித்தவர். இலக்கியம் பல பெற்றவர். அவர் தஞ்சை மராட்டிய மன்னர்கள் சாசி (1684-1711), முதலாம் சரபோசி (1711-1729), துக்கோசி (1729-1735) ஆகியவர்கள் ஆளுகை நாளில் உயர் அலுவலராகப் பணிபுரிந்தவர். முதலாம் சரபோசி காலத்தில் இவர் தளவாய்ப் பதவி வகித்தார்.

முதலாம் சரபோசி ஆட்சிக் காலத்தில் 15-7-1722ஆம் ஆண்டு ஞாயிற்றுக் கிழமையன்று மன்னார்குடி வட்டம் கோட்டூரில் உள்ள கொழுந்தீசுவர சுவாமிக்கு அபிடேகக் கட்டளைக்காக உவரிச்சேரி என்னும் இடத்தில் பெருமாத்தேவர், திருமலைத் தேவர், கோட்டூர் ஊரவர் ஆகியோரின் சம்மதத்தைப் பெற்றுக் கொடை நிலம் முக்கால் வேலி அளிக்கப் பெற்றது.

அந்நிலத்தில் கோயில் பயன்பாட்டுக்காகத் தோப்பு வைக்கப்பட்டது. ஏற்கனவே அருகில் தோப்பு இருந்த இடத்திலும், நீர்நிலை (குளம், ஆறு) யின் அருகிலும் வளமான பகுதியில் இக்கொடை நிலம் அளிக்கப்பட்டது.

---

2. *A. R. E.* No. 463 of 1912

## கல்வெட்டு

1 சுபகி[று]து ஷு ஆனி மீ
2 15 உ ராயஸ்ரீ தளவாய்
3 ஆனந்த ராயர் சாயுபு
4 அவர்கள் னாளையில் கோ
5 ட்டூர் கொழுந்தீசுர சுவ
6 ாமியார் அபிஷேகக் கட்டளை
7 க்கு உவரிச்சேரியில் பெ
8 ருமாத் தேவர் திருமலைத்
9 தேவர் ஊரவரும் சம்ம
10 தித்து தோப்பு வைச்சு செய்து
11 குடுத்தது குளத்து மேல்க்கரை
12 வடகரை சுத்து உள்பட முள்ளி
13 நதிக்கு வடக்கு மசான பூமி
14 க்கு கிழக்கு கீழ்வேலி ெ
15 பரிய தோப்பு வேலி அ
16 றுதிக்கு நிலம் முக்கால்
17 இந்த தறுமம் பண்
18 ணினது இதுக்கு ஆர
19 ாகிலும் அழிவு பண்
20 ணினவன் க[ா]ராம்ப
21 சுவை கொண்ண தே
22 ாஷத்திலே போவ
23 ான் உ

# 100. மகாதேவப்பட்டணக் கல்வெட்டு

மன்னார்குடிக்குத் தென்மேற்கே 10 கி. மீ. தொலைவிலுள்ள மகாதேவப் பட்டணக் கோட்டைக்குள் ஆதிவராக சுவாமி கோயிலின் மகாமண்டபத்தில் உள்ள அழகுமிக்க ( 60 செ. மீ. × 45 செ. மீ. அளவுள்ள ) தனிக் கல் ஒன்றில் இவ்வட மொழிக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

துக்கோசி என்று அழைக்கப்பட்ட முதலாம் துளசா மன்னர் காலத்தில் இங்கு கோட்டை ஒன்று கட்டப்பட்டது. அதனுள் ஒரு அரண்மனை கட்டி நாட்டின் ஒரு பகுதியைத் துக்கோசி ஆட்சிபுரிந்து வந்தார்.

இன்றும் மகாதேவப் பட்டணத்தில் 5 வேலி பரப்பில் பெரிய கோட்டை உள்ளது. கோட்டையினுள் பெரிய அரண்மனை, சிறிய அரண்மனை எனப்படும் பகுதிகள் இடிந்து சிதைந்து கிடக்கின்றன. 1781இல் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம் பெனிக்கும் ஐதர் அலிக்கும் நடைபெற்ற போரில் இக்கோட்டை முக்கிய இடம் பெற்றது.

ஊரின் வடக்கே கிழக்கு நோக்கிச் சம்போ மகாதேவர் கோயில் உள்ளது. அக்கோயிலால்தான் இவ்வூருக்கு மகாதேவப் பட்டணம் என்று பெயர் ஏற்பட்டது. இங்கு உமாபாயி சாகேப் சத்திரம் எனப்படும் மராட்டியச் சத்திரமும் உள்ளது.

சிவபெருமான் பார்வதியைத் திருமணம் செய்து கொண்ட வரலாற்றைக் கூறும் 'சிவகாம சுந்தரி பரிணயம்' என்னும் தெலுங்கு நாடக நூல் மகாதேவப் பட்டணத்தில் துக்கோசியால் எழுதப்பட்டது. ஆதிவராக சுவாமி கோயிலில் இந் நாடகம் நடிக்கப்பட்டது. சிவகாம சுந்தரி பரிணயத்தில் மகாதேவப் பட்டணம் பற்றிய பல குறிப்புக்கள் உள்ளன.

துக்கோசி இயற்றிய '*தன்வந்தரி சார நிதி*' என்னும் ஆயுர்வேதம் பற்றிய வைத்திய நூலில் இவ்வூர் பற்றிய வருணனை மிகவும் விரிவாக உள்ளது.

2—8—1728ஆம் ஆண்டு பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டு அழகாகச் சிற்பங்கள் செதுக்கப்பட்ட கல்லில் வழிபாட்டு மந்திரம் போன்று வடமொழியில் அமைக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டின் மொழி பெயர்ப்பு

*கணேசன், சரசுவதி, குரு, சிவன், மகாதேவன், உமா மகேசுவரன், இலக்குமி, நாராயணன், கோவர்த்தனன், ஆலிலைக் கண்ணன், பரப்பிரம்மம், சீவாத்மாவாக இருக்கின்ற இறைவன், அரிகரன், அர்த்தநாரீசுவரன், பிரகிருதி புருடன், கலைமகள், புவனேசுவரி, அட்டமூர்த்திகள், சச்சிதானந்தன், கங்காதரன், காலகாலன், அனைத்துத் தேவர்கள், அக்கினி, இந்திரன், மேகநாதன், தேவதேவன், பூதேவி, வருணன், அங்காரகன், சண்முகன், மருத்துக்கள், சூரியன், மந்திரமலை, யாகபுருடன், கங்கை, காவேரி, வாயு, மேகங்கள், சோமன், தீ, சுக்கிரன், புதன், சனி, மிருகசீரிச நட்சத்திரத்தை உடைய தெய்வம், கடக ராசியின் தேவதை, மீன ராசிக்குரிய தெய்வம், கும்ப ராசிக்குரிய தெய்வம், விருஷ ராசிக்குரிய தெய்வம், ரிஷ்ய சிருங்கர், ஒளி, ஆகாயம், ஒலி, கிருட்டிணன், வாசுதேவன், உலகநாயகன், வாக்கின் தலைவி, தத்தாத்ரேயன், தட்சிணாமூர்த்தி, அன்னபூரணி, காயத்ரி, சாவித்திரி, ரித்யை, சித்தி, மகாலட்சுமி, சோனைதாயர், நவக்கிரகங்கள், அட்டதிக்குப் பாலகர், விசுவாம்பரன், விசுவநாதன், சத்த ரிசிகள், கருடன், விருப்பத்தைப் பூர்த்தி செய்பவன், விருப்பம் அற்றவன் ஆகிய தெய்வங்களை வணங்குகிறேன்.*

*எங்களுக்கு மழை பொழியட்டும்; விளைச்சல் பெருகட்டும்; மேகமானது மழையைக் கொடுப்பதாக; பூமியை வணங்குகிறேன்; முடிவற்றவனாகவும், ஆயிரக்கணக்கான தலைகளையும், தோள்களையும், கண்களையும், கைகளையும், பெயர்களையும், உருவங்களையும் கொண்டு எந்தப் புருடன் இருக்கின்றானோ அவனை வணங்குகிறேன்.*

*மங்களத்தைக் கொடுக்கட்டும். ஆயிரக்கணக்கான கோடி யுகங்களைக் கண்டவனும் அழிவற்றவனுமாக எந்தப் புருடன் இருக்கின்றானோ அவனை வணங்குகிறேன்.*

*பெரிய இடையூறுகளைத் தவிர்ப்பவனும்...........வணங்குகிறேன். கீலக ஆண்டு ஆடி மாதம் பௌர்ணமி.....................*

## 101. செம்பனார் கோயில் கல்வெட்டு

தஞ்சை மாவட்டம், மயிலாடுதுறை வட்டத்தில் காவிரிக்குத் தென்கரையில் அமைந்த தலங்களுள் செம்பனார் கோயில் ஒன்று. அங்குள்ள சுவர்ணபுரீசுவரர் கோயிலுக்கு வெளியே கிடக்கும் கல் தூண் ஒன்றில் இக்கல்வெட்டுக் காணப்படுகிறது.[1]

இவ்வூருக்குப் பழம்பெயர் திருச்செம்பொன் பள்ளி என்று தேவாரத் திருமுறைகளிலும், பெரிய புராணத்திலும், கல்வெட்டுக்களிலும் வழங்கப்பெறுகிறது.

3—11—1720 அன்று முதலாம் சரபோசி மன்னர் காலத்தில், நாட்டாரும் பாதுகாவல் உரிமையுடையோரும் சேர்ந்து கோயிலுக்குக் கொடுக்க வேண்டிய கொடைபற்றிச் செய்து கொண்ட ஒப்பந்தம் இக்கல்வெட்டில் காணப்படுகிறது. கிராமத்தில் உள்ள எல்லோரும் கோயிலுக்குக் கீழ்வருமாறு வரி கொடுக்க வேண்டும்; பாதுகாவல்காரர் தறி ஒன்றுக்கு ஒரு பணம் என்ற வீதத்தில் கொடுக்க வேண்டும். கிராமத்தில் வசூலாகும் 'உறையில்' பாதி கோயிலுக்குப் போகவேண்டும். மேலும் சம்மர்த்துக்கு ஆண்டுக்கு 2 பணம் செலுத்த வேண்டும். இத்தீர்மானம் காவேரிப் பட்டினம் சுபா அய்யாவய்யன், அபால் தாண்டவராய முதலியார் ஆகியோர் முன்னிலையில் செய்யப்பட்டது.

### கல்வெட்டு

1 *கல்லியாத்தம் 4*
2 *821 க்கு மேல்ச்*
3 *செல்லாநின்ற சாறு*
4 *வரிஷ காற்திகை மீ*
5 *2 உ சரபோசி ராசா நாள்*

---

1. *A. R. E.* No. 175 of 1925.

6 சுபை காவேரிப் பட்டணம்
7 அய்யாவையனவர்கள்
8 அபால் தாண்டவராய முதலி
9 யார் னாட்டார் பாதுகாவல் சக
10 ல சனங்களும் அபிமானித்து
11 செம்பொன்னாதர் கோவி
12 லுக்குக் கல்லு வெட்டி னாட்டி
13 நபடி கோவில்க் கிறாமத்தில்
14 பலர் னாலாசாதியும் கோவிலு
15 க்கு யிறை குடுத்துச் சுகமே யி
16 ருக்கவும் பாதுகாவலுக்கு ௵ 1
17 க்கு தறிக்கொரு பணமுங் கி
18 றாமத்திலுறை பாதியும் பத்தி
19 க் கொள்ளவும் மத்துண்டா
20 கிய சுவந்திரங் கோயிலுக்
21 குத் தெற்றம் பண்ணிக் குடு
22 த்தபடி ஆயம் சம்மாதம் ௵
23 1 க்கு பணம் 2 பத்திக் கொள்ள
24 வும் யிந்தத் தற்மங்களை மே
25 ன்மேலும் அபிவிருத்தியா
26 க நடப்பிச்ச பேர்கள் சந்தா
27 ன சமிற்தியும் தீற்காயுசும்
28 மேன்மேலு முண்டாவதா
29 கவும் யிந்தத் தற்மங்களுக்கு அழி
30 வு சொன்ன பேர்கள் கெங்
31 கைக் கரையிலே ஆயிரங்
32 காராம் பசுவும் ஆயிரம் பிரா
33 மணரையுங் கொண்ண
34 தோழத்தில்ப் போவார்கள் வ

# 102. எழுமகளூர்க் கல்வெட்டு

தஞ்சை மாவட்டம், மயிலாடுதுறை வட்டம் எழுமகளூரில் ஒரு நிலத்தில் நடப்பட்டுள்ள குத்துக்கல்லில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

கி. பி. 1746 ஆம் ஆண்டு தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங் (1739—1763) இவ்வூர் ஞானேசுவர சுவாமிக்கும் அம்மனுக்கும் சருவமானியமாக நன்செய் நிலக்கொடை நைவேத்தியத்துக்காக அளித்த விபரம் இக்கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது. அந்நிலம் காவிரிக்கும் அரிசிலாற்றுக்கும் இடைப்பட்ட வளமான பகுதி என்பதும் தெரிகிறது.

நிலத்தின் எல்லைகள் கூறப்பட்டுள்ளன. நிலம் 18 அடிக் கோலால் அளக்கப்பட்ட விபரமும் இதன்மூலம் தெரிகிறது. கொடை நிலத்தை அரசு அலுவலரும், நாட்டாரும் அளந்து கொடுத்தார்கள் என்று குறிக்கப்படுகிறது.

## கல்வெட்டு

1 சாலி வா[கனம்]
2 1668 [கலியுகம்]
3 4847 யித
4 ன் மேல் செல்லா நின்ற அட்சய வரு
5 ....... ... த்த மங்கள பஞ்சாங்
6 ...........ம் காவேரிக்கு தெற்கு அரி
7 [சிலாத்துக்]கு வடக்கு கொற நாட்டு சன
8 ... ... .....ஞானம் ஞானேசுர சாமி அம்ம
9 ... ......நெவேத்தத்துக்குச் சந்திராதித்தவல் ராசமாற்தாண்ட ராச
10 ....... ...த்தியிவற்கு ஸ்ரீ துக்கோசி மகா

---

1. *A. R. E.* No. 44 of 1925.

11 ராசா அவர்கள் சந்தாநமாந பெரதாபசிங்க மகாராசா
12 சறுவ மானியம் தெத்தம் பண்ணிச் [சிலா] சாதநம்
13 .........நஞ்சை நிலத்தில் பதிநெட்[டடிகோலால்]
14 .......... டுகரைக்கு மேற்கு செங்க
15 .........போட்ட.........கரைக்கண்ணிக்கு தெற்கு
16 .......... நடப்பு கரைக்கண்ணிக்கு வடக்கு ஒன்பதாங்க..
17 முக்கால் யிந்த நிலம் அரமனைய்
18 சனங்களும் நாட்டாரும் சகலரும் வந்து அள[ந்து]
19 [சந்திர] சூரியாளுள்ள மட்டும் சாமிக்கு நடந்துவர..
20 யாராமொருவர் விகாதம் பண்ணினால் கெங்கைக்
21 [கரையில் காராம்] பசுவை கொண்ண தோஷத்தில்
22 [போவான் யிதுக்]கு விகாதம் நினைச்சவர்கள்
23 .......... லும் போவார்கள் உ

# 103. திருப்பாம்புரம் கல்வெட்டு

தஞ்சை மாவட்டம், நன்னிலம் வட்டம் திருப்பாம்புரம் சேடபுரீசுவரர் கோயிலில் வெளிமதில் கிழக்குப் பக்கம் பதித்துள்ள கல்லில் இக்கல்வெட்டு வெட்டப் பட்டுள்ளது.[1]

முதல் சரபோசி மன்னர் (1711—1729) காலத்தில் சுபேதாராக இருந்தவர் களுள் ஒருவர் ராகோசி பண்டிதரய்யனவர்கள்.

பண்டிதர், அய்யன் என்ற சிறப்புப் பெயர்கள் இணைந்திருப்பதால் இவர் கற்றறிந்த சான்றோராக இருக்கலாம். இவர் முதல் சரபோசி மன்னர் காலத்தில் 'திவான்' பொறுப்பில் இருந்தார். 'பந்த்' என்ற மராட்டியப் பெயரும் பண்டிதர் என்று கல்வெட்டில் குறிக்கப்பெறுகிறது.[2] இவருக்குக் கீழ் 'கர்த்தர்' என்ற பதவியில் இருந்தவர் மானுக்கோ பண்டிதரய்யனவர்கள். இவர் தன்னுடைய கொடையாகத் திருப்பாம்புரம் சிவாலயத்தில் வசந்த மண்டபம் கட்டிய செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது. நாள் 9—8—1722.

## கல்வெட்டு

1 உ தேவி சகாயம்
2 உ ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாக
3 ன சகாப்தம் 1644
4 கல்யப்தம் 4824 ஹூத்தி
5 ன்மேல் செல்லா நின்ற சோப
6 கிறது ஹூ ஆவணி மீ 8 உ

---

1. ஆ. பத்மாவதி, *நன்னிலம் கல்வெட்டுக்கள்*, 153-1977 ;
*A. R. E.* No. 98 of 1911.

2. டபீர் பந்த் - டபீர் பண்டிதர் எனப்பட்டார்.

7 ரேபதி கூடின சுக்கிற வார ஙா

8 ள் யிந்த சுபதினத்தில் ரா

9 சஸ்ரீ சுபயதா[ர்]ராகோ[சி]

10 பண்டித(ர)ரய்யனவர்

11 கள் தீவாணத்துக்கு கத்தீ

12 ராகிய[3] மாணுக்கோ பண்டி

13 தரய்யனவர்கள் தற்ம

14 ம் வசந்த மண்டபம்

---

3. கர்த்தராகிய

# 104-109. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டுக்கள்

தஞ்சை மாவட்டம், சீர்காழி வட்டத்தில் உள்ள பாடல் பெற்ற தலம் புள்ளிருக்கு வேளூர். அங்கு வைத்தீசுவரன் கோயில்கொண்டுள்ள காரணத்தால் புள்ளிருக்கு வேளூர் என்ற ஊர்ப்பெயர் வழங்குவது மறைந்து வைத்தீசுவரன் கோயில் என்ற பெயரே ஊருக்கும் நிலைத்துவிட்டது. இவ்வூருக்கு வைத்தியநாதக்குடி என்றும் பெயர் வழங்கிற்று.

தஞ்சை மராட்டிய மன்னர் பலர் இக்கோயிலுக்குத் திருப்பணிகள் செய்துள்ளனர். தமிழ்ப் பல்கலைக் கழகத்துக் கல்வெட்டுத்துறை இக்கோயிலைப் பற்றித் தொகுத்துள்ள ஏழு செப்பேடுகளில் மூன்று செப்பேடுகள் மராட்டிய மன்னர் காலத்தைச் சேர்ந்தவை. அவை,

| | |
|---|---|
| முதலாம் ஏகோசி | ( 1676 - 1684 ) |
| முதலாம் சரபோசி | ( 1711 - 1729 ) |
| இரண்டாம் ஏகோசி | ( 1735 - 1737 ) |

ஆகியோருடையவை ஆகும். அமர்சிங் (1787-1798) இக்கோயிலுக்கு ஆண்டுதோறும் 5400 சக்கரம் கொடையாகக் கொடுத்தார். இரண்டாம் சரபோசி மன்னர் 1814இல் 'ஆனந்தவல்லி' என்னும் யானையை இக்கோயிலுக்கு அளித்தார்.

இக்கோயில் தருமபுர ஆதீனத்தாரால் நன்கு நிருவகிக்கப்பட்டு வருகிறது. மராட்டிய மன்னர்கள் தஞ்சையில் ஆட்சிபுரியும்போது இக்கோயில் கட்டளைத் தம்பிரான்கள் அரசர்களைப் பார்க்கத் தஞ்சை வருவது வழக்கம். 1813ஆம் ஆண்டு இக்கோயில் கட்டளைத் தம்பிரான் ஒருவர் கோயில் பிரசாதத்துடன் உருத்திராக்க மாலையும் பவள மோதிரமும் அரசருக்குக் கொண்டு வந்தார்.

## 104. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டு - அ :

சித்தாமிர்தக் குளத்தின் வடபுறம் படிகளின் அருகே உள்ள மண்டபத்தின் கிழக்குப் பக்கம் இக்கல்வெட்டு உள்ளது.

1767ஆம் ஆண்டு துளசா மகாராசா ஆட்சியின்போது சீகாழிச் சீமை அதிகாரியாக இருந்தவர் மல்லார்சி காடே ராவ் அவர்கள். அவர் காலத்தில் இக்கோயிலின் இரண்டாம் பிராகாரத்து நான்கு திருமதிள்களும், திருமாளிகைப் பத்தியும், அம்மன் சன்னிதி தட்டி சுற்றி மண்டபமும் கருங்கல் திருப்பணியாகக் கட்டப்பெற்றன. திருமாளிகைப் பத்தியின் மேலே நான்கு புறமும் வவ்வால் நெற்றியும் கட்டப்பட்டது.

அப்போது தருமபுர ஆதீனத்தின் 10ஆம் பண்டார சன்னிதியாக இருந்த தவத்திரு சிவஞான தேசிக சம்பந்தரும், வைத்தீசுவரன் கோயிலில் கட்டளைத் தம்பிரானாக இருந்த முத்துக்குமாரசாமித் தம்பிரான் அவர்களும் இக்கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றனர்.[1]

### கல்வெட்டு

1 சுவத்திஸ்ரீ சாலிவாகன சகாத்தம் 1689 கலியுக ஷு 4868 இதன்மேற் செல்லா நி
2 ன்ற சறுவசித்தி ஷு ஆவணி மீ போஸலெ வங்சொத்தாரகரான ரா துளசா மகராச சாயெபு
3 அவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணுகுற னாளையில் ரா மல்லார்சி காடே ராயரவர்களுக்கு சீகாழிச் சீமை மு
4 காசு நடக்கயில் தற்ம்மபுரம் பண்டாரச் சன்னதி சிவஞான தேசிக சம்மந்தன் அனுக்கிறகத்தைப் பெற்ற
5 முத்துக் குமார சுவாமித் தம்பிரானவர்கள் வயித்தியனாத சுவாமி கட்டளை அதிகாரம் பண்ணு
6 குற காலற்றில் ரெண்டாம் பிறாகாரம் னாலு பிறத்து மதளும் திருமாளிகைப் பற்றியும் அ
7 ம்மன் சன்னதி தட்டி சுற்றி மண்டபமும் சாங்கமாக கருங்கல் திருப் பணியாயிக் கட்டி நிறடே
8 வற்றி அந்த திருமாளிகைப் பற்றியின் மேலே நாலு பிறமும் வவ்வால் நெற்றி கட்டி நிறவேறின
9 து

1. *A. R. E.* No. 421 of 1918 - 19.

## 105. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டு - ஆ :

இந்தக் கல்வெட்டு இதற்கு முன்புள்ள கல்வெட்டின் எதிரில் மேற்குப் பக்கம் வெட்டப்பட்டுள்ளது. 1770ஆம் ஆண்டு மேல் கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ள வர்கள் காலத்தில் சித்தாமிர்தக் குளத்தின் நான்கு புறமும் உள்ள மண்டபங்கள் கருங்கல் திருப்பணியாகக் கட்டப்பெற்ற செய்தி கூறப்படுகிறது.[2]

### கல்வெட்டு

1 ௨ ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாத்தம் 1692 கலியுக ௵ 4871 இதன்மேற்

2 செல்லாநின்ற விகுற்தி வையாசி ௴ போஸலெ வங்சொத்தாரகரான ரா துளசா மகராச சா

3 யெபு அவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணுகுற னாளையில் ரா மல்லார்சி காடே ராயரவர்

4 களுக்கு சீகாழிச் சீமை முகாசு நடக்கயில் தற்ம்மபுரம் பண்டாரச் சன்னதி சிவஞான தேசிக ச

5 ம்பந்தன் அனுக்கிற[க]த்தைப் பெற்ற ரா முத்துக்குமார சுவாமித் தம்பிரான வர்கள் வயி

6 த்தியனாத சுவாமி கட்டளை அதிகாரம் பண்ணுகுற காலற்தில் தீற்த்தக்கரை நாச்சாரியும் ம

7 ண்டபமும் சாங்கமாக கருங்கல் திருப்பணியாயிக் கட்டி நிறவேறினது

## 106. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டு - இ :

அம்மன் சன்னிதி முன் மண்டபத்திலுள்ள தூணில் பொறிக்கப்பட்டுள்ள பிரதாபசிங்கின் (1739—1763) உருவச் சிலைக்குக் கீழே வெட்டப்பட்டுள்ளது. மேலே கண்ட இரண்டு கல்வெட்டுக்கள் துளசா மகாராசாவின் காலத்தைச் சேர்ந் தவை. துளசா மகாராசா இக்கோயிலில் தன் தந்தையின் உருவச் சிலையைப் பொறித்து வைக்க ஏற்பாடு செய்திருக்கிறார்.

### கல்வெட்டு

1 ௨ ஸ்ரீ பிரதாப சி

2 ங்கு மகாரா

3 சா சாயபு

---

2. *A. R. E.* No. 422 of 1918 - 19.

## 107. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டு - ௪ :

மேற்கண்ட கல்வெட்டுள்ள அதே மண்டபம். துளசா மகாராசா காலத்தில் சீகாழிச் சீமை ஆட்சிப் பொறுப்பை நிருவகித்து வந்தவரும், வைத்தீசுவரன் கோயிலில் பல திருப்பணிகள் செய்தவருமான மல்லார்சி காடே ராவின் உருவச்சிலை பிரதாப சிங்குக்கு எதிர்த் தூணில் பொறிக்கப்பட்டுள்ளது. அவர் உருவச்சிலையின் கீழ் அவர் பெயர் கீழ்வருமாறு பொறிக்கப்பட்டுள்ளது.

### கல்வெட்டு

1 ௳ ஸ்ரீ மல்லார்
2 சி காடே ரா
3 அவர்கள்

## 108. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டு - ௨ :

துளசா மகாராசாவின் காலத்தில் தருமபுர ஆதீனத்தின் 10ஆவது குருமகா சன்னிதானமாக எழுந்தருளியிருந்த பண்டார சன்னிதிகள் தவத்திரு சிவஞான தேசிக சம்பந்தர் அவர்களின் திருவுருவம் மேற்கண்ட மண்டபத் தூணில் பொறிக்கப் பட்டுள்ளது. அதற்குக் கீழ் அவர் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

இவர் இளமையிலேயே துறவு பூண்டு காசியில் தங்கி வடமொழியில் வல்ல வராகத் திகழ்ந்தார். ஆதீனத் தலைமை ஏற்ற பின்னரும் காசி சென்று அருட் பாக்கள் பல பாடினார். இவர்பால் அருள் உபதேசம் பெற்றவர்கள் பலர்.

### கல்வெட்டு

1 ௳ தர்மபுரம் பத்தாவ
2 து பண்டாரச் சன்
3 னதி சிவஞான தே
4 சிகர்

## 109. வைத்தீசுவரன் கோயில் கல்வெட்டு - ௩ :

மேலே கண்ட மண்டபத்திலேயே இக்கல்வெட்டும் உள்ளது. பத்தாவது குருமகா சன்னிதானத்தின் காலத்தில் வைத்தீசுவரன் கோயிலில் கட்டளைத் தம்பிரானாக இருந்தவர் முத்துக் குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள். முத்துக் குமாரசுவாமி என்பது வைத்தீசுவரன் கோயிலில் எழுந்தருளியுள்ள முருகப் பெரு

மானின் திருநாமம் ஆகும். குமர குருபர சுவாமிகள் இம்முருகன்மீது 'முத்துக் குமார சுவாமி பிள்ளைத்தமிழ்' பாடியுள்ளார். இம்மண்டபத் தூணில் உள்ள இவர் சிற்பத்தின்கீழ் இவர் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

1 ஸ்ரீ முத்து
2 க் குமார சு
3 வாமித் தம்
4 பிரானவர்
5 கள்

# 110. ஆச்சாள்புரம் சிவலோகத்தியாக ஈசுவரர் கோயில் கல்வெட்டு

சீர்காழி வட்டம் ஆச்சாள்புரம் சிவலோகத்தியாக ஈசுவரர் கோயில் உள்ளே கொடிக்கம்பம் அருகே நடப்பட்டிருந்த பலகைக்கல் ஒன்றில் இக்கல்வெட்டு முன்பு காணப்பட்டது. சில ஆண்டுகட்கு முன்பு நடந்த திருப்பணியின்போது இக்கல் வெட்டு உள்ள கல் எங்கோ இடம் மாறி அழிந்துவிட்டது. மைசூரிலுள்ள மைய அரசின் தொல்பொருள் துறையின் கல்வெட்டுப் பிரிவில் பெற்ற ஒளிப்படம் மூலம் இங்கு பதிப்பிக்கப்படுகிறது.[1]

இவ்வூரின் பழைய பெயர் திருநல்லூர்ப் பெருமணம். இன்று ஊருக்கு ஆச்சா புரம்-ஆச்சாள்புரம் என்ற பெயர் வழங்கப்பெறுகிறது. 'ஆச்சாரியர்கள் புரம்' என் பதே அவ்வாறு மருவியது என்பர்.

இங்குள்ள கல்வெட்டுக்கள் சிலவற்றில் இத்தலத்து நடராசப் பெருமான் 'பண்பதைக்க ஆடும் நாயனார்' என்று குறிக்கப் பெருகின்றார். இவ்வூர் ராசாதி ராச வளநாடு வெண்ணையூர் நாட்டைச் சார்ந்தது என்று கல்வெட்டுக்கள் கூறு கின்றன. 'பஞ்சவன் மாதேவி' என்றும் 'குலோத்துங்கச் சோழச் சதுர்வேத மங்கலம்' என்றும் இவ்வூருக்குப் பெயர் வழங்கியது.

5-4-1682ஆம் ஆண்டு தஞ்சையில் முதலாம் ஏகோசியும் அவர் மகன் சகசியும் கூட்டாக ஆட்சி நடத்தும்போது, இவ்வட்டார அடியார்கள் சிலர் ஒன்றாகச் சேர்ந்து இச்சிவலோகத்தியாகருக்கு 21 அடிக் கோலால் அளந்து நிலம் கொடையாகக் கொடுத்த செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது.

இராவுத்த மிண்ட நயினார் மரபில் பெரிய வகுப்பு, சின்ன வகுப்பு என்ற இரு பிரிவினரும், தம்ம கட்டியாபிள்ளை, நல்லதம்பியா பிள்ளை, தீவுச்சீமை நாட்

---

1. *A. R. E.* No. 540 of 1918.

டார், வைத்தியநா தய்யன், தெட்சிணா மூத்திப் பிள்ளை, நல்லம்பலத்தா பிள்ளை, சில படையாச்சி மரபினர் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து சருவமானியமாக நிலம் விட்ட செய்தி கூறப்படுகிறது. இந்நிலம் சண்டேசுவர நல்லூரில் இருந்தது.

## கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீமன் மகா மண்ட
2 லேசுபரன் மல்லிக் கொந்தி ம
3 கா ராயர் சீரெங்க ராயர் பிறுதிவி
4 ராச்சியம் பண்ணி அருளா னின்
5 ற அளகாபுரியாகிய தஞ்ச நகரா
6 திபதி ஏகோசி மகராசா சாயிபு ச
7 கசி மகராசா சாயிபு ராச்சிய ப
8 ரிபாலனம் பண்ணி அருளாநின்ற
9 சாலிவாஹன சகாத்தம் 1605
10 கலியுகாற்தம் 4784 யித
11 ன் பேரில் செல்லாநின்ற துந்திபி ஃஸு
12 சித்திரை மீ 8 உ குருவாரம் பூறுவ பக்ஷித்
13 து நவமி னாழிகை 28 பூச நக்ஷ்தரம்
14 .......... சிவநாமயோகம் பாலவாகற
15 ணம் 28 சிவராத்திரி வறி
16 ........ க்கியு....... குருபுஷிய அமிற்த சித்த
17 யோகம் யிந்த சுபதினத்தில் வழுத
18 லம் பட்டுச் சாவடிக்கு அனாதி
19 னாமமான பெரும்பத்த புலியூர் அனா
20 தி னாமமான கொள்ளிடம் காவி
21 ரிக்கி மத்தியமான நல்லூர் பெ
22 ருமணம் சிவலோக தியாகர் சு
23 வாமிகள் சுபை அண்ணேதி
24 பண்டிதர் அவர்கள் தீவுச்சீ
25 மெ அபால் சாமோசி பண்டிதர் அ
26 வர்கள் பாளையக்காரர் பெறிய வ
27 குப்பு நல்லப்ப ராவுத்த மிண்ட னயி
28 னார் அவர்கள் சின்ன வகுப்பு சிதம்ப
29 ர ராவுத்த மிண்ட நயினார் அவர்
30 கள் தம்பி கட்டியா பிள்ளை நல்ல த
31 ம்பியா பிள்ளை தீவுச்சீமை னா

32 ட்டார் வயித்திலிங்கய்யன் தெட்சி
33 ணா மூத்திப் பிளை நல்லம்பலத்தா
34 பிளை வொத்திகுர படையாச்சி பெரி
35 யகுடி நாசி தட்டி படையாச்சி அநவரு
36 ம் திருமணம் வைநல்லூர் பெருமணம்
37 சிவலோக தியாக சுவாமிக்கு சிலா
38 சாதினம் பண்ணிக்குடுத்தபடி சறுவமானியம்
39 உள்ளூரில் 21 அடி கோலால் நிலம்
40 சுவாமி கோவிலுக்கு தண்டேசுர நல்
41 லூரில் சறுவ மாநியம் நிலம் ½ பெரிய வ
42 குப்பு உள்ளூர்க் காவல் மான்யம் நிலம் சின்
43 ன வகுப்பு பாச்சிலடி காவல் மான்யம் நிலம்
44 ........ 21 அடி கோலால் சறு
45 வ மாநியம் நிலம் 2½ தண்டேசுர நல்லூர்
46 ருக்கு புறக்கட்டுக்கு வாரம் 100 க்கு
47 30.க்கு........ மகமை ஆச்சாள்புரம்
48 அளக்கும் மான்யம் காத்தியானிருப்பு
49 நென்மேலி மான்யம் ஆக மான்யம் 4 க்கு சீமை நா
50 ன்கு....... பொதுவில் கலத்துக்கு
51 மகமை 3 இந்த தற்மம் சந்திரா
52 ஆதித்தர் வரைக்கும் அனுபவிக்க ................
53 பரிபாலனம் ................

# 111. திருவெண்காடு சுவேதாரண்ய ஈசுவரர் கோயில் கல்வெட்டு

திருவெண்காடு சுவேதாரண்ய ஈசுவரர் கோயிலில் முதல் திருச்சுற்றில் அம்மன் கோயில் மேற்குச் சுவரில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

சோழ நாட்டின் காவிரி வடகரைத் தலங்களில் திருவெண்காடு ஒன்று. சீர்காழி வட்டத்தில் உள்ளது. தேவாரம் பாடிய மூவரும் பாடிய திருத்தலம்.

இந்தச் சிவன் கோயிலில் 15—5—1729 அன்று தஞ்சை மராட்டிய மன்னர் துக்கோசியின் ஆட்சிக் காலத்தில் பெரியநாயகி யம்மன் கோயில் மதிள் தண்டாயுத பண்டாரம் என்பவரால் புதியதாகக் கட்டப்பட்டது என்ற விபரம் இக்கல்வெட்டில் காணப்படுகிறது.

அப்போது அப்பகுதியில் இருந்த மராட்டிய அதிகாரிகள் பெயர்கள் இக் கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றன. அவர்கள் மத்தியஸ்தர் கானுசாகிப், சுபேதார் சொக்கலிங்க முதலியார், அபால்தார் கணபதியப்ப முதலியார் முதலியோர் ஆவர்.

கோயில் அலுவலர்கள் சிலரது பெயர்களும் குறிக்கப் பெறுகின்றன. திருப் பணி விசாரிப்பு முத்தப் பிள்ளை, அபிஷேகக் கட்டளை சின்னப் பண்டாரம், காறு பாறு சட்டையப்ப பண்டாரம் இவர்கள் கோயில் திருவாகிகள் ஆவர்.

## கல்வெட்டு

1 *உ சாலிவாகன சகாற்தம் 1652 வருஷ மேல் செல்*

2 *லாநின்ற சவுமிய ஸ்ரீ வைய்யாசி மீ 17 உ சுபயோக சுப க*

3 *றனமும் கூடின புண்ணிய தினம் சுக்கிற வாரத்தில்*

---

1. *A. R. E.* No. 521 of 1918.

4 உபய காவேரி மத்தியான சுவேதாரணியத்தில் பெரிய
5 னாயகி அம்மன் கோவில் மதிள் ஸ்ரீ துக்கோசி மகாராசா
6 சாயபு அவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணுற னாளை
7 யில் ஸ்ரீ கானு சாயபு அவர்கள் மத்திஷ்ஷத்தில் ஸ்ரீசுபை
8 ராமலிங்க முதலியார் அவர்கள் சொக்கப்ப முதலிய
9 ரர் அவர்கள் னாளையில் ஸ்ரீ அபால் கணபதியப்
10 ப முதலியார் அவர்கள் அபிஷேக கட்டளை தெண்
11 டாயுத பண்டாரம் கட்டி வச்சது திருப்பணி விசா
12 ரிப்பு முத்தப் பிள்ளை அபிஷேக கட்டளை சின்ன
13 பண்டார காறுபாறு
14 சட்டையப்ப பண்டாரம்

# 112. கீழ்வேளூர்க் கல்வெட்டு

தஞ்சை மாவட்டம், நாகப்பட்டினம் வட்டம் கீழ்வேளூர் அட்சய இலிங்கேசுவரர் கோயிலில் திருச்சுற்று மேற்குச் சுவரில் இந்த மராத்திக் கல்வெட்டு பொறிக்கப் பட்டுள்ளது.[1] மன்னர் துளசா கி. பி. 1775ஆம் ஆண்டு மே மாதம் 11ஆம் நாள் திருச்சுற்று மதில்களை அமைத்துத் திருச்சுற்றின்கீழ் கல் பாவித் திருப்பணிகளைச் செய்தார் என்று குறிக்கிறது.

கேய மாணிக்க வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துப் பிரமதேயம் கீழ்வேளூர் என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறுகிறது. கீழ்வேளூர் இப்போது கீவளூர் என்று மருவியுள்ளது. அட்சய இலிங்கேசுவரன் என்று இப்போது வழங்கப்பெறும் சிவபெருமான் பெயர் கேடிலி நாயனார் என்று கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. அம்மன் பெயர் சுந்தர குசாம்பிகை என்பது.

திருச்சுற்றுச் சுவரில் துளசாவின் உருவச்சிலையும் கல்வெட்டருகே செதுக்கப் பட்டுள்ளது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*சக ஆண்டு 1697 வைகாசி மாதம் முதல் நாள் ராசஸ்ரீ துளசா ராசி ராசே போஸ்லே சாகேப் அவர்கள் இந்தப் பிராகாரத்தைக் கட்டித் திருப் பணி செய்தார்கள்.*

1. *South Indian Inscriptions,* Vol. XVII No. 599 ; *A.R.E.* No. 516 of 1904.

# 113. நாகூர் தர்காக் கல்வெட்டு

நாகூரில் உள்ள தர்காவிற்கு அசரத் காதிர் ஒலி தர்கா என்று பெயர்.[1] அந்தத் தர்காவின் பெரிய கோபுரத்தின் வடக்கிலும் கிழக்கிலும் மராத்தி, பாரசீக மொழிகளில் அமைந்த இந்த இருமொழிக் கல்வெட்டு உள்ளது.[2]

மராத்தி மொழிக் கல்வெட்டு 17—2—1753ஆம் ஆண்டு சனிக்கிழமை வெட்டப்பட்டது. அந்தக் கோபுரம் கட்டுவதற்குத் துளசா மன்னர்நிலம் அளித்தார் என்றும், அவரது மகன் பிரதாபசிங் மன்னர் 11 நிலைகளுடன் உள்ள அந்தக் கோபுரத்தைக் கட்டினார் என்றும் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

சர்க்கேல் மானோசி செகதாப், நாகூர் கார்பார் அருணோசி போன்சலே, மத்யஸ்தர் சேக் அப்துல் மல்லிக் ஆகிய அலுவலர்கள் பெயர்கள் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன.

இன்றும் நாகூர் தர்காக் கந்தூரிக்குத் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தினர் சந்தனமும், சாதரா எனப்படும் பட்டுச் சால்வையும் அனுப்பி வருகின்றனர். அவைகளைத் தர்காவில் யானை, குதிரைகளுடன் வரவேற்பர். தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தின் நலனுக்கு அங்குப் பாத்தியா ஓதப்படும். இவை தஞ்சை மராட்டிய அரசர்களின் சமரச மனப்பான்மையைக் காட்டுகின்றன.

தஞ்சையிலும் முதல் மன்னர் ஏகோசி காலமுதல் பல மராட்டிய மன்னர்களும் படே உசேன் தர்கா போன்ற பல இசுலாமியர் நிறுவனங்களுக்குக் கொடைகள் அளித்தனர். சில தர்காக்களும் பள்ளிவாசல்களும் தஞ்சை மராட்டிய அரச குடும்பத்தின் பொறுப்பிலேயே இன்றும் உள்ளன.

---

1. Darga of Hadrat Qudir Wali.
2. *A. R. E.* No. 293 of 1963-64 ; *A. R. E.* NO. (D) 163 of 1963-64.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*சுபம். ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகம் 1674 கலியுகாப்தம் 4853 ஆங்கிரச வருடம் மாசி மாதம் 15ஆம் தேதி சுக்கில பட்சம் பவுர்ணமி அன்று அசரத் மீரா சாகிப் அவர்களுடைய சன்னிதிக்கு மேற்கு ஸ்ரீ போசள குலதீப மகாராசா ராசஸ்ரீ ஏகோசி அவர்கள் மகனான ஸ்ரீதுளசா ராசா சாகிப் அவர்கள் வணங்கி அளித்த இடத்தில், பசுக்களையும் அந்தணர்களையும் காப்பாற்றுகின்றவரான ஸ்ரீமத் சத்ரபதி மகாராசா ராசஸ்ரீ ஸ்ரீமந்த் பிரதாப சிம்ம மகாராசா சாகேப் அவர்கள் 11 நிலைகளையுடைய கோபுரத்தைத் தருமமாகக் கட்டி அளித்தார்.*

*சர்கேல் மானோசி செகதாப் அவர்கள், நாகூர் பந்தர் கார்பார் அருணோசி போன்சலே, மத்தியஸ்தர் சேக் அப்துல் மல்லிக் ஆகியோர் இந்த அறச் செயலை நிறைவேற்றினர்.*

*அசரத் சாகிப் அவர்களுடைய இடத்தில் பக்திபூர்வமாக இந்த ஆவணம் சந்திர சூரியர் உள்ளவரை நடக்கவேண்டும் என்று எழுதிக் கொடுக்கப்பட்டது. வமிச பரம்பரையாக இந்தக்கொடையை வளர்த்து வரவேண்டும் என்ற எண்ணத் துடன் இந்தக் கட்டிடம் கட்டப்பட்டது.*

### பாரசீகமொழிக் கல்வெட்டு :

பாரசீக மொழியில் மேற்கண்ட இதே செய்தி கோபுரத்தின் கிழக்குப் பக்கம் எழுதப்பட்டுள்ளது. மராத்திக் கல்வெட்டுக்கு ஒரு நாள் முன்பு 16—2—1753 அன்று பொறிக்கப்பட்டது.

இக்கல்வெட்டில் ஹிஜ்ரி ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது.

மானோசி செகதாப், அருணோசி போன்சலே என்று மராத்திக் கல்வெட்டில் பொறிக்கப்பட்ட பெயர்கள் பாரசீகத்தில் மானோசி ராவ், அருணோசி ராவ் என்று குறிக்கப்பட்டுள்ளன. அதேபோல் அசரத் மீரா சாகிப் என்று மராத்திக் கல்வெட்டில் உள்ள பெயர் இதில் அசரத் காதர் சாகிப் என்றும், மத்தியஸ்தர் என்பது அமீனா என்றும் பொறிக்கப்பட்டுள்ளது.

# 114-116. வேதாரணியம் கல்வெட்டுக்கள்

## 114. சேதுபாவா சுவாமிகள் கல்வெட்டு :

வேதாரணியம் வேதாரணியேசுவரர் கோயிலில் இரண்டாம் கோபுரத்தின் முன் தரையில் பதிக்கப்பட்ட கல்லொன்றில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.

மராட்டிய அரச குடும்பத்தின் குலகுருவாக விளங்கியவர் சேதுபாவா சுவாமிகள். அவர்கள் வழியினர் பரம்பரையாகவே இப்பெயரை வைத்துக்கொண்டு விளங்கியவர்கள்.

இவர் பெயரில் பட்டுக்கோட்டை வட்டத்தில் சேதுபாவா சத்திரம் என்ற சத்திரம் ஒன்று அமைக்கப்பட்டது. மன்னார்குடியிலும் தஞ்சையிலும் சேதுபாவாவிற்கு மடங்களும் தஞ்சை மராட்டிய அரசர்களால் கட்டித் தரப்பட்டன.

துளசா மன்னரும் (1763 - 1787), அவரது அமைச்சர் அண்ணாசிராவ் சேட்கே மகன் பகவந்த்ராவ் சேட்கேயும் சேதுபாவா சுவாமியின் மகன் பாவா கோசுவாமிக்கு அட்டாங்க வணக்கம் செய்வதாக இம்மராத்திமொழிக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. இதே கோயிலில் வீரகத்தி விநாயகர் சன்னிதியிலும், அம்மன் சன்னிதி முன்பும் கோடிக்கரையிலும்[1] இக்கல்வெட்டின் படிகள் உள்ளன.

### கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*ஸ்ரீமத் அத்வைதத்திற்கு முதன்மையாக விளங்கியவரான ராசஸ்ரீ சேது பாவா சுவாமியின் மகனான ராசஸ்ரீ பாவா கோசுவாமி அவர்களுக்கு*

*ராசாதி ராச மகாராச ராசேஸ்ரீ பிரதாப சிம்ம மகாராசாவின் மகன் ராசேஸ்ரீ துளசா மகாராசா அவர்களும், குரு பக்தியில் நிகரற்ற ராசேஸ்ரீ*

---

1. *A. R. E.* No. 1 of 1909.

*அண்ணாசி ராவ் சேட்கேயின் மகன் ராசேஸ்ரீ ஸ்ரீபகவந்தராவ் சேட்கே அவர்களும் தெய்வத்தின் பாதத் தாமரையில் தன் எட்டு உறுப்புக்களும் தரையில் படும் படியாக வீழ்ந்து எப்பொழுதும் வணக்கம் செய்து கொண்டிருக்கிறோம்.*

## 115. மானோசி குடும்பக் கல்வெட்டு :

வேதாரணியம் வேதாரணியேசுவரர் கோயில் இரண்டாம் கோபுர வாயிலின் தரையில் இது பொறிக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் திருப்பணி செய்தவர்கள் பலர் பெயர்கள் தமிழ், மராத்தி, தெலுங்கு எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளன. அவை நடைபாதையில் உள்ளமையால் பெரும்பாலும் தேய்ந்தும் அழிந்தும் காணப் படுகின்றன.

தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாப சிங்கின் (1739 - 1763) தளபதியும் அமைச்சருமாக விளங்கியவர் மானோசி செகதாப் என்பவர். அவர் பெயர் இவ்வாறு மானோசி சாதோ என்று இங்குக் குறிக்கப்பட்டிருக்கலாம். சாதவ் என்ற மராட்டிய இனப்பெயர் சாதோ என்று எழுதப்பட்டுள்ளது.

இக்கல்வெட்டின் மூலம் அவர் குடும்பத்தின் கால்வழியைக் கீழ் உள்ளவாறு அமைக்கலாம்.




### கல்வெட்டு

1 *மானோசி சாதோ*
2 *பிள்ளை நாகோசி சாதோ*
3 *தம்பி தாமோசி சாதோ*
4 *தாயார் கோகாயி அம்மாள்*

## 116. சுல்தான் சாவந்த ராவ் கல்வெட்டு :

வேதாரணியேசுவரர் கோயில் கிழக்குத் திருச்சுற்றில் உள்ள மண்டபத்தின் கிழக்குப் பக்கம் கீழே பதிக்கப்பட்ட கல் ஒன்றில் இம்மராத்திமொழிக் கல்வெட்டுக் காணப்படுகிறது.

வேதாரணியேசுவரர் கோயில் வழிபாடு நிருவாகம் முதலியவைகளை ரானோஜி மாவந்தராவ் அவர்களுடைய மகன் சுல்தான்ஜி சாவந்தராவ் அவர்கள்

மேற்பார்வையிட்டதாக இக்கல்வெட்டு மூலம் யூகிக்கலாம். ரானோ, சுல்தான் என்ற பெயர்கள் மரியாதையின் பொருட்டு ரானோஜி, சுல்தான்ஜி என எழுதப் பெற்றுள்ளன.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*வேதாரண்யம் வேதாரண்ய சுவாமி கோயிலைக் காப்பாற்றுவதற்காக ரானோஜி மாவந்த ராவ் அவர்களுடைய மகன் சுல்தான்ஜி சாவந்தராவ்....*

# 117. மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் நாகாபரணப் பொறிப்பு

இரண்டாம் சரபோசி மன்னர் (1798-1832) சிறந்த சிவ பக்தர். வட இந்தியத் திருத்தலங்களுக்கும், சோழ நாட்டுத் திருத்தலங்களுக்கும், தென் தமிழ் நாட்டில் இராமேசுவரம் போல உள்ள பல திருத்தலங்களுக்கும் தலயாத்திரைகள் மேற்கொண்டு வழிபட்டுப் பல கொடைகளை அளித்துள்ளார். அக்காலத்தில் வாழ்ந்த புலவர்களைக் கொண்டு தான் செய்த தல யாத்திரைகள் பற்றிச் சில நூல்களையும் இயற்றச் செய்துள்ளார்.

அந்த வகையில் 1817ஆம் ஆண்டு மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலுக்கும் சென்று வழிபாடியற்றிச் சிவபெருமானுக்கு 'நாகாபரணம்' என்னும் அணி ஒன்றைத் தன் பெயரில் கொடையாக அளித்துள்ளார். இன்றும் மராத்தி எழுத்துப் பொறிப்புக்களுடன் இந் நாகாபரணம் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் உள்ளது.[1]

மதுரையில் பிற்காலத்தில் பல மராத்திமொழி பேசும் அலுவலர்கள் இருந்து மராத்திமொழியில் மோடி எழுத்தில் பல ஆவணங்களை எழுதிவைத்துள்ளனர். அவற்றில் பல இன்னும் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்திலும், அழகர் கோயிலிலும் உள்ளன.

## மொழிபெயர்ப்பு

1 *தஞ்சாவூர்ச் சத்ரபதி சரபோசி*

2 *மகாராசா அவர்களுடைய உபயம் சாலிவாகன*

3 *சகம் 1739ல் ஈசுவர ஆண்டு*

---

1. பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா, *தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்*, பக். 201.

# 118. திருவரங்கம் அரங்கநாதர் கோயில் பதக்கப் பொறிப்பு

இரண்டாம் சரபோசி (1798-1832) சிறந்த சிவ பக்தராக இருப்பினும் வைணவக் கோயில்கட்கும் சமய வேறுபாடு இன்றித் திருப்பணிகள் பல செய்துள் ளார் ; கொடைகளும் பல அளித்துள்ளார்.

வைணவர்கள் 'கோயில்' என்று சிறப்பித்துப் பாராட்டக்கூடிய திருவரங்கம் கோயில் அரங்கநாதருக்குச் சரபோசி மன்னர் பொற் பதக்கம் ஒன்றைக் கொடையாக அளித்துள்ளார். அதில் அவர் பெயர் மராத்தி மொழியில் பொறிக்கப் பட்டுள்ளது.[1] சரபோசி மன்னரின் பெயர்பொறித்த இப் பதக்கம் இன்றும் திருவரங்கம் அரங்க நாதர் கோயிலில் உள்ளது.

தென்கரைப் பாண்டி குலாசனி வளநாட்டுத் திருவரங்கத் திருப்பதி என்றும், விழாவறா வீதி வளநாட்டுத் திருவரங்கம் என்றும் கல்வெட்டுக்களில் இவ்வூர் குறிக்கப் பெறும். பாண்டியர் கல்வெட்டுக்களில் பாண்டி குலபதி வளநாடு என்று வளநாட்டின் பெயர் மாற்றம் பெற்றுள்ளது.

## மொழிபெயர்ப்பு

1 *மகராச*
2 *ராசேஸ்ரீ சர*
3 *போசி ராசே*
4 *சாகேப்*

---

1. *South Indian Inscriptions*. Vol. XXIV No. 640 ; *A.R.E.* No. 347 of 1952-53.

# 119. மம்மங்கலம் கல்வெட்டு

தென் ஆர்க்காடு மாவட்டம், சிதம்பரம் வட்டம் மம்மங்கலம் என்ற ஊரில் ஒரு வயலில் நடப்பட்ட கல்லில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

ஏகோசி (1676-1684) தஞ்சையை ஆட்சி செய்தபோது அவருடைய சகோதரர் சிவாசியின் மூத்த மகன் சாம்போசி செஞ்சிக் கோட்டையை ஆட்சி செய்து வந்தார். அப்பொழுது பரங்கிப் பேட்டை சுபேதாராக இருந்த கோபால தாதாசி பண்டிதர் 6—7—1683ஆம் ஆண்டு துக்கோசி ராசா அய்யன் அவர்கள் உபயமாகப் பிடவூர் ஏரியினுள் உள்ள நிலத்தில் 800 குழி பாளையங்கோட்டை விசுவநாத சுவாமிக்குக் கொடையாக அளித்தார் என்று இக் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. அந் நிலத்தை நாட்டாராகிய கறலை கோநேரி என்பவர் வேளாண்மை செய்தார் என்றும் கல்வெட்டில் கூறப்படுகிறது.




அரசரும், கொடைக்குக் காரணமானவரும் தஞ்சை மராட்டியரோடு தொடர்புடைய மராட்டிய மரபினர் என்பதால் இக்கல்வெட்டு இங்கு வெளியிடப்பெறுகிறது.

---

1. *A. R. E.* No. 344 of 1958 - 59.

## கல்வெட்டு

1 சுபமத்து சகாத்தம் 1605 இதின் மேல் செல்
2 லாநின்ற ருத்துரோற்காரி௵ ஆடி மீ 6 ௳
3 ராசஸ்ரீ சத்திரபதி சாம்போசி மகாராசா
4 நாளையில் ராசஸ்ரீ சுபேதார் கோ
5 பால பண்டிதரய்யனவர்கள் பாளை
6 யங்கோட்டையில் யீசுரன் விசுவனாத சுவா
7 மிக்கு சறுவமான்யமாகக் கட்டளையிட்டது
8 பிடலூர் ஏரி உள்வாயில் கட்டளையிட்ட நி
9 லம் குழி 800 இந்த எண்ணூறு குழியும் ராய
10 ஸ்ரீ துக்கோசி ராசா அய்யன் உபயமாக
11 னாட்டார் கறலை கோநேரி பரிபாலனமாக
12 சந்திராதித்தவரைக்கும் சறுவமான்யமாக
13 நடப்பிக்கக் கடவராகவும் இந்த தற்மத்து
14 க்கு யாதாமொருவர் பிராமணர்
15 சூத்திரர் விகாதம் பன்றினால் கெங்
16 கை கரையிலே காராம் பசுவைக்
17 கொன்ற தோஷத்திலேயும் துலுக்க
18 ரானால் மக்கத்து பள்ளியிலே பன்றி அறு
19 த்த தோஷத்திலேயும் போகக் க
20 டவது

# 120. சிதம்பரம் கல்வெட்டு

சிதம்பரம் நடராசர் கோயிலில் உள்ள சிவகங்கைக் குளத்தின் தெற்குக் கரையில் உள்ள தூண் ஒன்றில் இக்கல்வெட்டு உள்ளது.[1]

மா வீரர் சிவாசியின் மகன் சாம்போசி செஞ்சிக்கோட்டையில் ஆட்சி நடத்தும் போது பரங்கிப்பேட்டை சுபேதார் கோபால தாதாசி பண்டிதர் இச் சிவகங்கைக் குளத்தையும் சிவன் கோயிலையும் 1886இல் திருப்பணி செய்ததாக இக்கல்வெட்டில் கூறப்படுகிறது.

இக் கோபால தாதாசி பண்டிதர் சிதம்பரத்திலிருந்து வெளியேறிக் குடுமியாமலையிலும் மதுரையிலும் 37 ஆண்டு 10 மாதம் 20 நாள் இருந்த நடராசரை மீண்டும் சிதம்பரத்திற்குக் கொண்டு வந்து தஞ்சை மராட்டிய மன்னர் சகசி உதவியுடன் சாம்போசி ஆதரவில் குடமுழுக்கு விழாவைச் செய்தவர்.

இக்கல்வெட்டு வடமொழிச் சுலோக அமைப்பில் தெலுங்கு, நாகரி, கிரந்த எழுத்துக்களிலும், தமிழ் மொழியிலும் எழுதப்பட்டுள்ளது. தமிழ்ப் பகுதி மிகவும் சிதைந்துள்ளது.

இந்தச் சுலோகத்தை இயற்றியவர் வேங்கடேச சாத்திரி என்று கூறப்பட்டுள்ளது.

## கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

*சத்திரபதி சகசி மன்னரின் பேரனும், சிவாசி மன்னரின் மகனும் ஆகிய சாம்போசியின் படைத்தலைவரும் தந்திரங்களில் வல்லவரும் ஆன வசிட்ட கோத்திரத்தைச் சேர்ந்த கோபால தாதாசி பண்டிதர் என்பவர் சக ஆண்டு 1607இல் இச் சிவகங்கைக் குளத்தையும் சிவன் கோயிலையும் கட்டித் திருப்பணி செய்தார்.*

---

1. *A. R. E.* No. 329 of 1958-59.

# 121. சினந்தல் கல்வெட்டு

வட ஆர்க்காடு மாவட்டம், போளூர் வட்டம் சினந்தல் சிவாலயத்தில் இக் கல்வெட்டு உள்ளது.[1]

ஆரணி சாகீர் தஞ்சை மராட்டியர் வசம் சில ஆண்டுகள் இருந்ததால் தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள் சில வட ஆர்க்காடு மாவட்டத்திலும் கிடைக்கின்றன. அவற்றுள் இக்கல்வெட்டும் ஒன்று.

முதலாம் சரபோசி மன்னர் காலத்தில் (1711-1729) 26—1—1714 அன்று சந்திராசர் பாளையம் என்னும் ஊரில் பேட்டையை உண்டாக்க நிம்போசி பண்டிதர் என்ற அலுவலர் சில உரிமைகளைச் சிலருக்கு அளித்த செய்தி இக் கல்வெட்டில் கூறப்படுகிறது.

பேட்டையில் குடியேறும் உழுகுடிகளுக்கும், பிற தொழில் குடிகளுக்கும், குடியேறிய முதலாண்டு சந்தை, ஆயம் போன்ற எவ்வித வரியும் இல்லை என்ற செய்தி இக்கல்வெட்டில் கூறப்படுகிறது. இதற்கு மூன்று பேர் சாட்சிக் கையெழுத்திட்டுள்ளனர்.

## கல்வெட்டு

1 *சுபமஸ்து விசைய*
2 *ஷுப தை மீ 29 திய*
3 *தி கிருஷ்ண பக்ஷம்*
4 *பஞ்சமி சுக்கிர வார*
5 *த்து அஸ்த நக்ஷ*
6 *த்திரத்தில் சந்திரா*

---

1. *A. R. E.* No. 81 of 1943.

7 திராசர் பாளையம் பே
8 ட்டை நடக்கிறத்
9 துக்கு நிம்போசி
10 பண்டுதேர் கட்டளை
11 யிட்ட விபரம்
12 உழுகுடி பல பட்டடை
13 குடிகளுக்கு குடிவந்த
14 நாள் முதலாண்டு
15 ஹூ த்துக்கு சறுவ
16 மானியம் சந்தை ஆ
17 யமும் யிந்தப்படி
18 சறுவ மானியம்
19 யிரிச கவுண்
20 டன் அற்சி
21 கர் உடையர்
22 அன்றாத்தை
23 அரியாங்குடி
24 வீரப்பன்

# 122. பெருமாபாளையம் கல்வெட்டு

வட ஆர்க்காடு மாவட்டம், போளூர் வட்டம் பெருமாபாளையத்தில் கங்காள மகாதேவர் கோயிலில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

தஞ்சை மராட்டியர் வரலாற்றில் இக்கல்வெட்டு மிகவும் முக்கியமானதொன்றாகும். முதலாம் ஏகோசி தஞ்சை அரசராக 1676ஆம் ஆண்டுதான் பட்டம் பெற்றார்.

ஆனால் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்ட காலம் 16—3—1665 ஆகும். அப்போது பீசப்பூர் சுல்தானின் படைத்தலைமை பூண்டு தமிழ் நாட்டுப் பகுதிக்குச் சிலமுறை ஏகோசி படையெடுத்து வந்துள்ளார். அம்முறையில் பீசப்பூர் முகம்மதியப் படைத் தலைவர்களுடன் ஏகோசி தஞ்சை வந்தபோது தஞ்சையில் தற்செயலாகத் தஞ்சை மராட்டிய அரசு நிறுவும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்றது.

இதில் ஏகோசி 'ராசா அய்யன்' என்று அழைக்கப் பெறுகிறார். ஏகோசியின் தந்தை 1664ஆம் ஆண்டு இறந்துவிடவே ஏகோசி பெங்களூரின் சாகிர்தார் ஆகி விட்டார். அதனால இவர் இவ்வாறு மரியாதையுடன் குறிக்கப்பட்டார் போலும்.

'ஏகோசி ராசா அய்யன்' அவர்களின் நலத்தின் பொருட்டு அவருடைய அலுவலர்கள் திம்மோசி பண்டிதரய்யன், திரியம்பக பண்டிதரய்யன், பாபோசி பண்டிதரய்யன் ஆகியோர் ஏற்கெனவே இருந்த ஓர் ஊர் எல்லையில் நிலத்தை வாங்கிப் 'பெருமான் பாளையம்' என்ற பெயரில் ஊர் ஏற்படுத்திச் சருவமானியமாக அளித்து மக்களைக் குடியேற்றினர். இவ்வாறு அரசரின் 'வாளுக்கும் தோளுக்கும் நன்றாக' அளித்த பல கொடைகள் பற்றிச் சோழர், பாண்டியர், ஒய்சளர் காலக் கல்வெட்டுக் களும் கூறுகின்றன.

கடைசிப் பகுதியில் கல்வெட்டின் பகுதிகள் சிதைந்துள்ளதால் முழுமையாகப் பொருள் விளங்கவில்லை.

---

1. *A. R. E.* No. 79 of 1942 - 43.

## கல்வெட்டு

1 ஸ்ரீ சுபமஸ்து சாலி வா
2 கன சகாற்த்தம் 1587
3 ன்மேல் செல்லாநின்ற
4 விசுவாவசு சம்மத்சரத்து மீன ந
5 ாயத்து பூறுவபக்ஷத்து புன
6 ற்பூச நக்ஷத்திரத்து தெசமியும்
7 பெத்த நாள் ஏக்கோசி றாச
8 ா அய்யன் அவர்களுக்கு புண்
9 ணியமாக ..........வி .........யன்பா
10 ளையத்து எல்லையில் பெ
11 ருமாள் பாளையம் என்றகப்பெ
12 .......... த்துக்கு திம்மோசி பண்டுத
13 ரய்யன் அவர்களும் திறியம்
14 பக பண்டுதரய்யன் அவர்க
15 ளும் பாபயோசி பண்டுதரய்ய
16 ரவர்களும் கட்டளையிட்டது பெரு
17 மாள்பாளையம் கவுமைக்கை கெ..
18 த்திருமண்ணாதோயர் நாச்சிக்
19 ............னை குடியான
20 .......... த்தேவருக்கு சறுவமானிய
21 மாக கட்டளை யிட்டோம் அப்பி
22 மத...........கக...... எரிப்பது.........என்று
23 ஒரு...... ... வரைநால் ... . ....
24 பணம் பிறத ....ாராள கொ
25 ண்டு...........

# 123. சிறுவலூர்க் கல்வெட்டு

சிறுவலூர் கைலாசநாதர் கோயில் அருகே நடப்பட்டுள்ள தனிக்கல்லில் இக் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.[1]

இது தஞ்சை மராட்டிய மன்னர் சகசி ஆட்சிக் காலத்தில் 21—8—1685ஆம் ஆண்டு செய்த ஒப்பந்தம் பற்றிய கல்வெட்டு ஆகும்.

சகசியின் உயர் அலுவலர் அனந்தோசி பண்டிதர் அவர்களின் காரியத்துக்குக் கர்த்தர் ஆகிய நல்லாப் பிள்ளை என்பவர் சிறுவலூரில் உள்ள பொதுமக்கள் அனைவரும் பயன்படுத்திக் கொள்ள நிலம் கொடை அளித்து அதற்கான ஒப்பந்தம் செய்து கொண்டதை இக்கல்வெட்டு குறிக்கிறது. இதற்கான கட்டளையை நல்லாப் பிள்ளை மூலம் அனந்தோசி பண்டிதர் அளித்தார் என்று கூறப்படுகிறது.

இந்த ஒப்பந்தப்படி அளிக்கப்பெற்ற நிலங்களை யாரும் விலைக்கு விற்கவோ வாங்கவோ கூடாது என்றும் கூறப்படுகிறது. இதை மீறி வாங்குவோருக்குத் தீமை வரும் என்று எச்சரிக்கப்பட்டுள்ளது.

நிலக் குத்தகை ஒப்பந்தம் 'கவில்' என்ற உருதுச் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. இச்சொல் முதலாம் ஏகோசியின் நாகை வெள்ளி ஏட்டிலும் பயின்று வருகிறது.

## கல்வெட்டு

1 குறோதி ஸ்ரீ ஆவ
2 ணி மீ 21 தி ஸ்ரீமது
3 சிஸ்ரீ அனந்தோசி பண்
4 டிதரய்யரவர்கள் காரி
5 யத்துக்கு கற்தரான.........நல்

1. *A. R. E.* NO. 93 of 1942-43.

6 லா பிள்ளை அவர்கள் சிறுவ
7 ளூர் மகா சனங்களுக்கு
8 கவில் குடுத்த விபரம் நடை
9 பங்கள னாட்..........
10 டு அடியே..........
11 ...........ட்டு விட வென்
12 பரமென்று அநந்
13 தோசி பண்டிதரய்ய
14 ரவர்கள் கட்டளை
15 யிடுகயில் சிறு
16 வளூர் எ.........
17 .......................
18 கு காட்டுவான் யென்று
19 சொன்னோம் யாதாமொரு
20 த்தர் வாங்க வேணுமென்றால்
21 கெங்கைக் கரையிலே காராம்
22 பசுவையும் மாதா பிதா..........
23 கொன்ற தோஷத்திலே போக
24 கடவது

# 124. வில்லியனூர் திருக்காமீசுவரர் கோயில் கல்வெட்டு

பாண்டிச்சேரி மாநிலம் வில்லியனூரில் உள்ள தொன்மைச் சிவாலயமான திருக்காமீசுவரர் கோயிலில் தெற்குக் கோபுரத்தின் உட்பக்கம் கிழக்குச் சுவரில் இக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.[1]

தஞ்சை மராட்டிய மன்னர் துளசாவிடம் (1763-1787) உயர் அலுவலராகப் பணியில் இருந்தவர் இராகோசி பண்டிதர் என்பவர். இவர் சில சமயங்களில் துளசாவின் தூதுவராகப் பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி அதிகாரிகளிடமும், ஆர்க்காட்டு நவாபிடமும் சென்றார்.

ஆர்க்காட்டு நவாப் ஆட்சிக்குட்பட்ட வழுதாவூர்ச் சீமையைச் சேர்ந்த நாட்டார் அனைவரும் 13—7—1772 அன்று ஒன்று சேர்ந்து இராகோசி பண்டிதரிடம், அன்னியர் ஆட்சியில் நின்று போன வில்லியனூர்ச் சிவன்கோயில் அறக்கட்டளைகள் அனைத்தும் குறைவின்றிப் பழையபடி நடைபெற ஆவன செய்ய வேண்டுமென்று முறையிட்டு வற்புறுத்திக் கேட்டுக் கொண்டமையை இக்கல்வெட்டுப் புலப்படுத்துகிறது. இக்கல்வெட்டில் பிட்சாபதி ராயரின் திருவிளக்குத் தர்மம் குறிப்பாகக் கூறப்படுகிறது.

## கல்வெட்டு

1 *சிவஞான தேசிகர் வாக்குப்படிக்கு*
2 *கர ஷூ த்துக்கு செல்லும் நந்*
3 *தன ஷூ ஆடி மீ 2 உ வழுதா ஊ சீ*

---

1. *A. R. E.* No. 203 of 1936-37;
புலவர் ந. வெங்கடேசன், *வரலாற்றில் வில்லியனூர்*, சேகர் பதிப்பகம், சென்னை. ப. 179.

4 மை கிணாசாரிக்கம் திருக்காமியீசு
5 ப்பர சுவாமியாருக்கு முந்னாள் பிஷி
6 ஷாபதி ராயர் திருவிளக்குக்கு தாரை
7 வாத்த தன்மம் துலுக்க திவானத்திலே
8 வழுதாஊர் சீமை நாட்டார் சகல
9 மாந பேரும் ராயோசி பண்டுதருக்கு
10 சொல்லி பூறுவா பூறுவம் நடந்தபடி
11 சாமியாருக்கு கட்டளையிட்டார்கள் யி
12 ந்த தன்மத்துக்கு யாதாமொருவர் அ
13 குதம் பண்ணினால் காராம் பசுவை
14 கொன்ற தோஷத்திலும் மாதா பி
15 தாவைக் கொன்ற தோஷத்திலே பே
16 ாகக் கடவராகவும் உ கெங்கைக் க
17 ரையிலே காராம் பசுவை கொன்ற
18 தோஷத்திலே போகக் கடவாராவும்

# செப்பேடுகள்

## I. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு-I

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | திருவாவடுதுறை ஆதீனம் |
| அரசர் | : | முதலாம் சரபோசி |
| காலம் | : | 13—1—1712 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 24 செ.மீ. × 17.5 செ.மீ. |

### அமைப்பும் செய்தியும் :

இச்செப்பேடு 'ஸ்ரீ ஆறுமுகஞ் சகாயம்' என்று தொடங்குகிறது.

முதலாம் சரபோசி (1711-1729) ஆட்சிக்காலத்தில் அய்யாவய்யன் அவர்கள் சுபாவில் திருவாரூர்ச் சீமையைச் சேர்ந்த நாகப்பட்டினம் பற்கணாவுக்குள் வாழும் அந்தணர்களும், நாட்டாரும், குடியானவர்களும் கூடித் திருவாவடுதுறை ஆதீனம் பண்டார சன்னிதி அவர்களுக்கு மகமைக் கொடை அளித்த விபரம் இச்செப்பேட்டில் எழுதப்பெற்றுள்ளது.

கடப்பு, கார், சம்பா, பசானம், சித்திரைக் கடப்பு ஆகிய விளைச்சலின் முதலுக்குச் சர்க்காருக்குக் கொடுக்கும் பொதுவில் கல நெல்லுக்கு உரி ஆகக் கோட்டை 1க்கு நாழி நெல் வீதம் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் அவர்களுக்குக் கொடுத்து வர ஒப்புக்கொண்டு செப்பேடு வெட்டித் தந்தனர்.

இந்த நெல்லைக்கொண்டு எப்பொழுதும் பரம்பரை பரம்பரையாக மகேசுவர பூசை அன்னதானம் முதலிய அறச்செயல் நடைபெற வேண்டுமென்ற விருப்பம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

கொடை அளிக்கப்பட்ட பகுதி அய்யாவய்யன் சுபா என்று குறிக்கப்படுகிறது. அய்யாவய்யன் என்பவர் முதலாம் சரபோசி மன்னரின் சுபேதாராக இருந்து தர்மாதி காரி, சர்கேல், திவான் என்று உயர் பதவிகளை வகித்தவர். தஞ்சையில் மேலவீதி

மூல அனுமார் கோயில் அருகே உள்ள தெருவில் அவர் வாழ்ந்தார். அந்தத் தெருவிற்கு 'அய்யாவய்யன் சந்து' என்றே இன்றும் பெயர் வழங்கப் பெறுகிறது. சீர்காழி வட்டத்தில் முதலாம் சரபோசி காலத்தில் வெட்டப்பட்ட கால்வாய்க்கு 'அய்யாவய்யன் கால்வாய்' என்று பெயர் வைக்கப்பட்டது.

## செப்பேடு

1 உ ஆறுமுகஞ் சகாயம்
2 சுவஸ்திஸ்ரீமன் மகாமண்டெலேசுரன் அரிய ராய விபாடன் பா
3 ஷைக்குத் தப்பு வராத சண்டன் கண்ட னாடு கொண்
4 டு கொண்ட னாடு குடாதான் பூறுவ பச்சிம தெஷ்ஷிண உத்தி
5 ர சமுத்திராபதி எம்மண்டலமுங் கொண்டு யீழந் துலை
6 ற கொண்டருளிய ராசாதி ராசன் ராச பரமேசுரன் ராச மா
7 த்தாண்டன் ராச கெம்பீரன் ராச மனோகரன் துலுக்கர்
8 தள விபாடன் துலுக்கர் மோகந் தவிழ்த்தான் ஒட்டியர் தள
9 விபாடன் ஒட்டியர் மோகந் தவிழ்த்தான் வன்னியர் வேடன்
10 ஆடும் பெருமான் தொண்ட மண்டலத் தாபனாசாரியன் சோ
11 ழ மண்டலப் பிறதிட்டாபனாசரியன் பாண்டி மண்டலப் பிற
12 திட்டாபனாசாரியன் ஸ்ரீபிறவட தேவ மகாராயர் விருப்பாஷி தே
13 வ மகாராயர் மல்லிகாற்சன தேவ மகாராயர் வேங்கிடபதி தேவ ம
14 காராயர் ஆனைகுந்தி வேங்கிடபதி தேவ மகாராயர் கிஷ்ண தேவ
15 மகாராயர் யிதுமுதலானவருகளுக்குப் பிறிதி ராசனாகிய தஞ்சை
16 நகராதிபன் போசல குல தீபன் ராசாதி ராசன் ராச குல தில
17 தன் யேகோசி மகாராசா சாயெபு அவர்கள் சகசி ம
18 காராசா சாயெபு அவர்கள் சரபோசி மகாராசா சாயெபு அவர்க
19 ள் யிவர்கள் பிறிதிவி ராச்சியம் பண்ணி யருளாநின்ற க
20 லியத்தம் 4812 சகாற்தம் 1633 யிதின் மேல்
21 செல்லாநின்ற கர ௵ தை மீ 15 உ ஸ்ரீ மது அய்யாவைய்
22 யனவர்கள் சுபையில் திருவாரூர்ச் சீமை நாகபட்ட
23 ணம் பற்க்கணாவுள்பட அசேஷ வித்து மகாசனங்களும் ந
24 ாட்டார் குடியானபெயர் சகலருங்கூடி திருவாவடுதுறை மட
25 ம் பண்டாரச் சன்னதியவர்களுக்கு மகமைச் சாதனப் ப
26 ட்டையம் எழுதிக் கொடுத்தபடி யித்தனாள் திருவாரூர்ச் சீ
27 மை நாகபட்டணம் பற்க்கணாவுள்பட மாகாணம் கிறாம
28 வழியுள்படி கடப்புக் கார்ச் சம்பாப் பிசானஞ் சித்திரைக் க
29 டப்பு வுள்படக் கண்டுமுதலுக்கு சறுக்காருக்குங் குடி
30 க்கும் பொதுவில் கலநெல்லுக்கு யுரி ஆக கோட்டை

31 |க்கு னாழிநெல் வீதம் கொடுத்து வருகிறோமென்று
32 னாங்கள் அனைவருஞ் சம்மதித்துப் பட்டயம் பண்
33 ணிக் கொடுத்தபடியினாலே அந்தப்படிக் கோ
34 ட்டைக்கு னாழிநெல் வீதம் யுள்ள நெல்லு வரு
35 ஷா வருஷம் வந்து வாங்கிக் கொண்டு ஆசந்தி
36 ராற்கஸ் தாகியாக மயேசுர பூசை அன்னதான முதலி
37 ய தற்மத்தை பரிபாலனம் பண்ணிக் கொண்டு
38 வருவார்களாகவு யிந்தப் படிக்குச் சம்ம
39 தித்து மகமை பண்ணிக் குடுத்தோம் திரு
40 வாரூர்ச் சீமை நாகபட்டணம் பற்க்கணாவு
41 ள்பட அசேஷ வித்து மகாசனங்களும் நா
42 ட்டார் குடியானபெயர் உள்ளிட்டாரோம்
43 யிந்தத் தற்மத்தை யாதாமொருதர் பரிபால

இரண்டாம் பக்கம்

44 னம் பண்ணிக் கொண்டு வருவார்களோ அ
45 வர்கள் காசியிலே அனேக கோடி கோதா
46 ன பூதான கன்னிகா தான பலத்தையும்
47 அனேகஞ் சிவலிங்கப் பிறதிட்டா பலத்தையு
48 ம் பெற்றுச் சுகமேயிருப்பார்கள் யிந்தத்
49 தற்மத்துக்கு அகிதம் நினைத்த பேர்கள் கெ
50 ங்கைக் கரையிலே கோகத்தி பிறமத்தி ப
51 ண்ணின தோஷத்திலே போக கடவோராகவும்

# 11. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு-2

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | திருவாவடுதுறை ஆதீனம் |
| அரசர் | : | முதலாம் சரபோசி |
| காலம் | : | 3—3—1712 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 35.5 செ.மீ. × 21 செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

செப்பேட்டின் தொடக்கத்தில் நடராசப் பெருமானின் திருக்கோலம் பிரபைக்குள் அழகிய வடிவில் தீட்டப்பட்டுள்ளது. ஊன்றிய திருவடியின்கீழ் முயலகன் உருவம் அழகிய முறையில் சித்தரிக்கப்பட்டுள்ளது. நடராசரின் இடப்பக்கம் சிவகாமி அம்மை கையில் மலர் தாங்கி நிற்கின்றார். வலப்பக்கம் சிவலிங்க வடிவம் காட்டப் பெற்றுள்ளது. நடராசரின் இருபுறமும் பக்கத்துக்கு ஒன்றாக இரண்டு குத்து விளக்குகள் உள்ளன.

பிற்காலச் செப்பேடுகளில் வழக்கப்படிக் கூறப்படும் மெய்க்கீர்த்தியின் பின்னர் சில விசயநகர அரசர் பெயர்கள் கூறப்பெறுகின்றன. பின்னர் மராட்டிய மன்னர்களில் முதல் இருவரான ஏகோசி (1676-1684), சகசி (1684-1711) ஆகியோரைக் கூறிச் செப்பேட்டின் கால அரசராகிய சரபோசி (1711-1729) கூறப்பெறுகின்றார்.

காலக்குறிப்புப் பஞ்சாங்க முறைப்படி மிகவும் துல்லியமாகக் கூறப்படுகிறது. திருவாவடுதுறை ஆதீனம் அம்பலவாணத் தம்பிரான் அவர்கள் வசம் திருவெண்காட்டில் மகேசுவர பூசை அன்னதானக் கட்டளைக்காகத் திருக்கடவூர்ச் சீமை வடக்கு வட்டம் ஏழு மாகாணத்தைச் சேர்ந்த நாட்டார் அதாவது பெருநிலக் கிழார்கள் அளித்த 100 கலம் நெல் கொடைபற்றிக் கூறப்படுகிறது. அதனை ஒப்புக்கொண்டு அந்தந்த மாகாணத்தின் சார்பில் சிலர் கையொப்பம் இட்டுள்ளனர்.

| மாகாணம் | நெல்-கலம் | கையொப்பம் |
|---|---|---|
| உள் மாகாணம் | 12 | கருப்பட்டியா பிள்ளை |
| திருக்குராச்சேரி மாகாணம் | 12 | சூரியமூர்த்தியா பிள்ளை |
| திருவிடக்கழி மாகாணம் | 12 | நாகநாத பிள்ளை |
| கொட்டுச்சேரி மாகாணம் | 11 | கருப்ப முதலியார் |
| நல்லாடை மாகாணம் | 30 | திருமலை அய்யர் |
| ஆக்கூர் மாகாணம் | 10 | ஆண்டியப்ப பிள்ளை |
| திருச்செம்பொன்பள்ளி மாகாணம் | 13 | தம்பா உடையார் |

இந்தக் கொடையை எப்பொழுதும் பரம்பரை பரம்பரையாக அளிப்பதாக எழுதிக் கொடுத்துள்ளனர்.

இந்தச் செப்பேட்டுச் செய்தியை எழுதியவர் குண்ணமருதூர்ப் பல்லவராய திருவேங்கிடம் என்பவர். சாட்சிக் கையொப்பமிட்டவர்கள் மணிக்கிராமச் சேரி பிறவிப் பெருமாள் பிள்ளை, பெருநாட்டுக் கட்டளை தானாபதி வேங்கிடத்தையன் ஆகியோர் ஆவர்.

## செப்பேடு

முதல் பக்கம்

1 சுப$_{4}$மஸ்த்து ஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரிய த
2 ள விபாடன் பாஷைக்குத் தப்பு வாராத கண்டன் மூவராய கண்
3 டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் எம்மண்ட
4 லமுங் கொண்டு யீழமுந் திறைகொண்ட ராசாதி ராசன் ராச மாத்தா
5 ண்டன் ராச பரமேசுரன் ராச கெம்பீர மகாராயராகிய விசையநகராதிப
6 தி வேங்கிடபதி மகாராயர் பிறவுட தேவ மகாராயர் கிஷ்டண ரா
7 யர் ஸ்ரீ ரெங்க ராயர் பிறுதிவி ராச்சியம் பண்ணி யருளாநின்
8 ற சகாத்தம் 1632 யிதன் மேல்ச் செல்லா நின்ற
9 து ஸ்ரீமது ராசாதி ராசராகிய ஏகோசி மகராச சாயபு சகசி ம
10 காராச சாயபு சரபோசி மகாராச சாயபு அவர்கள் ராச்சிய பரிபாலன
11 ம் பண்ணாநின்ற காலத்தில் கர ௵ பங்கூனி ௴ 5 உ சோமவா
12 ரமும் சுக்கில பட்சத்திற் சத்தமி $43\frac{1}{4}$ ரோகணி $14\frac{1}{2}$ பி
13 ரிதிநாம யோகம் $8\frac{3}{4}$ சதுட் பாத கரணம் $10\frac{3}{4}$ இப்படிப்பட்ட
14 சுபதினத்தில் ரிஷப லெக்கணத்தில் அன்பத்தாறு தேசத்தில் சி
15 லாக்கியமாயுள்ள உத்தம சோழ தேசத்தில் தலங்களில் சி
16 லாக்கியமான திருவெண்காட்டில்த் திருவாவடுதுறை

17 அம்பலவாண அய்யரவர்களுக்கு மகேசுர பூசை அன்
18 னதா கட்டளைக்கு திருக்கடவூர்ச் சீமை வடக்கு வட்டம்
19 ஏழு மாகாணம் நாட்டாரனைவருமேன் நெல் மக்மை
20 யுண்டுபண்ணித் தாம்பிர சாதனம் எழுதிக் குடுத்தப்படி
21 உள் மாகாணம்[1] நெல் 12 கலம் திருக்குராச்சேரி மாகாணம் நெல் 12 கலம்
22 திருவிடக்கழி மாகாணம் நெல் 12 கலம் கொட்டுச்சேரி மாகாணம்
23 நெல் 11 கலம் நல்லாடை மாகாணம் நெல் 30 கலம் ஆக்கூர் மாகாணம் நெல் 10 கலம்
24 திருச்செம்பொன்பள்ளி மாகாணம் நெல் 13 கலம் ஆக மாகா
25 ணம் ஏழுக்கு நெல் 100 கலம் இந்நெல்லு நூத்திக் கலமும் சந்திரா
26 தித்தர் வரைக்கும் புத்திர பவுத்திர பாரம்பரையாக கொ
27 டுத்துவரக் கடவோமாகவும் இந்தப்படிக்குச் சம்ம
28 தித்துத் தாம்பிர சாதனம் பண்ணிக் கொடுத்தப
29 டியினாலே இந்தத் தன்மத்துக்கு யாதாமொருவன்
30 விகாதம் பண்ணுகிறான் அவன் கெங்கைக் கரை
31 யிலே காராம் பசுவைக் கொண்ண தோழத்தில்
32 போவான் குண்ணமருதூர்ப் பல்லவராய திருவே
33 ங்கிடம் கையில் எழுத்து இதற்கு சாக்ஷி மணிக்கிறாம
34 ச்சேரி பிறவிப் பெருமாள் பிள்ளை பெருநாட்டு
35 க் கட்டளை தாணாபதி வேங்கிடத்தையன் உள்
36 மாகாணம் கருப்பட்டியா பிள்ளை நல்லாடை மாகாணம்
37 திருமலை அய்யன் திருக்குராச்சேரி மாகாணம்
38 சூரிய முற்தியா பிள்ளை திருவிடக்கழி

**இரண்டாம் பக்கம்**

39 மாகாணம் நாகநாத பிள்ளை ஆக்கூர் மாகாணம் ஆண்டி
40 யப்ப பிள்ளை திருச்செம்பொன்பள்ளி மாகாணம்
41 தம்பா உடையார் கொட்டுச்சேரி மாகாணம் கறுப்ப
42 முதலியார் வ

---

1. மாகாணம் என்ற சொல் மீ குறியீடு போலும், இறுதியில் மகர ஒற்றுடனும் குறிக்கப்பெற்றுள்ளது.

# III. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு-3

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | திருவாவடுதுறை ஆதீனம் |
| அரசர் | : | முதலாம் சரபோசி |
| காலம் | : | 20—4—1710 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 35.5 செ.மீ. × 21 செ.மீ. |

## அமைப்பும் செய்தியும் :

முன் செப்பேட்டின் தொடர்ச்சியாக அதன் பின்புறம் நான்கு வரிகளுக்குக் கீழ் இச்செப்பேடு வெட்டப்பட்டுள்ளது. செப்பேட்டின் இறுதியில் அழகான நந்தி யொன்று படுத்திருப்பது போலவும், அதற்குப் பின் இரு கவரிகளும் காட்டப் பட்டுள்ளன.

திருவாவடுதுறை ஆதீனம் அம்பலவாணத் தம்பிரானிடம் திருவெண்காட்டுக் கோயிலுக்கு அம்பலம் சீமை ஏழு மாகாணத்து நாட்டார் மகமை நெல் கொடுத்ததை இச்செப்பேடு விளக்குகிறது.

| மாகாணம் | நெல்-கலம் | கையொப்பம் |
|---|---|---|
| திருநள்ளாறு | 17 | நயினாத்தை, தியாகன், வயித்திநாதன் |
| நெடுங்காடு | 8 | ஊரார் வீரபத்திரன் |
| திருககண்ணபுரம் | 6 | தாண்டவராயன் |
| திருப்புகலூர் | 11 | உலகப்பன் |
| அம்பலம் | 10 | மயிலப்பன் |
| பேரளம் | 25 | கந்தப்பன், திருவம்பலம், விசுவலிங்கம் |
| திருமருகல் | 23 | முத்து நாயக்கர் |

இப்பட்டயம் எழுதியவர் முதல் பக்கத்தில் உள்ள முன் செப்பேட்டை எழுதிய குண்ணமருதூர்ப் பல்லவராய திருவேங்கிடம். சாட்சிக் கையொப்பமிட்டவர்கள் திருவிடைக்கழி செந்திப்பெருமா பண்டாரம், சுப்பிரமணிய பிள்ளை, திருக்கடவூர் நட்சத்திரமாலை கணபதி பண்டாரம், குத்தாலபிள்ளை ஆகியோர்.

## செப்பேடு

1 உ சுபமஸ்து ஸ்ரீமன் மகா மண்டலேசுரன்
2 அரிய தள விபாடன் ராசாதி ராசன் ராச மா
3 த்தாண்டன் ராச பரமேஸ்வரன் ராச கெம்பீர
4 ன் மகாராயராகிய விசையநகராதிபதி வே
5 ங்கிடபதி மகாராயர் கிழ்டணராயர் பிறுவிரா
6 ச்சியம் பண்ணீயருளாநின்ற சாத்தம் 16
7 32 இதின் மேல்ற் செல்லா நின்றது ஸ்ரீமது
8 ராசாதி ராசராகிய சரபோசி மகாராச சாயுபு
9 அவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணாநின்ற
10 காலத்தி விகுற்தி ஹூ ம் சித்திரை மீ 23 உ அன்பத்
11 தாறு தேசத்தில் சிலாக்கியமான உத்தம சோழ தேசத்தில் த
12 லங்களில் சிலாக்கியமான திருவெண்காட்டில் திருவா
13 வடுதுறை அம்பலவாண அய்யரவர்களுக்கு அம்பல சீ
14 மை ஏழு மாகாணம் னாட்டார் மகமைப் பட்டயம் குடுத்த
15 படி இந்த ஏழு மாகாணத்தில் வகை திருநள்ளாறு மாகாணம்[1]
16 நெல் 17 கலம் நெடுங்காட்டு மாகாணம் நெல் 8 கலம் திருக்கண்ண
17 புர மாகாணம் நெல் 6 கலம் திருப்புகலூர் மாகாணம் நெல் 11 கலம் அம்
18 பல மாகாணம் நெல் 10 கலம் பேரளா மாகாணம் நெல் 25 கலம் திருமரு
19 கல் மாகாணம் நெல் 23 கலம் ஆக மாகாணம் 7க்கு 100 கலம் இந்தப்படி
20 க்கு நூத்திக்கல நெல்லும் வாங்கிக் கொண்டு குரு பார
21 பாரம்பரையம் அனுபவித்துக் கொண்டு சுகத்திலே இ
22 ருப்பராகவும் இந்தப் பட்டயம் எழுதின நன்மைக்கு குண்
23 ண மருதூர் பல்லவராய திருவேங்கிடம் கையிலெ
24 முத்து இதுக்கு யாதாமொருவன் விகாதம் பண்ணின
25 வன் மகா பாவங்களை அனுபவிப்பராகவும் சா
26 ட்சி திருவிடக்கழி செந்திப் பெருமா பண்டாரம் சுப்
27 பிறமணீய பிள்ளை திருக்கடவூர் நக்ஷத்திரமாலை க

1. மாகாணம் என்ற சொல் மீ என்ற குறியீட்டுக்குப் பின்னர் ணம் என்று எழுதப்பெற்றுள்ளது.

28 ணபதி பண்டாரம் குத்தால பிள்ளை திருநள்ளாறு
29 மாகாணம் நயினாத்தை எழுத்து நெடுங்காடு மாகாணம் ஊ
30 ரவர் வீரபத்திரன் திருக்கண்ணபுரம் மாகாணம் தூண்ட
31 வராயன் திருப்புகலூர் மாகாணம் உலகப்பன் உள்
32 பட்டாரோம் அம்பல மாகாணம் மயிலப்பன் பேரள மாகா
33 ணம் கந்தப்பன் திருவம்பலம் விசுவலிங்கம் திரு
34 மருகல் மாகாணம் முத்துள னாயக்கரவர்கள் திருநள்
35 ளாறு தியாகன் எழுத்து வயித்தி னாதன் எழுத்து உ

# IV. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு-4

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்
அரசர் : துக்கோசி
காலம் : 11—3—1729
மொழி : தமிழ்
அளவு : 26 செ.மீ. × 15.5 செ.மீ.

## அமைப்பும் செய்தியும் :

அழகற்ற பெரிதும் சிறிதும் ஆன எழுத்துக்களுடன் ஒழுங்கின்றிப் பிழைகளுடன் இச்செப்பேடு எழுதப் பெற்றுள்ளது. கொடைச் செய்தி தெளிவாகவும் விளக்கமாகவும் இல்லை. வரிகள் நேராக எழுதப்பெறாமல் கலந்து எழுதப்பட்டுள்ளன.

திருவாவடுதுறை ஆதீனத்தில் பெரிய நமசிவாய அம்பலவாண பண்டாரம் அவர்களுக்குக் குத்தாலம்பேட்டை வணிகர்கள் சிலர் அளித்த கொடைகள் கூறப்படுகின்றன. அவர்களின் பெயர்கள் குறிக்கப் பெற்றுள்ளன. இராமலிங்க பண்டார சன்னிதி அவர்கள் திருவாவடுதுறையில் பெரிய பண்டாரம் நிலையில் இருந்தமையும் கூறப்படுகிறது. கட்டளைத் தம்பிரான்களும், பல துறவிகளும் ஆதீனங்களில் இருப்பது வழக்கம். ஆகையால் ஆதீனத் தலைவர் 'பெரிய பண்டாரம்' என்று அழைக்கப் பெறுகின்றார் போலும்.

## செப்பேடு

முதல் பக்கம்

1 சரபோ
2 சி மஹாராச ஸா
3 யப்பு துக்கோசி
4 மஹாறாச ஸாய
5 ப்பு அவர்களுக்கு மேல்

6 சகாப்தம் 1650 செல்லா னின்ற
7 கீலக ஹு பங்கு
8 னி மீ 13 உ திருவாவடு
9 துறை மடம் பெரிய நமசிவாய அம்பலவாண பண்
10 டாரச் ச
11 ன்னதிக்கு
12 குத்தாலம் குத்தாலம்பேட்டைப் பலர்
13 அருவாருடைய
14 கய் எழுத்து
15 சிதம்பரம்
16 கறுப்பு பிள்ளை
17 தம்பான்
18 திருவம்பலம்
19 றாமலிங்க பண்
20 டாரச் சன்னதி பெரிய பண்டார
21 மாயிருக்கையில்
22 பழமலை முத்தாச்சி
23 அழகப்பன்
24 வாஞ்சி
25 தில்லை

**இரண்டாம் பக்கம்**

26 சுபமஸ்து
27 பொதிகரர் மகன்
28 சித்தம்பலம் பணம்
29 திருமேனி
30 பெரிச்சியா
31 பிள்ளை விறுத்தா
32 சலம் ஒப்பிலா
33 முத்து சித்தம்
34 பலம்
35 தெய்வராய பிள்ளை
36 சூரியி முற்றிக் கு
37 ம்பன்
38 தில்லை செட்டி
39 தஞ்சா செட்டி
40 திருவாபரணம்

# V. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு-5

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | திருவாவடுதுறை ஆதீனம் |
| அரசர் | : | துளசா I |
| காலம் | : | 13—4—1729 |
| மொழி | : | தமிழும் வடமொழியும் |
| அளவு | : | 41 செ.மீ. × 17 செ.மீ. |

## அமைப்பும் செய்தியும் :

நீள்சதுர வடிவிலான இச்செப்பேட்டுத் தொடக்கத்தில் அழகிய சிறு சூலம் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது.

இராசராச வளநாடு, இராசேந்திர சோழ வளநாட்டில் பொய்யூர்க் கூற்றத்தில் சிறுநெல்லிக் கோட்டையில் இருக்கும் காணியுடைய அரையர்களில் சவ்வாய் விசைய ரகுநாத வாளாசி கிருட்டிண கோபாலர் மிழலைக் கூற்றம் திருப்பெருந்துறை, பவித்திர மாணிக்கச் சதுர்வேதி மங்கலம் ஆளுடைய பரம சுவாமிகளுக்கும், அம்மன் சிவயோக நாயகிக்கும் அளித்த நிலக்கொடை இச் செப்பேட்டில் குறிக்கப் பெற்றுள்ளது.

சவ்வாய் விசைய ரகுநாத வாளாசி கிருட்டிண கோபாலர் தஞ்சை மராட்டியர் காலத்திலிருந்த பாளையக்காரருள் ஒருவர். புதுக்கோட்டை மாவட்டம், அறந்தாங்கி வட்டம் சிங்கவனம் என்ற பாளையத்துக்கு உரியவர்கள். சேதுபதி மன்னர்கட்குரிய பல பட்டப் பெயர்கள் இவர்களுக்குக் கூறப்படுகின்றன. சில புதுப் பட்டப் பெயர்களும் உள்ளன.

அவர்களின் குடிக்காணியான கோயில்கோட்டை மாகாணத்தைச் சேர்ந்த சிறுபனையூரில் நிலம் கொடையாக அளிக்கப்பட்டது. அந்நிலத்திற்கு நான்கு எல்லைகளும் கூறப்பட்டுள்ளன.

அந்நிலத்திலிருந்து வரும் வருமானம் அதிகாலை வேளை அர்ச்சனைக்கும், நிவேதனத்துக்கும், திருவிளக்கு எரிப்பதற்கும் அம்பலத்தாடும் பண்டாரம் அவர்கள் வசம் அளிக்கப்பட்டது.

அளிக்கப்பட்ட கொடைக் கிராமத்தில் நன்செய், புன்செய், மாவடை, மரவடை, திட்டுத்திடல் ஆகிய எல்லாவற்றிலும் வரும் வருமானத்தில் அரண்மனை வாரம், குடிவாரம் ஆகியவை அளந்த நெல் போக மீதி வரும் வருமானத்தைப் பரம்பரை பரம்பரையாக என்றென்றைக்கும் அளிக்க வேண்டும் என்றும் செப்பேட்டில் பொறித்துள்ளனர். மீதி வரும் வருமானத்தைத் துண்டு வரும் வருமானம் என்று இச்செப்பேடு குறிக்கிறது.

இறுதியில் பிறர் செய்த அறத்தைக் காப்பாற்றுவதன் சிறப்புக் குறித்த வடமொழிச் சுலோகங்கள் இரண்டு உள்ளன.

## செப்பேடு

முதல் பக்கம்

1 *சுபஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் ஆதிய*
2 *ர் தளவிபாடன் பாஷக்கி தப்பு வராத கண்*
3 *டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடா*
4 *தான் பாண்டி மண்டல ஸ்தாபனாசாரியான் சே*
5 *ாழ மண்டல ஸ்தாபானாசாரியான் தொண்ட*
6 *மண்டல ஸ்தாமனாசாரியான் சண்ட பிறசண்*
7 *டன் யெம்மண்டலமு கொண்டு ஈளமும் கெ*
8 *ாங்கும் யாள்ப்பாணராய பட்டணமும் அளி*
9 *த்து கெசவேட்டை கண்டருளிய ராசாதி ரா*
10 *சன் ராசபறமேஸ்வரந் ராச மார்த்தாண்ட*
11 *ன் ராச குல திலகன் ராச வேசியர் புயங்கற*
12 *ன் ராசாக்கள் சிரோமணி தாலிக்கி வேலி கெ*
13 *ாட்ட மடக்கிய வய்யாளி ராயன் பட்ட மானங்*
14 *காத்தான் பரதேசி காவலன் துஷ்டரில் துஷ்ட*
15 *ன் துஷ்டற் தள விபாடன் யெதிரிட்டார் மோசந்*
16 *தவிள்த்தான் சிவ பூசா துரந்தரன் சேது மூல*
17 *ரட்சா ராச துரந்தரன் சதகோடி சூரிய பிற*
18 *காச நவகோடி நாராயணன் தென்கோடி காவ*
19 *லன் பொன் கோடி உதவிய பூலோக துரந்தர*
20 *ன் கவிவாணர்க் குதவி கலக்கம் தவிள்த்தவன்*
21 *அடுத்தவற்க் கனுகூலன் யெதுத்தவற் குடோரி*

22 முண்டர்க்கு முண்டன் சண்ட பிறசண்டன் சாமி
23 துரோகியள் கண்டன் தன தார தார பிர தாரச்
24 சகோதர சையித்திய சீதள சந்திர உதைய மு
25 க வதனன் சந்திர வங்குஷ சூரிய வங்குஷ வி
26 ல்லுக்கு விசையன் மல்லுக்கு வீமன் சொ
27 ல்லுக்கு அரிச்சந்திரன் போருக்கு ராமன் தேரு
28 க்கு திசரதன் குடைக்கி கற்னன் குதிரைக்கி ந
29 குலன் விசையநகர் பட்டணத்தில் ஒன்பது
30 வகை நவரெத்தின சிம்மாசனத்தில் யெழு
31 ந்தருளிய ஆதிமூல மேகவற்ன னானா சூராய வி
32 ருபாக்ஷி தேவ மகராயற் ஆனைகுந்தி தேவ மக
33 ராயர் ராயர் காறாயற் அச்சுதப்ப ராயர் வேங்
34 கிடபதி ராயற் புஜபிலராயற் கிஷ்ண ராயற் ஸ்ரீ
35 ரெங்க ராயற் அச்சுதப்ப னாயக்கரவர்கள் ரெகு
36 பதி நாயக்கரவர்கள் ஸ்ரீரெங்க கிஷ்ணம நாயக்க
37 ரவர்கள் விசைய ராகவ நாயக்கரவர்கள் இவாள்
38 ராச்சிய பரிபாலனம் பண்ணீ யருளாநின்ற பின்
39 போஸல வங்குஷம் யேகோஜீ மகராஜா ச
40 ாயெபு அவர்கள் சகஜீ மகராஜா சாயெபு அவ
41 ர்கள் சரபோஜீ மகராஜா சாயெபு அவர்கள் து
42 க்கோஜீ மகராஜா சாயெபு அவர்கள் பிறதாப
43 சிம்ம மகராஜா சாயெபு அவர்கள் துளசி மகர
44 ாஜா சாயெபு அவர்கள் பிறிதிவி ராச்சிய பரிப
45 ாலனம் பண்ணீ யருளாநின்ற சாலிவாஹ
46 ந சகாப்$_3$த$_4$ம் 1651 கல்யப்$_3$த$_4$ம் 48
47 30 இதின்மேல்ச் செல்லாநின்ற ஸெளம்ய நா
48 ம சம்வஸ்ஸரம் உத்தராயணம் வஸந்த ரிதுவில்
49 சித்திரை மீம் 16 உ சுக்குல பக்ஷம் சுக்குறவாரம்
50 ஸப்தமியும் அநுஷ நக்ஷெத்திரமும் சுபயோக சுப
51 கறணமும் கூடின சுபதிநத்தில் மிழலை கூத்தத்தில் ந
52 டுவில் கூத்தம் பிறம்மதேசம் தனியூற் திருப்பெரு
53 ந்துரை பவித்திர மாணிக்கம் சதுற்வேத மங்கலத்
54 திலிருக்கும் சுவாமி ஆளுடைய பரம சுவாமியாருக்
55 கும் அம்மன் சிவயோக நாயகிக்கும் ராஜ ராஜா வ
56 ளநாடு ராஜேந்திர சோழ வளநாடு பொய்யூற் கூத்து
57 பாப்பாகுடி நாடு சிறுநெல்லிக் கோட்டையிலிருக்கும்
58 காணீ உடைய அரையற்களில் சவ்வாய் விஜய ரெ

59 குனாத பாளாசி கிஷ்ண கோ$_3$பாலர் அவர்கள் பூதான ச
60 ரசனம் பண்ணி குடுத்தபடி சாசனமாவது நம்மு
61 தான குடிக்காணி கோவில்க்கோட்டை மகாண
62 த்தை சேந்த சிறுபனையூற் கிராமம் நாங்கெ

**இரண்டாம் பக்கம்**

63 ல்லையாவன கோரையாத்துக்கு கிழக்கு பி
64 ன்னத்தூற்ப் படாகை பெரிய சிறுபனையூருக்கு
65 தெற்க்கு நாச்சிகுளம் மேல்பாற்க் கெல்லைக்கி மே
66 மற்க்கு முத்துப் பேட்டை பாட்டைக்கிம் உப்பூற் கே
67 ரவில் யெல்லைக்கிம் வடக்கு இந்த னாங்கெல்லை
68 க்கி உள்பட்ட சிறுபனையூற் கிறாமம் இந்த கிறாமத்
69 தை =கோ$_3$பாலர் துணை= உஷக்காலத்
70 தில் அற்ச்சனை நெய்வேதனம் திருவிளக்
71 கு தற்மம் நடக்க வேண்டியத்துக்காக அம்
72 பலத்தாடும் பண்டாரம் அவர்கள் பாற்சமாக
73 ஸஹிரண்யோத$_3$க தா$_4$ராபூர்வமாஹ தா$_3$நம்
74 பண்ணி குடுத்தபடியினாலே மேலெழிதிய கி
75 றாமத்தின் நஞ்சை புஞ்சை மாவடை மறவடை
76 திட்டுத் திடல் சகல சமுதாயங்களிலும் வரப்படா
77 நின்ற வருமானத்தில் அறமனை வாரம் பிறக்கு
78 டி வாரம் போக துண்டு வார வருமானத்தைக் கொ
79 காண்டு மேலெழிதிய தற்மத்தை ஆசந்திறாற்
80 க்கஸ்தாயியாக ஆதீன பரம்பரையாக தற்மம் ப
81 ரிபாலனம் பண்ணிக் கொண்டு வருவாறாகவும்
82 தா$_3$ந பாலந யோர்ம்மத்$_3$த்$_4$யே தா$_3$நா ச்$_0$ரேயோ
83 நு பாலநம் தா$_3$நா ஸ்வர்க$_3$ மவாப்நோதி பால
84 நாத$_3$ச்ச்யுதம் பத$_3$ம். ஸ்வத$_3$த்தாத்$_3$வி கு$_3$ணம் பு
85 ண்யம் பரத$_3$த்தாநு பாலநம் பரத$_3$த்தாப ஹ
86 ரரேண ஸ்வத$_3$த்தாம் நிஷ்ப$_2$லம் ப$_4$வேத்.

# VI. திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு-6

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | திருவாவடுதுறை ஆதீனம் |
| அரசர் | : | அமரசிங் |
| காலம் | : | 26—6—1793 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 27 செ.மீ. × 20 செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

செப்பேட்டின் தொடக்கத்தில் நடுவே திருவிடைமருதூரின் தல விருட்சமான மருதமரக் கிளைகள் சிவலிங்கத்திற்குச் சார்த்தப்பட்டிருப்பது போன்ற காட்சி செதுக்கப்பட்டுள்ளது. இலிங்கத்தின் வலப்பக்கம் பார்வதி உருவமும், இடப்புறம் சூலமும் வரையப்பட்டுள்ளன. இரண்டாம் பக்கத் தொடக்கத்தில் இச் செப்பேட்டை அளித்த அஞ்சு சாதி பஞ்ச கம்மாளர் சாதியைச் சேர்ந்தவர்களின் குலதெய்வமான காளியின் உருவம் தீட்டப்பட்டுள்ளது.

அஞ்சு சாதி பஞ்ச கம்மாளத்தாருக்குரிய மெய்க்கீர்த்தி தொடக்கத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ள தஞ்சை மராட்டிய மன்னர் அமரசிங் (1787-1798), பிரதாபசிம்மன் (1739-1763) கத்தி கட்டி மணம்புரிந்து கொண்ட அன்னபூரணி என்னும் பெண் வயிற்றில் பிறந்தவர். பட்டத்து அரசியின் மகன் அல்ல. அமரசிங் பற்றி ஒருசில மோடி ஆவணங்கள் மட்டுமே உள்ளன. அவரைப் பற்றி ஒரு கல்வெட்டும் செப்பேடும் இதுவரை கிடைக்கவில்லை. இந்தச் செப்பேடே அவரைப்பற்றிக் கிடைத்த முதல் செப்பேட்டு ஆவணம் ஆகும்.

இரண்டாம் சரபோசி ( 1798 - 1832 ) மன்னர் ஆகும் பொருட்டு இவர் 1798இல் பதவி நீக்கம் செய்யப்பட்டுத் திருவிடைமருதூருக்கு அனுப்பப்பட்டார். அங்குள்ள அரண்மனையில் வாழ்ந்து 1802இல் காலமானார். இவருக்குப் பிரதாப

சிம்மன் என்ற ஒரு மகன் இருந்தார். இவருடைய அரண்மனை, சமாதி ஆகியவை திருவிடைமருதூரில் இன்றும் உள்ளன.

1793ஆம் ஆண்டு இவ்வூரில் உள்ள இரும்பு வேலை செய்யும் கொல்லர், மரவேலை செய்யும் தச்சர், பித்தளை போன்ற உலோக வேலை செய்யும் கன்னார், கல் வேலை செய்யும் சிற்பியர், பொன் வேலை செய்யும் தட்டார் ஆகிய அஞ்சு சாதி பஞ்ச கம்மாளத்தார் அனைவரும், எழுபத்து நான்கு ஆகாணத்தார்களும் திருவிடை மருதூரில் கூடிச் செய்த அறக்கொடை பற்றிய முடிவு இச்செப்பேட்டில் வெட்டப்பட் டுள்ளது. இக்கூட்டத்தில் தஞ்சை நகரில் வசித்த அச்சமூகப் பெரியவர்களும் கலந்து கொண்டனர்.

அஞ்சு சாதி பஞ்ச கம்மாளத்தாரின் சிறப்புக்கள் முதலில் தொகுத்துக் கூறப் பட்டுள்ளன :

1 காளிகா தேவி கமண்டலீசுவரி அருளும் பிரசாதமும் பெற்றவர்
2 தேவதா சம்பன்னர்
3 தெய்வ நட்டுவர்
4 அதி வீர சூரர்
5 அகத்தியரைச் சாபமிட்டுப் பொதியமா மலைக்கு அனுப்பும் வீரப் பிரதாபர்
6 அலைகடல் தன்னை இராமருக்காக அடைத்துக் கொடுத்தவர்
7 அமிர்த குண துல்லிகர்

என்பன அவை.

அஞ்சு சாதி பெரிய தனத்தார், வடுகத்தட்டார், கொல்லர், தச்சர், ஆகாணத் தார், தட்டார், காரியஸ்தர்கள், உள்ளூர் வெகுசனங்கள் அனைவரும் ஒன்றாகக் கூடி முன்பு அஞ்சு சாதி பெரியதனம் பருத்தியூர் இராமலிங்க கச்சிராயர் சமூகத் தலைவராக இருந்த நாளையில் திருவிடைமருதூர் மகாலிங்கமாகிய மருதப்ப சுவாமி யாருக்குப் பூசை மண்டபப்படிக்குத் தங்கள் சமூகத் தலைவரான கச்சிராயர் அவர் கட்குக் கொடுக்கும் வரியைச் சருவமானியமாக அளித்த கொடை பற்றிய பழைய செப்பேட்டைப் பார்த்தனர்.[1] இடையில் நின்றிருந்த அக் கொடையை மீண்டும் திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமியவர்கட்கு அளிக்க வேண்டும் என்று மேற்கண்ட அனைவரும் தீர்மானித்தனர்.

திருவிடைமருதூரில் நான்கு வீதிகளிலும் நிலையாக உரிமை பெற்று வாழும் இப் பஞ்ச கம்மாளத்தார் தவிர வெளியூர்க்காரர்கள் திருவிடைமருதூர் ஊருக்குள்

---

1. பஞ்ச கம்மாளர் திருமடங்கள் அமைந்துள்ள ஊர்களில் கச்சிராய பாளையம் என்பதும் ஒன்று.

வந்து கம்மாளர் தொடர்புடைய தொழில் செய்யக்கூடாது என்றும் ஏற்பாடு செய்து செப்பேட்டின் இறுதியில் பொறித்துள்ளனர்.

அனைவரும் சாட்சியாகக் கையொப்பம் இட்டுள்ளனர். விரப்ப ஆசாரி மகன் முத்தய்யன் என்பவர் இச்செப்பேட்டை வெட்டியதாகக் கூறப்பட்டுள்ளது.

## செப்பேடு

**முதல் பக்கம்**

1 உ சுபஷ்த்திறிமன் மகா மண்டலீசுவரன் அரிய த
2 ள விபாடன் பாஷக்கு தப்புவராய கண்டன்
3 மூவராய கண்டன் கண்ட னாடு கொண்ட னாடு குடுதான்
4 பூருவ தெட்சண பட்சிம றுத்தவன் சத்து சமத்திராதிபதி
5 யிம்மண்டலமும் ஈழம் யாழ்ப்பாணம் கொங்கு தாராபுரம்
6 கொச்சி மலையாளம் டில்லி யாகரை திறை கொண்டருளி
7 ய ராசாதி ராசன் ராச பரமேசுவரன் ராச குலசேகரன் ராச மா
8 த்தாண்டன் ராச தள விபாடன் ராச மோகம் தவிழ்த்தான்
9 துலுக்க தளவிபாடன் ஒட்டிய மோகம் தவிழ்த்தான் துங்க
10 ரெத்திந மாலிகாபரணன் சங்கீத சாயுட்சிய வித்தியா விநோ
11 தன் துஷ்ட்ட நிற்கிறகன் சிஷ்ட்ட பரிபாலன் அஷ்ட்ட லெஷ்சுமி
12 பொருந்திய மார்பன் ஸ்ரீ கட்டாரி சாளுவ ராயன் வெத்தி தார் மார்
13 பன் பூலோக தேவேந்திரன் புச பிலாக்கிறம உத்தண்ட மண்
14 டலீகர் கண்டன் மன்னரில் மன்னன் வணங்காமுடி
15 யோன் செல்லாநின்றபின் போசலை வங்கிழத்தில் ராச
16 மானிய ரா. ஏகோசி மகாராசா சாயபு சாசி மகராசா
17 சரபோசி மகாராசா துக்கோசி மகாராசா பிறதாபு சிம்
18 ம மகாராசா சாயபூ அவர்கள் செல்வ குமரராகிய துளசேந்
19 திற மகராசா சாயபூ அவர்கள் துணையென படைத்தோ
20 ன் சகோதரமாகிய அமரசிம்ம மகாராச சாயபூ
21 அவர்கள் ராச்சியம் பரிபாலனம் பண்ணி வருகிற நாளை
22 யில் யிதின்மேல் செல்லாநின்ற சாலியவாகன சக
23 ாற்தம் 1715 கலியுக சகாற்த ௵ 4994 ப்றமாதீஷ்சத்௵
24 ஸ்ரீமது காளீகாதேவி கமண்டலீசுவரி அருளும் பிற
25 சாதமும் பெத்தவரான தேவதா சம்பன்னரான தெய்
26 வ நட்டுவரான அதிவீர தூரரான அகத்தியரெ சாபமிட்டு
27 பொதிய மாமலைக்கு அனுப்பும் வீரப் பிறதாபரான அலை
28 கடல் தன்னை ஸ்ரீராமருக்காக அடைத்துக் கொத்தவரான அ

29 முற்த குண துல்லிகரான ஸ்ரீமது காளிகாதேவீ கமண்
30 டலேசுபரி அருளும் பிறசாதமும் பெத்த அதிக ஸ்த்தல
31 மாகிய தஞ்சநகரிலிருக்கும் அஞ்சு சாதி பஞ்சாளத்தார்
32 யெழுபத்து னாலு ஆகாணத்தார் அவர்களும் அஞ்சு சாதி
33 பெரியதிநம் சாந்துக்குட்டி யாசார்ரியாரும் அ
34 டுத்த காரீயஸ்த்தாளும் வடுக தட்டாருக்கு பெரியதி
35 னம் நரசய்ய பத்தர் னாகப்ப கச்சி ராயார் மகன் அப்பு கச்
36 சிராயர் கொல்லுக்கு பெரியதினம் பழணீ ஆசாரி
37 தச்சுக்கு பெரியதினம் பம்மைபய னாசாரி ஆகாண
38 பெரிய தினம் காக்கா பத்தர் தட்டாருக்கு பெரிய தி
39 னம் வீரப்ப ஆசாரி காரீயஷ்த்தாள் பெரிய தின
40 க்காறர் அனவரும் ஊறார் வெகுசனங்களு
41 ம்

**இரண்டாம் பக்கம்**

42 முன் ஊறாரவர்கள் அஞ்சு சாதி பெரியதினம் ப
43 ருத்தியூர் ராமலிங்க கச்சிராயார் நாளையிலே மற்த்தியாற்சு
44 னம் மருதப்ப சுவாமியார் பூச மண்டகப் படிக்கு ம
45 ற்த்தியாற்சுனத்திலிருக்கும் அஞ்சு சாதியாரும் கச்சிரா
46 யருக்கு குடுக்கிற வரியை சறுவ மாணீய தெத்தமும் பண்
47 ணீ தாம்பிற சாசனமும் பண்ணீ குடுத்திருக்கற பட்டைய
48 த்தை பாத்த ஷெ ஊறார் பண்ணீ குடுத்தபடி பிறமாதிஷ
49 த்ஸு ஆனி மீ 16 உ புதன்கிழமை ச்$_0$ரவணம் 54¾
50 வைதிறுதி 21 வணீசெ 16¾ தி$_3$வி 6 குடின சுபதின
51 த்தில் மற்த்தியாற்சுணத்திலிருக்கும் மருதப்ப சுவாமியாருக்கு
52 மற்த்தியாற்சுணத்திலிருக்கும் அஞ்சு சாதியாரும் கச்சிரா
53 யருக்கு குடுக்கிற வரியை ஊறார் வெகுசனங்களும்
54 கச்சிறாயரும் மனப்பூறுவமாய் பஞ்சபூத சாஷ்சியா
55 ய் சறுவ மானிய தெத்தமும் பண்ணீ தாம்பிற சாச
56 ன பட்டையமும் பண்ணீ குடுத்தபடியினாலே யி
57 ந்த தற்ம்மத்தை கல்லு கவேரியும் புல்லும் பூமியு
58 ம் சந்திறாள் சூரியாள் உள்ளவரைக்கும் புத்திறாள் பவு
59 த்திறாள் பாரம்பறையாய் யிந்த தற்மத்தை பரிபால
60 னம் பண்ணீக்கொண்டு வருவார்களாவும் யிந்த
61 தற்ம்மத்துக்கு யாதாமொருவர் விகாதம் பண்ணீனால்
62 காசியிலே கெங்கக் கரையிலே கோவதை ஸ்ரீவதை ப
63 ண்ணீன தோழத்திலே போகடவோறாகவும் சோழ ம

64 ண்டலத்திலே தேவாலையம் பிறம்மாலயத்திலே எ
65 த்திணை விளக்கு யெரியுதோ அத்திணை விளக்கை அவி
66 ச்ச தோழத்திலே போவார்களாகவும் மத்தியாசுணம்
67 நாலு வீதிக்கு உள்பட்ட காணியாச்சிக்காறர் தவிர அசல்க்
68 கிறாமத்தான் வந்து வேலை செயிய்யகூடாது
69 யிந்த ஒப்பம் அஞ்சு சாதி பெரியதிணம் சாந்து
70 குட்டி ஆசாரி கச்சி றாயார் ணாகப்ப ஆசாரி மகன் அப்பு க
71 ச்சி றாயன் நாரையன்[1] கைய்யிஎழுத்து பழணீ ஆசாரி கய்
72 யிஎழுத்து பம்பைய ணாசாரி கய்யிஎழுத்து
73 காக்கா பத்தர் கய்யிஎழுத்து வீரப்ப ஆசா
74 ரி கய்யிஎழுத்து யிந்த பட்டயம் வெட்டினம்
75 மைக்கி வீறப்ப ஆசாரி மகன் முத்தய்யன்
76 யிந்தபடி சாதியார் அனவரும் மத்தியாசுனத்தில் யி
77 ருக்குற அஞ்சுசாதி குடியிம்பேரில் யெங்கள் சாதிக
78 ட்டிலே வாங்குற யெப்பேர்பட்ட செலவு வரியும் த
79 ருமத்துக்கு சருவ மாநியம் பண்ணீ குடுத்தோம்

1. இவ்விடத்தில் நாரையன் என்ற பெயர் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது. இவர் வடுகத் தட்டார் ஆகையால் தெலுங்கில் கையொப்பமிட்டுள்ளார்.

# VII. தீபாம்பாள்புரம் வன்மீகநாதர் கோயில் செப்பேடு

இருக்கும் இடம் : தீபாம்பாள்புரம் வன்மீகநாதர் கோயில்
அரசி : தீபாம்பாள் பாயி
காலம் : 22—7—1713
மொழி : தமிழும் வடமொழியும்
அளவு : 22 செ.மீ. × 13.5 செ.மீ.

அமைப்பும் செய்தியும் :

முதல் பக்க முகப்பில் சிறு சூலக்குறியுடன் இந்தச் செப்பேடு தொடங்குகிறது.

முதல் ஏகோசியின் மனைவி தீபாம்பாளின் பெயருள்ள ஊர் தீபாம்பாள் புரம். அங்குள்ள மங்களநாயகி உடனமர் வன்மீகநாதர் தியாகராசர் கோயில் மராட்டியர் திருப்பணி பெற்ற கோயில்.

சங்க காலத்திலிருந்து சிறப்புடன் விளங்கிய கோயில்வெண்ணியில் வாழ்ந்த அந்தணர்கள் அனைவரும் தங்களுக்கு உரித்தான கிரம்பை நிலத்தைத் தீபாம்பாள் புரம் வன்மீகநாதர் தியாகராச சுவாமி மங்கள நாயகிக்கு அர்த்தசாமக் கட்டளைக் காகக் கொடையாக விட்டனர்.

14 அடிக் கோலால் அளந்து எட்டுவேலி நிலம் கொடையாகக் கொடுக்கப் பட்டது. கொடுத்த நிலத்திற்கு எல்லைகளும் கூறப்பட்டுள்ளன.

அயோத்திராமன் என்பார் இந்தச் செப்பேட்டைச் செய்துள்ளார். வெங்கிட் டண அய்யங்கார், கிருட்டிணன், வருதன், இராகவன், கோதண்டய்யங்கார், இராச கோபாலய்யன், நீலமேகன், ஆண்டமார் குப்பன் ஆகியோர் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளனர். கோயில்வெண்ணிக்குப் பாவோசி கெங்காதரபுரம் என்று பெயர் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூர் வலங்கைமான் வட்டத்திலுள்ளது.

செப்பேட்டின் இறுதியில் மாதுஸ்ரீ தீபாம்பாபாயி அம்மாள் தர்ம்ம சாசனம் என்று எழுதப்பட்டுள்ளது. பிறர் செய்த தானத்தைக் காப்பதன் இன்றியமையாமையைப் பற்றிய இரண்டு வடமொழிச் சுலோகங்கள் இறுதியில் அளிக்கப் பட்டுள்ளன. இச்செப்பேடு பிஸ்ழகளுடன் எழுதப்பட்டுள்ளது.

## செப்பேடு

முதல் பக்கம்

1 மங்களனாயகி கோவில் வெணீ
2 நிலத்திட்டம். ஸ்வஸ்திஸ்ரீ சாலியவாகண
3 சகாப்பித்தம் 1635 கலியாப்த்த
4 ம் 4810 இதின் மேல் செல்லா னி
5 ன்ன விசெய ஞூ ஆடி மாதம் 22தீ தீப
6 ாம்பாபுரம்பதி அம்மாள் அரசுகுடி
7 தேவஸ்த்தானம் வல்மீக்கனாத ஸாமி
8 தியாக ராச ஸ்வாமி மங்களனாயகி அ
9 ம்மன் இறைகளுக்கு அறுத்த ஜாம கட்ட
10 ளை நடத்த வேண்டிய காரியம்ங்களுக்கு கே
11 ாவில் வெண்ணீக்கு பிறதிநாமமன பாவோசி
12 கெங்காதர புரத்தில் இகும் அசேழ வித்து மகாசன
13 ங்கள் அனவரும் கரம்பை தான சாஸநம் பண்
14 ணிக்குடுத்தபடி இதனால் எங்களுதான கரம்பை
15 சாலைக்கரைக்கி தெற்க்கு ஈச்சங்குளத்துக்கு வடக்கு
16 கிறாயித்தாக்கு வரகு கொலை கீழ்வரப்புக்கு கிழக்கு
17 பாகக்குளம் செங்கமோட்டு வரகு கொலைக்கு மே
18 மற்கு இந்த னாங்கெலைக்கி உள்பட்ட நிலம் பதினா
19 லடி கோலால் நிலம் 8வி இந்த எண்வேலி
20 நிலம்மும் வல்மீகனாத சுவாமிக்கு அற்த்த சாம
21 கட்டளை பூசைக்கி தான சாசனம் பண்ணிக்குடு
22 த்தபடியினாலே ஆச்சந்திராற்க்கமாக கல்லும்
23 காவேரி புல்லும் பூமி உள்ள மட்டுக்கும்
24 அனுபவித்து கொள்ளக் கடவறகவும்
25 இந்த தற்ம்மத்துக்கு யாதாமொருவன்
26 விகாதம் பண்ணுக்குறானோ அவன்
27 கெங்கக் கரையிலே காராம் பசுவை கொ
28 ன்ன தோழத்திலு குரு துரோகக்திளே சிவது
29 ரோகம் பண்ணின தோழத்திலு போகக்கட
30 வேனாகவும் இந்த தறும்மத்துக்கு யாதாமொ

31 ருவன் அனுகூலம் பண்ணுகுறானோ அ
32 வன் காசியிலே கோடி சிவலிங்க பரி
33 திஷ்டை$_2$யும் விஷ்ணு பரிதிஷ்டை$_2$யும் பண்ணி
34 ன பலத்தையும் ப$_3$ஹ்ம பரிதிஷ்டை$_2$யும்

**இரண்டாம் பக்கம்**

35 கோடி கன்னிகாதானம் பண்ணின
36 பலத்தை அடயக்கடவனாகவும் இந்தப்படிக்கி
37 சிவ தற்ம்மம் தான சாசனம் பட்டயம் பண்ணி
38 க் குடுத்தோம் வல்மீகநாதற் தியாக ராச சுவ
39 ாமி மங்கள னாயகி அம்மன் அவற்க
40 ளுக்கு பாவோசி செங்காதாறபுரம் அசே
41 ழ வித்து மகாசனங்களும் தானாசாஸனம்
42 பண்ணிக் குடுத்தோம் இந்த சாஸன பணின
43 நல்மைக்கி அயோத்தியா ராமன் கயிஎழு
44 த்து வெங்க்கிட்ன அய்யங்கார். கிருஷ்ணந்
45 வருதன். ராக$_4$வன். கோதண்டய்யங்
46 கார் றாசகோபாலயன் னீலமேகன். ஆ
47 ண்டமார் குப்பன். ஞ தா$_3$ந பாலந
48 யோர்மத்$_3$த்$_4$யே தா$_3$நா ச்$_0$ரெயோநு பா
49 லநம். த$_3$நாத் ஸ்வர்க$_3$ மவாப்நோதி பா
50 லநாத$_3$ச்சூதம் பத$_3$ம். ஸ்வத$_3$த்தாம்த்$_3$வி
51 கு$_3$ணம் புண்யம் பரத$_3$த்தாநு பால
52 நம் பரத$_3$த்தாப ஹரேண ஸ்வத$_3$
53 த்தா நிஷ்பல ப$_4$வேத். மாதுஸ்ரீ
54 தீ$_3$பா பா$_3$யி அம்மாள் த$_4$ர்ம்ம சா$_0$
55 ஸநம்.

# VIII. கும்பகோணம் நாகேசுவரசுவாமி கோயில் செப்பேடு

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | கும்பகோணம் நாகேசுவரசுவாமி கோயில் |
| அரசர் | : | துக்கோசி |
| காலம் | : | 5—4—1734 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 35.3 செ.மீ. × 18.8 செ.மீ. |

## அமைப்பும் செய்தியும் :

நீள் சதுர வடிவில் அமைந்துள்ள இச்செப்பேட்டின் இரண்டாம் பக்கம் மட்டுமே கொடைச் செய்தி எழுதப்பட்டுள்ளது. முதல் பக்கத்தில் கஜலட்சுமியும் அவருடைய இரு பக்கங்களிலும் சூரியன், சந்திரனும், பின்னர் வரிசையாக நந்தி, நடராசர், விநாயகர், சிவகாமி அம்மன், பூதேவி சீதேவியுடன் சாரங்கபாணியும் ஒரு வரிசையில் புடைப்புச் சிற்பமாகத் தீட்டப்பட்டுள்ளனர்.

இரண்டாம் வரிசையின் இரு ஓரங்களிலும் நந்தியும் ஆஞ்சநேயரும் செதுக்கப் பட்டுள்ளனர். அவர்கட்கு இடையிலும் அடுத்த நான்கு வரிசைகளிலும் அக்காலத்தில் வழக்கில் இருந்த 40க்கும் மேற்பட்ட பல்வேறு இசைக்கருவிகள் மிகவும் எழிலுடன் தீட்டப்பெற்றுள்ளன. 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சோழ நாட்டுப் பகுதியில் வழங்கிய இசைக்கருவிகளின் மாதிரிகளை மிகவும் அழகுடன் இச்சிற்பங்கள் நமக்குக் காட்டுகின்றன.

இந்நாகேசுவரசுவாமி கோயில் திருநாவுக்கரசர் தேவாரப் பதிகம் பெற்றது. இதன் பழம்பெயர் குடந்தைக் கீழ்க்கோட்டம் என்பது. இச்செப்பேட்டில்

இக்கோயில் 'மடந்தை பாகர் கோயில்' என்று குறிக்கப் பெறுகிறது.[1] கூத்தனார் என்பதற்கேற்ப இச்செப்பேட்டில் நாகேசுவரர் நடராசப் பெருமான் வடிவத்திலேயே காட்டப்பட்டுள்ளார்.

மன்னர் துக்கோசி காலத்தில் கும்பகோணம் சிவன் கோயில், திருமால் கோயில் நாகபாசத்தார்[2] அனைவரும் தருமமடம் ஒன்றை உருவாக்க நினைத்துத் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி சமஸ்தானப் பகுதியில் உள்ள நாகபாசத்தார் அனைவரையும் அழைத்துக் கும்பகோணத்தில் உள்ள நாகேசுவரன் கோயில் வடக்குவீதி தெற்குப் பக்கம் மருளைய மடத்துக்கும், பந்தல்கார ரங்கன் மனைக்கும் இடையில் நிலத்தை வாங்கி மடம் கட்டி அந்த மடத்தைக் காவேரி பண்டாரம் என்பவருக்குக் கொடையாக அளித்து அதற்குச் செப்பேடும் வெட்டித் தந்தனர்.

நாகபாசத்தார் நிலையாக இந்த மடத்திற்குச் சில கொடைகளை அளிப்பதாகவும் ஒப்புக்கொண்டு செப்பேடு வெட்டித் தந்தனர்.

பாடுவோர், வீணை வாசிப்போர், வேடிக்கையாக நடிக்கும் ஆசியக்காரர், வேடமணிந்து நடிப்போர் ஆகியோர் ஆண்டு 1க்கு 1 பணமும், நட்டுமுட்டுக்காரர், பெரிய மேளம், தாசிகள், சேவகர் ஆகியோர் 1 பணமும், இவர்களே பொதுவாக தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்களில் நடைபெறும் கோயில் விழாக்களுக்கு விழா 1க்கு 1 பணமும், நவராத்திரிக்கு 1 பணமும், வடுக மேளம் வாசிப்போர் சோடி 1க்கு 5 பணமும், பெருமக்கள் வீடுகளிலும் மடங்களிலும் பிற இடங்களிலும் தொழில் செய்யும் நாகபாசத்தார் சோடி 1க்கு 2 பணமும் தர்மத்துக்கு உட்பட்டவர் அனைவரும் சந்திர சூரியர் உள்ளவரை இக்கொடையைத் தவறாமல் அளித்துவர வேண்டும் என்றும் எழுதித் தந்துள்ளனர்.

மடத்தில் பிச்சை முட்டிக்கும்,திருவிளக்கு எரிப்பதற்கும்,மகேசுவர பூசைக்கும், நந்தவனத்துக்கும், பிள்ளையார், சிவலிங்க வழிபாட்டுக்கும், துவாதெசிக் கட்டளைக்

---

1. 'துடிகொண்ட இடைமடவாள் பாகங் கொண்டு
சுடர்ச்சோதிக்கு அடிச்செம்பொன் மலைபோ லிந்நாள்
குடிகொண்டென் மனத்தகத்தே புகுந்தார் போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே'

*திருநாவுக்கரசர் தேவாரம்* (VI - 75-6;)

2. 'நாகபாசத்தாரில் சிவக்கொழந்தை நட்டுவன், மத்தளம்
வீரப்பன், காளியண்ணன், சங்கீதம் முத்துக்கருப்பன், தாநப்பன்,
நாகசுரம் நல்லையன், பொன்னையன், தவுல் குப்பன்,
நாராயணன், தாசிகள் முத்துரத்தி, பாடகத்தி, வள்ளிமுத்து'

*'திருமுருகன் பூண்டிச் செப்பேடு'*

தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல் துறைத் தொகுப்பு (1985).

கும் கொடை அளிக்க வேண்டும். சபாபதிக்கு ஆண்டுக்கு இரண்டுமுறை திருக்கண் சாத்த வேண்டும்.

சாரங்கபாணி சுவாமிக்குத் தை மாதம் உத்தியான மண்டபப்படி நடத்த வேண்டும்.

## செப்பேடு

1 சுபமஸ்த்து
2 ஸ்ரீமன் மகாம
3 ண்டலேசுவரன்
4 ராசாதி ராச ராச ப
5 ரமேசுவரனான சீ
6 ரங்க ராயர் பிறதி
7 வி ராச்சிய பாரம் ப
8 ண்ணீ யருளாநி
9 ன்ற கலி ௵ 48
10 26 சாலிவாகன சகாப்த்தம்
11 ௵ 1656 இதன் மேற் செல்லாநி
12 ன்ற ஆனந்த ௵ சித்திரை மீ 7 உ சுக்கிற வா
13 ரம் திரியோதெசி அஸ்த்த நஷ்ஷத்திரம்
14 சித்திய நாம யோகம் தைதுல வாகரணம் கூடி
15 ன சுபதினத்தில் ராசஸ்ரீ துக்கோசி மகாராசா சாயிபு அவர்க
16 ள் ராச்சிய பாரம் பண்ணுகிற நாளயில் கும்பகோணம் சிவஸ்த
17 லம் விஷ்ட்டுணு ஸ்த்தலம் ரெண்டு கோவில் நாகபாசத்த
18 ாரும் தற்ம மடமுண்டாக்க நினைத்துத் தஞ்சாவூர் திருச்
19 சிராப்பள்ளி ரெண்டு சமஸ்தாநம் நாகபாசத்தாரையும்
20 அழைத்து வைத்துக் கொண்டு மடந்தை பாகர் கோ
21 வில் வடக்கு வீதி தென் சிறகில் மருளய மடத்துக்கு
22 கிழக்கு பந்தக்காற ரங்கன் மனைக்குக் மேற்கு[1] மத்தியி
23 ல் மனை விலைக்கிறையம் கொண்டு மடங்கட்டி ம
24 டங் காவேரிப் பண்டாரத்துக்குத் தாறா தெற்த்தம் ப
25 ண்ணீ தற்ம சாதனங் குடுத்து வற்த்தனை யுண்டா
26 க்கினது ௵ 1க்கு கவீசுவராள் வீணைக்காறர் ஆசிய
27 க்காறர் வேஷக்காறர் வகைக்கு பணம் 1 நட்டுமுட்டுக்கா

1. கிழக்கு என எழுதி மேற்கு என்று திருத்தப்பட்டுள்ளது.

28 றர் பெரிய மேளம் தாசியள் சேவுகம் । க்கு பணம் । பெ
29 ாதுவில் தை மாசி பங்குனி சித்திரை வையாசி மீ
30 திருவிழாவுக்குத் திருவிழா பணம் । நவராத்ரிக்கு பணம் । வடுக
31 மேளம் சதை । க்கு பணம் 5 ஒரு பிரபுக்கள் வீடு மடங்கள்
32 மற்றவிடத்தில் தொழிற் பண்ணுகிற நாகபாசம் சதை
33 । க்கு பணம் 2 இந்தப்படி நாலு தேசத்தில் தற்மத்துக்கு
34 டந்தையானவர் சகலருங் குடுத்து வருவாராகவும்
35 சத்திராதித்த ருள்ளவரைக்கும் வற்த்தனை வாங்கி
36 க் கொண்டு மடத்தில் பிட்ஷைமுட்டி திருவி
37 ளக்கு மயேசுவர பூசை பிள்ளையார் சிவலி
38 ங்கம் நந்தவனம் துவாதெசி கட்டளை சபாப
39 தி வருஷத்தில் ரெண்டு விசை திருக்கன் சாத்துகிற
40 தும் சாரங்கபாணி சுவாமிக்கு தை மீ உத்தியான
41 மண்டபப் படியும் நடப்பிச்சுக் கொள்வது இந்த த
42 ற்மம் விசேஷித்து உண்டாக்கினவர் இகலோ
43 க பாக்கியம் பரலோக மோட்சம் பெறுவாராகவும்
44 யிந்த தற்மத்துக்கு யாரமொருதர் குடாத
45 பேற்கள் கெங்க கரையிலே கராம் பசுவை[3]........

3. 44, 45ஆம் வரிகள் பிற்காலத்தில் எழுதப்பெற்றுள்ளன.

# IX. தஞ்சாவூர் மேலவாயில் சுப்பிரமணியர் கோயில் செப்பேடு

| | | |
|---|---|---|
| இருக்கும் இடம் | : | தஞ்சாவூர் மேலவாயில் சுப்பிரமணியர் கோயில் |
| அரசர் | : | பிரதாப சிங் |
| காலம் | : | 21—3—1757 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 32.5 செ.மீ. × 19 செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

அழகான கைப்பிடியுடன் நீள் சதுர வடிவில் அமைக்கப்பட்ட இச் செப்பேட்டின் தொடக்கத்தில் நடுவில் சுப்பிரமணியப் பெருமானும், மயில் வாகனமும், இரு புறமும் வள்ளி, தெய்வயானையும் அழகிய இரட்டைக் கோடுகளுக்குள் மண்டபத்தினுள் இருப்பது போலச் செதுக்கப்பட்டுள்ளனர்.

சுப்பிரமணியர் கோயில் என்று இன்று அழைக்கப் பெற்றாலும் இச் செப்பேட்டில் குமாரசாமி கோயில் என்று குறிக்கப்பட்டுள்ளது.

இக்கோயிலுக்குப் பிரதாபசிங் ஆட்சிக் காலத்தில் 21—3—1757 அன்று இவ்வூர் வணிகர்களான மிளகு பட்டடையைச் சேர்ந்த யாவரும் மாதம் 1க்கு 2 பொன் 5 பணம் மகமை அளிக்க வேண்டும் என்றும், கிழக்கத்தியாரும், வெல்லப் பொதிக்காரர்களும், வரத்துக்காரர்களும் மாதம் 1க்கு 4 பணம் மகமை அளிக்க வேண்டும் என்றும் ஒப்புக்கொண்டு எழுதித் தந்துள்ளனர்.

13—8—1757இல் வல்லம் பேட்டை வணிகர்களும், தஞ்சாவூரிலுள்ள தெற்குத் தெரு, வடக்குத்தெரு வணிகர்களும் வல்லம் மகமை மறுமுலையில் பொதி 1க்கு

மதுரை விசம் பணம் மகமை அளிக்க வேண்டும் என்றும், இதே செப்பேட்டின் இறுதியில் எழுதப்பட்டுள்ளது.

தஞ்சாவூர்ச் சக்கரம் ஒன்றுக்கு 2⅞ (இரண்டே காலே மூனு விசம்) பணம் தஞ்சாவூரில் வழக்கில் இருந்துள்ளது. 8 பணம்-மதுரைச் சக்கரம் என வழங்கியது. எனவே மதுரை விசம் என்பது ½ பணம் போலும். மறுமூலை என்பது வல்லம் செல்லும் தஞ்சை வழியைக் குறிப்பதாகலாம்.

இச்செப்பேட்டின் தொடக்கத்தில் தஞ்சையை ஆட்சிபுரிந்த அரசர்களைப் பற்றிக் கூறுமிடத்தில் இராமபத்திர நாயக்கர் பெயரும் கூறப்படுகிறது.[1] தஞ்சை நாயக்க மன்னரில் இரகுநாத நாயக்கருக்குப் பின்னர் (1600-1640) விசையராகவ நாயக்கரே (1640-1673) ஆட்சி புரிந்ததாகக் கூறப்படுகிறது. எழுதப்பெற்ற வரலாற்றில் இராமபத்திர நாயக்கர் அரசு புரிந்ததாக இல்லை.

இரகுநாத நாயக்கரின் மூத்த மகன் இராமபத்திர நாயக்கர் என்றும், இளைய மகன் விசயராகவ நாயக்கர் என்றும் 'ரகுநாத நாயக்காப்யுதயமு' என்ற தெலுங்கு நூல் கூறுகிறது. இரகுநாத நாயக்கரின் ஆட்சிக்கு வராத மூத்த மகன் இங்கு அரசர் வரிசையில் கூறப்படுவது ஆய்வுக்குரியது. இளையவரான விசயராகவ நாயக்கர் தம் அண்ணன் இராமபத்திர நாயக்கரைக் கொன்று பட்டத்திற்கு வந்தார் என்ற கருத்தும் உண்டு.

## செப்பேடு

முதல் பக்கம்

1 உ சுபமஸ்த்து ஸ்ரீமன் மகா மண்டலேசுபரன் அரியரா விபா
2 டன் பாஷைக்கு தப்பு வராத கண்டன் மூவராய கண்டன் கண்ட
3 னாடு கொண்டு கொண்ட னாடு குடாதான் பாண்டிமண்டலத் தாப்பா
4 னாசாரியன் சோழமண்டல பிறிதிஷ்ட்டாசாரியன் எம்ம
5 ண்டலமும் ஈழமும் கொங்கு மல யாழ்ப்பாணமும் திறை கொ

---

1. அச்சுதப்ப நாயக்கர் (1560 - 1600)
   |
   இரகுநாத நாயக்கர் (1600 - 1640)
   |
   இராமபத்திர நாயக்கர் — விசயராகவ நாயக்கர் (1640 - 1673)

6 ண்டருளிய ராசாதி ராசன் ராச பரமேசுரன் ராச மாத்தாண்
7 டன் பின் சோழ ராசாக்கள் ராச்சியபாரம் பண்ணப்பட்ட பி
8 ன்ம்பு அச்சுதப்ப னாயக்கர் ரெகுனாத னாயக்கர் ராமபத்தர னாய
9 க்கர் விசையராகுவ னாயக்கர் றாச்சியபாரம் பண்ணப்பட்ட பின்
10 ம்பு ஸ்ரீமது ரா.யேகோசி மகராசா சாயபு அவர்கள் ரா.சக
11 சி மகராசா சாயபு அவர்கள் சகோதர மான்சையராண சரபோ
12 சி மகராசா சாயபு அவர்கள் துக்கோசி மகராசா சாயபு அவ
13 ர்கள் ராச்சிய பாரபாரம் பண்ணப்பட்ட பின்பு ரா. பிறதாப சி
14 ங்கு மகாராசா சாயபு அவர்கள் ராச்சிய பரிபாலனம்
15 பண்ணப்பட்ட னாளில் தளாக்கர்த்தம்க் காறுபாறு ரா.
16 மனோசி செகதாபம் அப்பா அவர்கள் காறுபாறு பண்ணப்
17 பட்ட னாளில் சாலியவாகன சகாத்தம் 1679; கலியுக
18 சகாத்தம் 4858; யிதன்மேல் செல்லானின்ற தாது ஹூ
19 பங்குனி மீ 12 உ சோமாவாற னாள் ரேவதி நட்ஷத்திம் அ
20 யிந்திர னாம யோகம் யிந்த சுபதினத்தி யிந்த வேளையில் தம்
21 மா சாதனம் பண்ணி குடுத்தோம் மேலக்கோட்டை வாசல் கு
22 மாற சுவாமி வள்ளியம்மை தெய்வானைக்கு ராக்காலக் கட்ட
23 ளைக்கு முளகு பட்டடை பலற் அனைவரும்ப் பண்ணின தற்
24 ம்மம் மாசம் ஒண்ணுக்கு பொன் 2 பணம் 5 யிதுக்கு அபிஷேகம்
25 நெய்வேத்யம் திருமாலை திருவிளக்கு யிதுக்கு அனைவரு
26 ம் சம்மதிச்சு பண்ணி குடுத்தோம் கிழக்குத்தியார் வெ
27 ல்லப் பொதிக்கார மூக்கு செட்டி முத்து செட்டி சின்னா செ
28 ட்டி வரத்துக்கார அனைவரும் குமார சுவாமிக்கு மாசம் ஒண்
29 ணுக்கு நாலு பணம் பூசை நெயிவேத்தியம்த்துக்கு தற்
30 ம்ம சாசனம்ப் பண்ணி குடுத்தோம் இந்த தற்ம்மங்
31 களெ யாதாமொருவன் விகாதம் பண்ணுரவன் கெ
32 ங்க கரையிலேக் கார்பசுவைக் கொண்ண தோஷ
33 த்திலே போகக் கடவேறாகவும்ம் துலுக்கரிலே யாதா
34 மொருவன் விகாதம் பண்ணுரவன் மக்காவிலே
35 பண்ணியை கழுத்தை அறுத்த தோஷத்திலே போ
36 வார்கள் யீசுர ஹூ ஆவணி மீ 1 உ சனி வாரம் பூச நஷ்ச்ச
37 திரத்தில் வல்லம் பேட்டை பலர் வடக்குதெருக்கு தெரு பலர
38 னவரும் தஞ்ச நகரத்தில் மேலக்கோட்டை வாசலில் குமார
39 சுவாமி வள்ளியம்மை தெய்வானை அபிழேக நெயிவேத்தி
40 யத்துக்கு வல்லத்து மகமையில் மறுமுலையில் பொதி 1க்கு மதி
41 ரை வீசம் பண தற்மம் பண்ணி குடுத்தோம் யிந்தபடிக்கு வடக்குெ
42 தரு குப்பி செட்டியார் பழனி செட்டியார் அடைக்க செட்டி வினைதீ

**இரண்டாம் பக்கம்**

43 த்தா செட்டியார் அனவரும் தெக்குதெரு அம்பலவாண செட்டியார்
44 ராம செட்டி அடைக்க. செட்டி மதிரை செட்டியார் சிவந்திலிங்
45 க செட்டியார் ராசப்ப செட்டியார் அனவரு இந்தபடிக்கு வடக்குதெரு
46 தெக்கு தெரு பலர் அனவரு சம்மதிச்சு குமாரசுவாமிக்கு தற்மம் ப
47 ண்ணி குடுத்தோம்

# X. திருமக்கோட்டைச் செப்பேடு

இருக்கும் இடம் : மன்னார்குடி வட்டம் திருமக்கோட்டை
ஞானபுரீசுவரர் கோயில்
அரசர் : சரபோசி
காலம் : 1711—1729
மொழி : தமிழ்
அளவு : 33.5 செ.மீ. × 21.2 செ.மீ.

## அமைப்பும் செய்தியும் :

செப்பேட்டின் மேல்பகுதி நடுவில் இத்தலத்துச் சிவபெருமான் ஞானபுரீசுவரர் சிவலிங்கத் திருமேனி வடிவில் காட்டப்பட்டுள்ளார். முனிவர் ஒருவர் மலர் தூவிச் சிவலிங்கத்தை வழிபடுவது போல் வரைகோட்டு ஓவியம் வரையப்பெற்றுள்ளது. இச்சிற்பம் பாரிசாத மரத்தின் அடியில் சிவலிங்கத்தை எழுந்தருளச் செய்து வசிட்ட மாமுனிவர் இவ்வூரில் பூசை செய்தார் என்ற இத்தலத்தின் புராணக் கருத்தைக் குறிப்பதாக இருக்கலாம். சிவலிங்கத்தின் எதிரில் நந்தி உள்ளது.

இச்செப்பேட்டை வரைந்தவர் காலக்குறிப்பைத் தவறாக எழுதியுள்ளார். சாலிவாகன சகம் 1471 (கி.பி. 1549) என எழுதப்பட்டுள்ளது. இக்காலம் சரபோசி யின் ஆண்டுக்கு மிக முற்பட்டது. செப்பேடு முதல் சரபோசியின் காலத்தைச் சேர்ந்த தாக இருக்கலாம்.

இச்செப்பேட்டில் இக்கோயிலுக்குரிய மூன்று கொடைச் செய்திகள் தனித் தனியாகக் கூறப்பட்டுள்ளன.

1. சரபோசி மன்னர் ஆட்சிக் காலத்தில் பட்டுக்கோட்டைச் சுபாவைச் சேர்ந்த மதுக்கூர்ச் சீமையில் பெரியகோட்டை மாகாணத்தில் கானு சாயபு, சிங்க ராச பண்டிதர் ஆகியோர் திருவாகம் செய்யும்போது அப்பகுதியில் உகந்தாச்சியா பிள்ளை என்பவர் அபாலுதாராக இருந்தார்.

அப்பெரியகோட்டை மாகாணத்துக்கு உட்பட்ட ஆவிக்கோட்டை, கழிச்சாங் கோட்டை, உலையக் கொன்றம், கணியா குறிச்சி, சொக்கநாத நல்லூர் ஆகிய ஐந்து ஊர்களின் குடியானவர்கள், ஊர் நன்செய் புன்செய் விளைவில் கலத்துக்கு நாழி நெல் மெய்க்குநாத சுவாமிக்கு அளிப்பதாக எழுதித் தந்துள்ளனர். மேற்கண்ட ஊர்களுக்கு முறையே, நல்லவ நாடன், கலிக்க நாடன்; கஞ்சமலைத் தேவர், சிதம்பரத் தேவர்; குண்ணப்ப தேவர்; வாலாமுத்து தேவர், நல்லகுட்டித் தேவர்; ஆதியப்ப தேவர், திருமலைக் கொழுந்தா பிள்ளை, குப்பத் தேவர், லெட்சுமணத் தேவர், அய்யா முதலியார் ஆகியோர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர்.

2. வாவாசிகோட்டை ஆகாசன் சேருவைகாரர் மகன் உடையப்பன் சேருவைகாரர், இரகுநாதன் சேருவைகாரர் இருவரும், ஊரவர்களும் மெய்க்குநாத சுவாமியின் அர்த்தசாமக் கட்டளைக்குக் கிராம விளைவில் நூறு கலத்துக்கு எட்டு மரக்கால் மூன்று நாழி நெல் வீதம் அளிப்பதாக ஒப்புக்கொண்டு செப்பேடு வெட்டித் தந்துள்ளனர். ஊர்க்கணக்கு வைத்தியநாதப் பிள்ளை இதில் கையொப்பம் இட்டுள்ளார்.

3. கோவிந்த நத்தத்திலிருக்கும் திரும தேவர் மகன் கூத்தப்பெருமாள் தேவர்; இராம தேவர் மக்கள் லெட்சுமத் தேவர், அடைக்கத் தேவர், நாராயணத் தேவர், இராமலிங்கத் தேவர் ஆகியோர் சித்தி விநாயகப் பிள்ளையாருக்கு நிலக் கொடை அளித்துச் செப்பேடு வெட்டிய விவரம் கூறப்பட்டுள்ளது. 2000 குழி நிலம் கொடையாக அளிக்கப்பட்டது.

விநாயகருக்கு நாள்தோறும் நெய்வேத்தியத்துக்கு இருநாழி அரிசியும், வியாழக்கிழமை தோறும் நல்லெண்ணெயும், திருமஞ்சனத் திரவியம் மாதம் ஒரு சேரும், திருவிளக்குக்கு எண்ணெயும் அளிக்கவேண்டும் என்றும் எழுதப்பட்டுள்ளது.

## செப்பேடு

முதல் பக்கம்

*1 சாலியவாகந சகாத்தம் 1471க்குமேல் செல்லாநின்ற கீல*
*2 க வருழம் தைய் மாதம் 10 ம் உ திருமேற்கோட்டை சுவாமியார் மெய்*
*3 க்குனாத சுவாமியாருக்கு ராசமானிய ராயஸ்ரீ சரபோசி மகாராச சாய*
*4 பு அவர்கள் சீமையில் பட்டுக்கோட்டைச் சுபையில் மதுக்கூர்*
*5 சீமையில் பெரியகோட்டை மாகாணம் ராசஸ்ரீ கானு சாயபு*
*6 அவர்கள் ராசஸ்ரீ சிங்கராச பண்டிதர் அவர்கள் அபாலுதார் உகந்தா*
*7 ச்சியா பிள்ளை குடியானபேர்கள் தற்மத்துக்கு தாம்புர சாதனம்*
*8 பண்ணிக் குடுத்தபடி எங்கள் மாகாணத்தில் ஆவிக்கே*
*9 காட்டை கழிச்சாங் கோட்டை உலையக் கொன்றம் கணியா*

10 குறிச்சி சொக்கநாத நல்லூர் யிந்த அஞ்சு கிறாமமும் நஞ்
11 ச புஞ்சை கண்டுமுதலுக்கு அரமனைக்கும் குடிக்கும் பெ
12 பாதுவிலே கலத்துக்கு நாழியும் குடுத்து சந்திரா்தித்த
13 ர் உள்ளவரைக்கும் நாங்களே நடப்பிக்கக் கடவேராகவு
14 ம் இயிந்தப்படிக்கு யிந்த தற்மத்துக்கு பரிபாலம் பண்ணி
15 ந பேருக்கு காசியிலே அன்னதானம் பண்ணிந பலம்
16 அசுபமேதி யாகம் பணிந பலனும் உண்டு இந்த தற்மத்துக்
17 கு யிந்த தற்மத்தை யாதொருவன் விக்கினம் பண்ணிநானாகி
18 ல் அவன் கெங்கைக் கரையிலே காராம் பசுவெ கொ கொன்
19 ற தோழத்திலே போவான் யிந்தபடிக்கு அபாலுதார் உகந்தா
20 ச்சியா பிள்ளை உலையக் கொன்றம் குண்ணப்ப தேவர்
21 ஆவிக் கோட்டை நல்லவ நாடன் கலிக்க நாடன் கணி
22 யா குறிச்சி வாலாமுத்து தேவர் நல்லகுட்டி தேவர்
23 கழிச்சாங்கோட்டை கஞ்சமலை தேவர் சிதம்பர தேவர் சொக்க
24 நாத நல்லூர் ஆதியப்ப தேவார் திருமலைக் கொழுந்தா பிள்ளை
25 குப்ப தேவர் லெட்சுமண தேவர் அய்யா முதலியார் உ கீலக
26 வருழம் மார்கிழி ௴ 10 உ திருமெய்கோட்டை யீசுரர்
27 கோயில் மெய்க்குநாத சுவாமியாருக்கு வாவாசி கோட்
28 டை ஆகாசன் சேருவைகாறர் அவர்கள் குமாறன் உடை
29 யப்பன் சேருவைகாறர் அவர்கள் ரெகுநாதன் சேருவை
30 காறர் அவர்கள் ஊரு அவர்கள் அற்தசாமக் கட்டளைக்
31 கு தற்ம சாதநப்பட்டையம் குடுற்தபடி எங்கள் கிறாமம்
32 கண்டுமுதல் நஞ்சை பிஞ்சைக்கும் அரமனைக்கும்
33 குடிக்கும் பொதுவிலே நூத்திக் கலத்துக்கு எட்டு மாக்க
34 ால் முந்நாழி பத்திக்கொண்டு அற்தசாமக் கட்டளை நட
35 ப்பிக கடவோராகவும் யிந்தபடிக்கு ரெகுநாதன் சேருவை

இரண்டாம் பக்கம்

36 காறர் அவர்கள் ஊரு அவர்கள் சொல்படிக்கு ஊரு கண
37 க்கு வயித்தியனாத பிள்ளை இந்த தற்மத்தை யாதாமொருவன்
38 பரிபாலநம் பண்ணினவர்கள் காசியிலே அசுபமேதி யாக
39 ம் பண்ணின பலன் உண்டு இந்த தற்மத்தை யாதொ
40 ருவன் விகாதம் பண்ணிநானாகில் அவன் கெங்கைக் க
41 ரையிலே காராம்பசுவைக் கொண்ண தோழத்திலே போவ
42 ான் உ ஸ்ரீமுக ஷு ஆடி ௴ 2 உ திருமக்கோட்டை ஈசுரன் கோவில் கட்ட
43 ளையாருக்கு கோவிந்த நத்தலிருக்கும் திரும தேவர் குமாரன் கூத்தப் பெரு
மாள் சே

44 தவர் ராம தேவர் குமாரன் லெச்சும தேவர் அடைக்க தேவர் னாறாயணத் தேவர் ராம

45 லிங்க தேவர் உள்பட்டாரேன் தற்ம சாதனப் பட்டையம் குடுத்தபடி யெங்களூர்

46 சித்தி வினாயகப் பிள்ளையாருக்கு பூசை நெயிவேத்தியத்துக்கு னாங்கள் பிஞ்சை

47 யில். நிலம் விட்டது சந்தைவெளி குளத்துக்கு கிழக்கு தென்புரையில் யெல்

48 லைக்கு மேற்கு பாலையக்கோட்டை யெல்லைக்கு வடக்கு யிருவத்து னா

49 லடி கோலாலே குளி 2000 இந்த ரெண்டாயிரங் குழியும் பயி

50 ர் இட்டு குடிவாரம் குடியான பேர்க்கு விட்டு மேல்வாரம் அனு

51 பவிச்சுக் கொள்ளவும் சந்திர சூரியாள் உள்ள மட்டுக்கும் அனு

52 பவிச்சுக் கொள்ளவும் ராசஸ்ரீ பிள்ளைப் பெருமா பிள்ளை னா

53 ளையில்ப் பண்ணினது பிள்ளையாருக்கு தினம் இ

54 ரு நாழி அரிசி நெயிவேத்தியமும் சுக்கிரவார வட்டம்

55 நல்லெண்ணையும் திருமஞ்சன திரவியம் மாதம் ஒரு சே

56 ர் திருவிளக்கெண்ணையும் குடுத்து பூசைநெயி நெ

57 யிவேத்தியம் பண்ணிவிக்கிறது இந்த தற்மத்

58 தை பரிபாலனம் பண்ணினபேர் அசுவமேத ய

59 ாகம் பண்ணின பலத்தை அடைவார்கள் இந்

60 த தற்மத்துக்கு யாதாமொருவன் விகாதம்

61 பண்ணினவன் கெங்கைக் கரையிலே

62 காராம் பசுவைக் கொண்ண தோழத்திலே

63 போவான் உ சிவமயம் உ சித்தி வினாயகன் து

64 ணை உ

# அருஞ்சொல் விளக்கம்

## ( GLOSSARY )

அகிதம் — தீங்கு, கேடு, இடையூறு; 'அகுதம்' என்றும் எழுதப் பெறும் ; 'விகாதம்' என்பதும் இதுவே.

அங்கணம் — இரண்டு தூண்களுக்கு இடைப்பட்ட பகுதி. இது 'முற்றம்' என்றும் வழங்கப்பெறும். 72 சதுர அடி கொண்ட இடம் என்றும் கூறுவர். பத்து முழத்தளவு என்ற கருத்தும் உண்டு.

அசேஷ வித்துவ மகா சனங்கள் — கற்றறிந்த பிராமணர் எல்லோரும் ; பின்னர் இச்சொல் அக்கிரகாரத்தில் உள்ள பிராமணர் அனைவரையும் குறித்தது.

அஞ்சுசாதி பஞ்ச கம்மாளத்தார் — கம்மாளர் வகுப்பின் ஐந்து பிரிவினர். தட்டார், கன்னார், சிற்பர், தச்சர், கொல்லர். இவர்கள் 'அஞ்சு பஞ்சாளத்தார்' எனவும் 'பஞ்சாளர்' எனவும் குறிக்கப்பெறுவர்.

அட்டஅயிசுவரியம் — பெண், ஆடை, அணிகலன், உணவு, தாம்பூலம், வாசனைப் பொருட்கள், பாட்டு, பூ அமளி என்றும் ; இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, தானியம், வாகனம், அடிமை என்றும் கூறப்பெறும் எட்டுவகைச் செல்வங்கள். இவை வேறு வகையாகவும் தொகுத்துக் கூறப்பெறும்.

அட்டபந்தனம் — குங்கிலியம், சுக்கான்கல், தேன்மெழுகு, செம்பஞ்சு, மையரக்கு, கொம்பரக்கு, நற்காவிக்கல், எருமை வெண்ணெய் ஆகிய எட்டுப் பொருள்களையும் ஏற்ற எடைப்படி சேர்த்து முறைப்படி அரைத்துத் தயாரிக்கப்பெறும் சாந்து. படி

மங்களைப் பீடத்தில் பொருத்தப் பயன்படும் ஒரு கூட்டுச சரக்கு. சிலர் மையரக்கை நீக்கிச் சாதிலிங்கம் சேர்த் துவர்.

அட்டபோகம் — நிதி, நிக்ஷேபம், ஜலம், பாஷாணம், அக்ஷிணி, ஆகாமி, சித்தம், சாத்தியம் என்று வடமொழித் தொடரால் குறிக் கப்படும் இவை முறையே புதையல், வெளிப்படையான செல்வம், நீர், கல், தற்போது உள்ள உரிமை, இனிமேல் வரக்கூடிய உரிமை, உள்ள விளைச்சல், மேற்கொண்டு வரக்கூடிய விளைபொருள் ஆகியவற்றைக் குறிக்கும் நிலந்தொடர்பான எட்டுவகை உரிமைகள்.

அதிது — இரவலர், புதியவர், விருந்தினர்.

அத்வைதம் — இரண்டற்ற தன்மை. இறைவனும் உயிரும் வேறு வேறு அல்ல ; ஒன்றே என்னும் சமயக் கொள்கை. இதனை 'ஏகான்ம வாதம்' என்றும் கூறுவர்.

அபாலுதார் — அரச ஆணைகளை நிறைவேற்றும் ஓர் அலுவலர். 'அபால்தார்', 'அபால்', 'அவால்' எனவும் குறிக்கப் பெறுவர். ஐதர் திப்பு ஆட்சியில் இவர்கள் 'அமல்தார்', 'அமுல்தார்' எனப்பட்டனர். 'ஹவில்தார்' என உருது வில் வழங்கும்.

அபிவிருத்தி — வட்டி ; சில கல்வெட்டுக்களில் 'விருத்தி அம்சம்', 'விருத் தாம்சம்' என்று கூறப்படும்.

அமரபட்சம் — தேய்பிறை.

அமீனா — ஆணையை நிறைவேற்றும் அலுவலர். பிற்காலத்தில் நீதி மன்றத்தின் தீர்ப்புக்கு இணங்கப் பறிமுதல் செய்யும் அலுவலரைக் குறித்தது.

அயிவேஜி — பொருள் ; மூலப் பொருளிலிருந்து வரும் வரும்படியை யும் குறிக்கும்.

அர்த்தசாமம் — நள்ளிரவு. கோயில்களில் நடைபெறும் இரவின் கடைசிப் பூசை 'அர்த்தசாமப் பூசை' எனப்படும்.

அளகாபுரி — செல்வத்தின் தலைவன் குபேரனுக்குரிய நகரம். தஞ்சை நகரின் மறுபெயர்.

அனாதினாமம் — பழைய பெயர் ; தொன்றுதொட்டு வழங்கி வரும் பெயர்.

அஸ்வினி மாசம் — ஐப்பசி மாதம்.

ஆகாணத்தார் 74 பேர் — அஞ்சு சாதி பஞ்ச கம்மாளரில் ஒரு குழுவினர் பெயர். பொருள் விளங்கவில்லை.

ஆசந்திரார்க்கம் — சூரிய சந்திரர் உள்ளவரை, என்றென்றைக்கும் அறம் நிலைத்து நிற்க விரும்பிக் கூறும் சொல். 'சந்திராதித்தவல்', 'சந்திராதித்தர் வரை' எனவும் எழுதப்பெறும்.

ஆயம் — தீர்வை அல்லது வரிகளைக் குறிக்கும் பொதுச் சொல். வருவாய் என்றும் பொருள்படும். வரவு, கடமை, சுங்கம் எனும் பொருளிலும் வழங்குவர்.

இடங்கை — தமிழ்நாட்டிலும் கருநாடக ஆந்திர மாநிலங்களிலும் இடைக்காலத்திலிருந்து சமுதாயம் பொதுவாக வலங்கை, இடங்கை என இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. வலங்கைப் பிரிவில் வேளாண் தொழிலோடு தொடர்புடையவர்களும், இடங்கைப் பிரிவில் மற்ற தொழில்கள் செய்பவர்களும் அடங்குவார்கள் எனப் பரவலாகக் கருத்துண்டு.

இயதாஸ்து — ஆவணம், சான்று.

இறந்து போனது — அழிந்து சிதைந்து போனது.

இறை — அரசுக்குக் கொடுக்கும் வரிகளைப் பொதுவாக உணர்த்தும் சொல்.

உதக தாரை — நீரைத் தாரையாக வார்த்துத் தானம் செய்தல். 'உதகம் பண்ணி', 'உதகம் செய்து' என்றும் வரும்.

உபய காவேரி — இரு காவிரி. கொள்ளிடத்தையும் காவேரி என அழைக்கும் வழக்கம் உண்டு. கல்வெட்டில் பல இடங்களில் அவ்வாறே குறிக்கப்படுகிறது 'ஆறிரண்டும் காவேரி அதன் நடுவே சீரங்கம்' என்பது பழம்பாடல் பகுதி.

உப்பரிகை — மேல் மாடம்.

உரி — அரை நாழி ; அரைப்படி.

உழுகுடி — பயிரிடும் குடிமக்கள்.

உறை — தானியக் குதிர் ; தானியங்களைச் சேமிக்கும் ஓர் அறை. பண்டம் பெய் அறை எனவும் கூறுவர் சில இடங்களில் இது 60 மரக்கால் கொண்ட அளவாக இருக்கும்.

ஊர் — உழவு செய்யும் வேளாண் மக்கள் குடியிருப்பு. அவ்வூரில் அமைந்துள்ள சபைக்கும் பெயராக வரும். 'ஊரு' என்றும் பிற்காலக் கல்வெட்டில் குறிக்கப்பெறும்.

எழுத்து — அறக்கொடைகளை ஒப்புக்கொண்டு இறுதியில் இடும் கையொப்பம்.

கடப்பு — கடைசிப் போகம், கடைப்பூ. குறுவை நெல்லில் ஒரு வகை என்றும் கூறுவர்.

கட்டளை — கோயிலில் ஒரு விசேடம் குறித்து ஏற்படுத்தப் பெற்ற அறக்கொடை, சந்தி.

கட்டைக் கோபுரம் — மேலே கோபுரப் பகுதி இல்லாமல் நீள்சதுர வடிவில் அமைந்த வாயில்; மராட்டியர் காலக் கட்டிட வகைகளில் இது ஒன்று.

கண்டன் — வீரம் மிகுந்தவன், தலைவன், நாயகன்.

கண்டுமுதல் — விளைந்த மொத்தத் தானியம்.

கம்பெனி அடி — கிழக்கிந்தியக் கம்பெனியாரின் நீட்டலளவை முறை. 1837ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் இம்முறை குறிக்கப்பட்டுள்ளது.

கரம்பை — தரிசு அல்லது பாழ்நிலம். வண்டல் மண் பூமியும் இவ்வாறு குறிக்கப்பெறும்.

கருநாடக அடி — தஞ்சைப் பகுதியில் புழங்கிவந்த பழைய நீட்டல் அளவை முறை.

கவில் — நிலக் குத்தகை ஒப்பந்தம். இந்த ஒப்பந்த முறைப்படிப் பெற்ற நிலத்தை அனுபவிக்கலாம்; ஆனால் விற்க முடியாது.

கவீசுவராள் — பாடல் இயற்றும் புலவர்.

காணியாட்சி — நிலம், கோயில், வழிபாடு இவற்றைப் பரம்பரையாக அனுபவிக்கும் உரிமை. 'காணியாச்சி' என்றும் கூறப்படும்.

காராம் பசு — கறவைப்பசு; தெய்வப்பசு; நாக்கும் மடியும் கருமையாக உள்ள ஒருவகை உயர்ந்தவகைப் பசு; மறு நிறம் கலவாத கறுத்த பசு. இதற்குத் தீங்கு செய்வது மிகவும் பெரிய பாவமாகக் கருதப்பட்டது.

காரியத்துக்குக் கர்த்தர் — ஒருவருக்காகச் செயல்படும் மற்றவர் ; 'ஏஜண்டு' என்று பிற்காலக் கல்வெட்டில் காணப்படும். 'காரியத்துக்குக் கடவதானவர்' என்றும் குறிக்கப் பெறுவர்.

கார் — ஐப்பசி, கார்த்திகையில் அறுவடையாகும் குறுவை நெல்; மழைக் காலத்தில் பயிர்செய்து அறுவடையாகும் நெல். அந்நெல் அறுவடையாகும் காலத்திற்கும் பெயராகும்.

காவல் — கிராமத்தைக் காவல் காப்பவர் ; தலையாரியையும் குறிக்கும். சில இடங்களில் அவர்கள் அனுபவிக்கக் காவல் மானியம் உண்டு.

காறுபாறு — மெய் காப்புச் செய்யும் அலுவலர் ; 'கார்பார்', 'கார் பாரி' என்றும் குறிக்கப்பெறும்.

கிருஷ்ணபட்சம் — தேய்பிறை.

கில்லேதார் — கோட்டைத்தலைவர் (கில்லா - கோட்டை).

குருவாரம் — வியாழக்கிழமை.

குழி — ஒரு கோல் நீளம் ஒரு கோல் அகலம் உள்ள சதுர நிலம் ; 12 அடிச் சதுரநிலம் ; 144 சதுர அடி முதல் 576 சதுர அடி வரை பல்வேறு இடங்களில் பல்வேறு வகையாக வழங்கப்பெறும்.

கூட்டு மண்டபம் — சுவர் அல்லது தூண்களிலிருந்த கோபுரம் போல் கூட்டிக் கட்டும் மண்டப வகை ; நாயக்கர், மராட்டியர் காலக் கட்டிட வகைகளில் ஒன்று.

கூற்றம் — வளநாட்டுக்கு உட்பட்ட நாடு போன்ற ஒரு பகுதிக்குப் பெயர்.

கைலாசவாசி — இவ்வுலக வாழ்வை நீத்துக் கைலாசத்தில் வசிப்பவர் ; இறந்தவர்.

கோகத்தி — பசுக்களைக் கொல்வதால் வரும் பாவம்.

கோட்டை — 24 மரக்கால் கொண்ட ஓர் அளவை ; 21 மரக்கால் என்றும் கூறுவர்.

சகாத்தம் — ஆண்டுக் கணக்கு; 'சகாப்தம்' எனவும் கூறப்படும்.

கலியுகம் — கி. மு. 3101இல் தொடக்கம்

சாலிவாகனம் — கி. பி. 78இல் தொடக்கம்.

| | |
|---|---|
| கொல்லம் | — கி. பி. 824இல் தொடக்கம். |
| ஹிஜ்ரி | — கி. பி. 621இல் தொடக்கம். |
| சுகர்சன் | — கி. பி. 599இல் தொடக்கம். |

சதா சேவை — எப்போழுதும் நிரந்தரமாகப் பணிவிடை செய்பவர்; 'சதாசேர்வை,' 'சதாசேருவை' என்றும் குறிக்கப்படும்.

சதுர்த்தி — 4ஆம் திதி.

சதுர்த்தெசி — 14ஆம் திதி ; நாள். 'சதுர்தசி' எனவும் குறிக்கப்படும்.

சத்த சமுத்திரம் — ஏழு கடல்; உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப் பஞ்சாறு, தேன் கடல்.

சந்தி — குறிப்பிட்ட சிலர் வைத்த அறக்கொடைகளைக் கொண்டு அவர்கள் பெயரால் ஆலயங்களில் நடைபெறும் பூசைக் கட்டளை. (ஆகவராமன் சந்தி போல).

சந்தை — குறிப்பிட்ட நாளில் பலதரப்பட்ட பொருட்கள் ஒரே இடத்தில் விற்கும் இடம்.

சபாபதி — நடராசர்.

சப்தமி — ஏழாம் நாள்.

சம்பா — ஒருவகை நெல்; நீண்ட போக நெல். 'பசானம்' என்பதன் மறுபெயர்.

சம்வத்சரம் — ஆண்டு.

சர்கேல் — அரசில் உயர் அலுவலர்; தலைமை அமைச்சர், திவான் பதவிக்குச் சமம் ஆனது,

சறுவ மான்யம் — எந்தவிதமான தீர்வையும் இல்லாமல் வழங்கப்பெறும் நிலம். முற்றூட்டு ; 'சர்வ மானியம்' என்றும் எழுதப் பெறும்.

சாங்கமாக — ஒழுங்காக; முழுமையாக என்றும் பொருள்படும்.

சாவடி — விசயநகரப் பேரரசின் பெரும் ஆட்சிப்பிரிவின் பெயர்; 'உசாவடி' எனவும் கூறுப்பெறும்.

சிகரம் — கோபுரம், விமானங்களின் உச்சி.

சிட்டா — கணக்கு எழுதும் ஏடு.

சிம்ம மாதம் — ஆவணி மாதம்.

சிரேஸ்ததார் — ரெசிடெண்டு அலுவலக அலுவலர் ; சிரஸ்தார் எனவும் கூறப்பெறுவர்.

சிலா லிகிதம் — கல்லெழுத்து ; 'சிலா சாசனம்', 'சிலா சாதனம்' என்வும் எழுதப் பெறும்.

சிறாவன மாதம் — ஆவணி மாதம்.

சீரணோத்தாரம் — அழிந்தவற்றைப் புதிதாகத் திருப்பணி செய்தல்.

சீர்மை — நாட்டின் ஒரு பகுதிப் பெயர் 'சீமை' எனவும் எழுதப் பெறும்.

சுக்கிர வாரம் — வெள்ளிக்கிழமை.

சுக்ல பட்சம் — வளர்பிறை.

சுதந்திரம் — கிராமத் தொழிலாளர்கட்குச் சம்பளத்திற்குப் பதிலாக அளிக்க வேண்டிய நெல், சோறு போன்ற உரிமை ; விருப்பம்போல் அனுபவித்தல். 'சுவந்திரம்' என்றும் கூறப்படும்.

சுபேதார் — சுபா எனப்படும் பகுதியின் தலைவர். 'சுபயதார்' என்றும் குறிக்கப் பெறுவார். மராட்டியர் காலத்தில் பட்டுக் கோட்டை, மன்னார்குடி, மாயவரம், கும்பகோணம், திருவையாறு என 5 சுபாக்கள் இருந்தன.

சேரி — மக்கள் சேர்ந்து வாழும் இடம். பிற்காலத்தில்தான் தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் பகுதியைக் குறித்தது. பழங் காலத்தில் பார்ப்பனச்சேரி, யவனச்சேரி என்றும் கூறப் பட்டன.

சேது — இராமேசுவரம் செல்லும் பாலம் ; ஆகுபெயராக அவ் வூர்க்கு ஆயிற்று.

சோமவாரம் — திங்கட்கிழமை.

தட்டிமகால் — மாடுகள் இருக்கும் இடம் ; மாட்டுக் கொட்டில்.

தளகர்த்தம் — படைத்தலைமை.

தளவாய் — படைத்தலைவர்.

தனியூர் — சோழர் ஆட்சிக்காலத்தில் தன்னாட்சி உரிமை பெற்றுத் தனி உறுப்பாக விளங்கிய பெரிய ஊர்.

| | |
|---|---|
| தனுர் மாதம் | — மார்கழி மாதம் |
| தாம்பிர சாதனம் | — செப்பேடு ; 'தாமிர சாசனம்' எனவும் குறிக்கப் பெறும். |
| தியாகராசர் | — சிவபெருமான் பார்வதி தேவி இடையே முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள சோமாஸ்கந்த வடிவே தியாகராசர் வடிவம். முந்தைய பெயர் வீதிவிடங்கர், |
| திரிதியை | — மூன்றாம் திதி ; மூன்றாம் நாள். |
| திரியோதெசி | — பதின்மூன்றாம் திதி ; திரயோதசி எனவும் கூறப்படும். |
| திருமாளிகைப் பத்தி | — கோயில் திருமதிளை ஒட்டி உட்புறமாக அமைந்துள்ள கட்டிடப்பகுதி |
| திவான் | — முதலமைச்சர். |
| திறப்பு | — அரசின் வரிக்கு உட்பட்ட நிலம். |
| தினமானம் | — நாள்தோறும். |
| தெட்சணம் | — தெற்கு. |
| தெற்றம் | — ஈகை ; 'தெத்தம்,' 'தத்தம்' எனவும் எழுதப்பெறும். |
| துவாதெசி | — பனிரண்டாம் நாள். |
| நரபதி | — மனிதர்களுக்குத் தலைவர் ; அரசர் ; காலாட்படையின் தலைவர் ; விசயநகர அரசர்கள் வைத்துக் கொண்டதொரு பட்டப்பெயர், அசுவபதி, கஜபதி போன்றது. |
| நாகபாசத்தார் | — கோயில் இசைக் கலைஞர்களைக் குறிக்கும் பொதுப் பெயர். |
| நாழி | — ஒரு படி. |
| நாழிகை | — 24 நிமிடம் கொண்ட ஒரு நேர அளவு. |
| நித்யோத்சவம் | — நாள்தோறும் நடைபெறும் திருவிழா. |
| பசானம் | — நீண்ட காலப்பயிர் ; சித்திரை மாதம் அறுவடையாகும் நெல். |
| பச்சிமம் | — மேற்குத்திசை. |
| பஞ்சநதம் | — திருவையாறு. |
| பஞ்சமி | — 5ஆம் நாள். |

| | |
|---|---|
| பஞ்ச லோகம் | — ஐந்து வகை உலோகங்கள் ; பொன், வெள்ளி, செம்பு, ஈயம், இரும்பு. இதனை ஐம்பொன் என்றும் கூறுவர். |
| பட்டடை | — உழவு தவிர்ந்த மற்றைய தொழில்களும் வணிகமும் செய்யும் குழு. 'செட்டி பல பட்டடையள்' எனத் தியா கேசர் குறவஞ்சியும், 'செட்டியரும் பட்டடையள்' என வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சியும் கூறும். |
| பட்டயம் | — செப்பேடு. |
| பள்ளிப்படை | — இறந்தோர் நினைவுச் சின்னம் ; அரசர், அரசியர், குறு நிலத் தலைவர் போன்ற பெருமக்கள் இறந்தால் நினை வாக எழுப்பப்பெறும் கட்டிடம். |
| பற்கானா | — பல ஊர்கள் சேர்ந்த ஒரு பகுதி. |
| பக்ஷோத்ஸவம் | — 15 நாட்களுக்கு ஒருமுறை நடைபெறும் விழா. |
| பாண்டுரங்கர் | — மராட்டிய மாநிலம் பண்டரிபுரத்தில் எழுந்தருளியுள்ள விட்டோபா என்னும் இறைவன் பெயர். |
| பாரிசம் | — பக்கம். |
| பால்குணம் | — பங்குனி மாதம். |
| பாஷைக்குத் தப்பு வராதவர் | — சொன்ன சொல் தப்பாதவர் ; சொன்ன சொல்லுக்கு எதிர்ச்சொல் இல்லாதவர். |
| பிச்சை முட்டி | — கைப்பிடியுள் அடங்கும் சோற்றினை அனைவருக்கும் அளித்தல்; பிடியரிசி அளித்தல். |
| பிரதிநாமம் | — வேறு பெயர். |
| பிரதோஷம் | — திரயோதசி திதியில் பொழுது அத்தமிக்க 3¾ நாழிகை முன் தொடங்கி, அத்தமித்து 3¾ நாழிகை வரையுள்ள நேரம். |
| பிரமத்தி | — பிராமணரைக் கொன்றால் வரும் பாவம். |
| பிருத்விராச்சியம் | — மண்ணுலகை ஆளுதல்; (பிருத்வி-நிலம்) |
| புஷ்ய மாதம் | — தை மாதம்; 'பௌசே மாதம்' எனவும் குறிக்கப்பெறும். |
| பூருவ பட்சம் | — வளர்பிறைப் பக்கம். |
| பூறுவம் | — கிழக்குத் திசை. |

| | |
|---|---|
| பூஸ்திதி | — செல்வம். |
| பேட்டை | — நகரத்தில் வணிகப்பகுதி ; சந்தை கூடுமிடம். |
| மகமை | — வணிகர்களும் மற்றவர்களும் தாமாகவே விரும்பித் தம் வருவாயிலிருந்து ஒருசிறு பகுதியைக் கொடையாகக் கொடுத்தல். |
| மத்தியார்ச்சுனம் | — இடைமருது; திருவிடைமருதூர். ஆந்திர நாட்டு மல்லி கார்ச்சுனம் தலை மருது என்றும், பாண்டி நாட்டுத் திருப் புடை மருதூர் கடை மருது எனவும் கூறப்பெறும். |
| மத்தியஸ்தர் | — நீதி வழங்கும் அலுவலர் ; 'மத்திசம்' எனவும் கூறப்பெறு வார். |
| மயேசுர பூசை | — சிவனடியார்க்கு அன்னமிடல். |
| மரவடை | — பயன்தரும் மரங்கள்; அவற்றை அனுபவிக்கும் உரிமை. |
| மாகாணம் | — மராட்டியர் ஆட்சிக் காலத்தில் சில கிராமங்கள் சேர்ந்த சிறு பகுதிக்கு வழங்கிய பெயர். 'தஞ்சை வட்டாரத்தில் கள்ளர் சமுதாயத்தில் உள் அவைக் கூட்டங்களுக்கு மாகாணக் கூட்டம் என்று பெயர்' என்று ந.மு. வேங்கட சாமி நாட்டார் கூறுவர் (கள்ளர் சரித்திரம், பக்கம் 117). |
| மார்கஷீர்ஷம் | — மார்கழி மாதம். |
| மாவடை | — கிராமத்தில் கால்நடைகளின் வருமானத்தைத் துய்க்கும் உரிமை. |
| மிராசு | — நிலம், ஆலய வழிபாடு, உத்தியோகம் இவை தொடர்பாகப் பரம்பரையாக அனுபவிக்கும் முழு உரிமை (பார்க்க : காணியாட்சி). |
| மீன ஞாயிறு | — மீனஇராசியில் சூரியன் சஞ்சரிக்கின்ற பங்குனி மாதம். |
| வங்குசம் | — வம்சம்; பரம்பரை. |
| வசந்த மண்டபம் | — தோட்டத்தின் இடையே உள்ள மண்டபம்; வசந்த விழாக் கொண்டாடும் மண்டபமும் ஆகும். |
| வடுகு | — தெலுங்கு ; வடுகத் தட்டார், வடுக மேளம் ஆகியன முறையே தெலுங்கு மொழி பேசும் தட்டாரையும், தெலுங்கு மொழி பேசுவோரின் மேளத்தையும் குறிக்கும். |
| வட்டம் | — பெரிய ஊரைச் சார்ந்த சில சிற்றூர்கள் அடங்கிய பகுதி. |

| | |
|---|---|
| வர்த்தனை | — குறிப்பிட்ட அதிகாரிகள், ஊழியர் முதலியோருக்கு மானியமாக அளிக்கப்பெறுவது. |
| வன்மீகம் | — புற்று ; வன்மீகநாதர் புற்றிடங்கொண்டார் எனப்பட்டார். புற்றில் தோன்றியவர் வான்மீகி. |
| வாரம் | — விளைச்சலில் பங்கு. |
| விபாடன் | — முறியடித்து வெற்றி பெறுபவன். |
| விருஷபாருடர் | — காளை வாகனத்தில் எழுந்தருளும் சிவபெருமான். |
| வெட்டியான் | — கிராமப் பொது வேலைகளைச் செய்பவன் ; கிராமத்தைச் சுற்றிப் பார்த்துத் தீமை நேராமல் காப்பவன். 'வெட்டி முட்டையாள்' 'வெட்டி முட்டாவாள்' என்றும் கூறப் பெறுவர். இவர்களுக்குக் கிராமத்தில் பல உரிமைகள் இருந்தன. |
| வெள்ளைக்கல் | — செங்கல்லிலிருந்து வேறுபடுத்திக் காட்டும்பொருட்டு மராட்டியர் கல்வெட்டுக்களில் கருங்கற்களையே இவ்வாறு குறிப்பர். |
| ஜயபத்திரம் | — விவாதத்தின் முடிவில் தீர்ப்பாக அளிக்கப்பெறும் வெற்றிப் பத்திரம். |
| ஜீரணம் | — சிதைவு. |
| ஜேஷ்டபத்னி | — மூத்த மனைவி. |
| ஷஷ்டி | — ஆறாம் நாள். |
| ஸஹிரண்யோதகம் | — பொன் காணிக்கையோடு நீர் வார்த்துக் கொடுத்தல். |
| ஸ்வஸ்தி ஸ்ரீ | — மங்களம் உண்டாகட்டும் ; இச்சொல் 'சுவத்திஸ்ரீ' என்றும் கூறப்படும். |

# கருவிநூற் பட்டியல்

## (BIBLIOGRAPHY)


**கல்வெட்டு மூலங்கள்**-Epigraphical Sources :

*திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டுக்கள்,* இரா. நாகசாமி, பதிப்பு, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1977.

*தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்,* தொகுதி II, தி. நா. சுப்பிரமணியம், பதிப்பு, அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை, 1954.

*நன்னிலம் கல்வெட்டுக்கள்,* ஆ. பத்மாவதி, பதிப்பு, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1979.

*Annual Report on Epigraphy,* Archaeological Survey of India, 1887-1973.

*List of Inscriptions on Tombs or Monuments in Madras* Vols. I & II by Julian James Cotton, Govt. Press, Madras, 1945, 1946.

*South Indian Inscriptions,* Vols. XVII, XXIV, Archaeological Survey of India, 1964 ; 1982.

அருஞ்சொல் அகராதிகள்-Glossary :

*அபிதான சிந்தாமணி,* ஆ. சிங்காரவேல் முதலியார், மதுரைத் தமிழ்ச் சங்கம், மதுரை, 1910.

*தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்,* தொகுதி III, பாகம் II, அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை, 1954.

*A Classified Glossary of Tamil Words with Explanatory Meaning,* by C. Sivaramaiya, progressive Press, Madras, 1908.

*Tamil Lexicon,* University of Madras, (reprint), 1982.

பிற நூல்கள் :

அரிய கையெழுத்துச் சுவடித் துறை, ''தஞ்சை மராட்டிய அரசர் மோடி ஆவணக் கருத்தரங்குக் கட்டுரைகள்'' (உருளச்சு), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1983.

அரிய கையெழுத்துச் சுவடித் துறை,''மோடித் தமிழாக்கம்''(கையெழுத்துப் பிரதி), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1982.

அனந்தபாரதி, *திருவிடைமருதூர் நொண்டி நாடகம்*, திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தானம், திருவிடைமருதூர், 1967.

இராசு, செ., *தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் - 50*, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1983.

கல்வெட்டியல் துறை, ''வேதநாயக சாத்திரியார் கையெழுத்துப் பிரதிகள்'', தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1984.

காசிநாதன், நடன., *மனோரா*, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1979.

கோவிந்தராசன், சி., ''சரபோசி செய்த பெருவேள்வி'', *தமிழ்ப்பொழில்*, துணர் 38, கரந்தைத் தமிழ்ச் சங்கம், கரந்தை, 1963.

சரசுவதி மகால் நூலகம், ''மோடித் தமிழாக்கம்'' (கையெழுத்துப்பிரதி) தஞ்சாவூர்.

சீதா, எஸ்., (பதிப்பாசிரியர்), *சிவகாமி சுந்தரி பரிணயம்*, சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1971.

தாமோதரன், இராசலட்சுமி, சீனிவாசன், *பிரகதீசுவர மகாத்மியம்*, சரசுவதிமகால் நூலகம், தஞ்சாவூர், 1985.

சீனிவாசாச்சாரி, வி., *போன்சலே வம்ச சரித்திரம்*, சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1980. (இரண்டாம் பதிப்பு)

சோமலெ, *தஞ்சாவூர் மாவட்டம்*, பாரி நிலையம், சென்னை, 1961.

மயிலைகிழார் இளவளகனார் (பதிப்பாசிரியர்), *தேவாரம் அடங்கன்முறை*, சென்னை, 1953.

ராமசேஷன், ஆர்., ''ஒருத்திநாடு'', *அரசினர் கல்வியியல் கல்லூரி ஆண்டு மலர்*, ஒரத்தநாடு, 1977-78.

வெங்கடேசன், ந., *வரலாற்றில் வில்லியனூர்*, சேகர் பதிப்பகம், சென்னை, 1979.

